வில்லிபுத்தூரார்



இயற்றிய

# மகாபாரதம்

## விராடபருவம்

உரையுடன்

வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்யரால்

ஆர். ஜீ. அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1940

விலை. 1--8—0.



# பொருளடக்கம்.



---

# முகவுரை.

அருந்தமிழறிஞர்காள்!

ஸ்ரீராமாயணத்திற் சுந்தரகாண்டம்போல ஸ்ரீமகாபாரதத்தில் மேம்படப்பாராட்டப்படுவது, விராடபருவமே யாகும்; வானம் மழைபெய்யாது வறந்தகாலத்தில் இதனைப் பக்திசிரத்தைகொண்டு நியமத்துடன் ஒரேநாளிற் பாராயணஞ்செய்வா ராயின், நாடு மழை பெய்து வளஞ்சிறக்கு மென்பது, பெரியோர் துணிபு.

இத்துணைப்பெருமைவாய்ந்த விராடபருவத்தில் நிரைமீட்சிச் சருக்கந் தவிர, மற்றைப்பகுதிகள் சென்னையூனிவர்ஸிடியாராற் பாடமாக வைக்கப்படாமையால், எனக்கு ஆசிரியன்மாரான ஸ்ரீமாந் வை. மு. சடகோபராமாநுஜாசார்யஸ்வாமிகளாலும், ஸ்ரீமாந் சே. க்ருஷ்ணமாசார்யஸ்வாமிகளாலும் அந்த மற்றைச் சருக்கங்கட்கு உரை காண வாய்க்கவில்லை.

விராடபருவந் தவிர, மற்றைப்பருவங்களெல்லாம் உரையுடன் முற்றுப்பெற்றபிறகு இதுஒன்றுமாத்திரம் உரையில்லாதிருக்குங் குறையைப் போக்கவேணுமென்ற எண்ணம் கடவுள்செயலால் என் மனத்தி லுதிக்க, இந்தப்பருவத்திலுள்ள மற்றைச்சருக்கங்கட் கெல்லாம் உரைகண்டு இந்தவிராடபருவத்தையும் முற்றுவித்தேன்: நிற்க.

இந்தவில்லிபாரதத்துக்கு முதனூலாகிய ஸ்ரீவியாசபாரதத் துள் இந்தவிராடபருவத்தில் (1) பாண்டவப்ரவேசபர்வம், (2) ஸமய பாலநபர்வம், (3) கீசகவதபர்வம், (4) கோக்ரஹணபர்வம், (5) வைவாஹிகபர்வம் என்று ஐந்து உபபர்வங்களே யுள்ளன: அவை களே, வில்லிபாரதத்தில் (1) நாடுகரந்துறைசருக்கம், (2) மற் போர்ச்சருக்கம், (3) கீசகன்வதைச்சருக்கம், (4) நிரைமீட்சிச் சருக்கம், (5) வெளிப்பாட்டுச்சருக்கம் என்ற பெயர்கொண்டு நிற் கின்றன: பெயர்மாத்திரத்தைக் கருதுமிடத்து இரண்டற்குஞ்

சிறிதுவேறுபாடு தோன்றினும், உள்ளுறையைக் கருதுமிடத்து இரண்டிலும் கூறப்படும் முக்கியமான சரிதை, ஒற்றுமைப்பட்டே யுள்ளது. ஈதொன்றும் வில்லிபாரதத்துக்கு முதனூல் வியாசபாரத மென்பதை வற்புறுத்தும்.

சிலர்கருதுவதுபோல அகஸ்த்யபட்டர்எழுதிய பாலபாரதமே இந்தவில்லிபாரதத்துக்கு முதனூல் என்னலாகாதோவெனில்,— அந்தப்பாலபாரதத்தில் மாமல்லனை வீமன் வென்ற செய்தியே கூறப்பட்டிலது. மற்றும், திரௌபதியைக் கீசகன் பற்றும்போது சூரியனுலேவப்பெற்ற ஒருகிங்கரன் கீசகனை அப்பாற்றள்ளி அவளை மீட்ட அற்புதச்செய்தியும் காணப்பட்டிலது; இவ்வாறுஎவ்வளவோ வேறுபாடுகள் இதற்கும் அதற்கும் உள்ளன: வில்லிபாரதத்துக்கும் வியாசபாரதத்துக்கும் உள்ள சிறுசிறு வேறுபாடுகள் உரையினுள் ஆங்காங்குக் காட்டப்படும்.

இந்தஉரையிலுள்ள குற்றங்குறைகளைக் கண்டறியும் பெரியோர், தமது இயற்கைநற்குணத்தாற் பொறுப்பதன்றி எனக்கும் அறிவுறுத்துவாராயின், அப்பிழைகளைத் திருத்திக்கொண்டு சமயம் வாய்க்கும்போது பலர்க்கும் அறிவிப்பேன்.

இந்தவிராடபருவத்தில் நிரைமீட்சிச்சருக்கத்துக்கு என்னாசிரியன்மார் கண்ட உரை முன்னமே என்னால் அச்சிடப்பட்டு உள்ளதனால், மற்றைப்பகுதிகளை உரையெழுதி இப்போது அச்சிடப்பட்டன: இந்தப்பணியை நான் செய்யுமிடத்து உடனிருந்து உதவியவர், யான் அச்சிட்ட வேறுபருவங்கட்கு உடனிருந்து உதவியவரான தூசி. கோ. ஜகந்நாதாசார்யர், M. A. என்பவர் ஆவர்: அன்னார்க்குத் திருமகள்கொழுநன் பலநலங்களையும் பல்குவிப்பானாக.

வில்லிபாரதம் முழுவதுக்கும் உரைகண்டுவெளியிடுதலாகிய இந்தப்பணியில் சிற்றறிவினனான எனக்குத் தோன்றாத் துணையாய்நின்றுஉதவி இடையூறின்றி இனிது முற்றுப்பெறத் திருவருள்புரிந்த திருமாலின் திருவடிகளைத் திரிகரணங்களாலும் என்றுஞ் போற்றுவேன்.

ப்ரமாதி ௵ }
தைமீ 3உ }

இங்ஙனம்
வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்யன்.

நான்காவது

# விராட பருவம்.

விராடபர்வம் என்ற வடமொழித்தொடர், விகாரப்பட்டது. விராடனது சம்பந்தமான பருவ மென்று ஆறும்வேற்றுமைத்தொகை யாகக் கொள்க. விராடராஜனதுநாடாகியமச்சதேசத்தின் இராசதானியிலே அவ்விராடராஜனைச்சார்ந்து பாண்டவர்கள் அஜ்ஞாதவாசஞ்செய்த வரலாற்றைக் கூறுகின்ற பாகம், இது. பர்வம் - கணு: கரும்பு மூங்கில் முதலியவற்றிற்கு ஏகதேசமாகிய [ஏகதேசம் - ஒருபகுதி] கணுப் போல நூலுக்கு ஏகதேசமாகிய உறுப்பைப் பருவமென்பது, உவமவாகுபெயர். "இணைந்தியல் காலை" [நன் - பத- உ௨.] என்ற சூத்திர விதியால், பர்வம் - பருவம் என வகரத்திற்குமுன் உகரம் வந்தது.

இப்பருவம் - நாடுகரந்துறைசருக்கம், மற்போர்ச்சருக்கம், கீசகன்வதைச் சருக்கம், நிரைமீட்சிச்சருக்கம், வெளிப்பாட்டுச்சருக்கம் என்ற ஐந்து சருக்கங்கள் அடங்கியது. அவற்றில்,

முதலாவது

## நாடுகரந்துறைசருக்கம்.

(பாண்டவர் விராடனுடைய மச்ச) நாட்டிலே (தம்முருவம்) மறைந்து உறைதலைப்பற்றிக் கூறுஞ் சருக்க மென்க.

### 1. கடவுள்வாழ்த்து.

அங்கையி னேமி சங்குவா டண்டோ டடற்சரா சனந்தரித் தருள்வோன், சங்கையின் மறைக ளாயிரங் களுக்குஞ் சாற்றுதற் கரியதத் துவத்தோன், கங்கையி னறலுங் காளியன் முடியுங் காளிந்திக் கரையுமே கமழும், பங்கய மலர்க ளிரவுநன் பகலும் பணிந்துபாடுதுமவன் புகழே.

(இதன்பொருள்.) அம் கையில் - (தம்முடைய) அழகிய கைகளிலே, நேமி - சக்கரத்தையும், சங்கு - சங்கத்தையும், வாள்-வாட்படையையும், தண்டோடு - தண்டாயுதத்தையும், அடல் - வலிமைபொருந்திய, சராசனம் - வில்லையும், தரித்தருள்வோன் - பூண்டிருப்பவனும்,—சங்கை இல் - கணக்கு இல்லாத, மறைகள் ஆயிரங்களுக்குஉம் - மிகப்பலவான வேதங்களுக்கும், சாற்றுதற்கு அரிய - சொல்லுதற்குமுடியாத, தத்துவத்தோன் - உண்மைப் பொருளாயிருப்பவனுமான திருமாலினுடைய, கங்கையின் அறல் உம் - கங்காநதியின் நீரும், காளியன் முடிஉம் - காளியனென்றநாகத்தின் சிரசும், காளிந்தி கரை உம் ஏ - யமுனையின்கரையுமே, கமழும் - மணக்கப்பெற்ற, பங்கயம் மலர்கள் - திருவடித்தாமரைகளை, நல் இரவுஉம் (நல்) பகல்உம் -

நல்ல இரவிலும் நல்லபகலிலும், பணிந்து - வணங்கி, அவன் புகழ் பாடுதும்- அப்பரமனுடைய திருப்புகழைப் பாடுவோம்; (என்றவாறு.)

'பணிந்து பாடுதும்' என்று காயத்தினாலும் வாக்கினாலுஞ் செய்தற்கு உரிய செயலைக் கூறியதனால், மனத்தினால்தியானித்தலும் பெறப்படும்: ஆகவே, திரிகரணங்களும் பயன்பெறுஞ்செயலைச் செய்வோமெனக் கூறியவாறாயிற்று. அவன்புகழ்பாடுதும்என்றதனால், இது வாழ்த்தாயிற்று. திருமாலின் திருவடியினின்று கங்கை தோன்றியதாதலால், அந்தக்கங்கைநீரின்மணம் அப்பிரான்திருவடியி லுள்ளதாகும். திருமால் ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தில் காளியனென்ற கொடியநாகத்தின் நீண்முடியைந்திலும் தனதுபாதங்களினானின்று நடஞ்செய்தானாதலால் அந்தக்காளியன்முடியின்மணம் அவன்திருவடிகளிற் கமழுமென்றது. க்ருஷ்ணன் தன்னுடையஇளமையில் யமுனைக்கரையில் திருவிளையாடல்கள் புரிந்ததனால் அப்பிரான்திருவடியில் அக்கரையின் மணமும் கமழுமென்க.

இதுமுதல் இருபத்தெட்டுக்கவிகள் - பெரும்பாலும் இரண்டு நான்கு ஏழாஞ்சீர்கள் மாச்சீர்களும், மற்றவை விளச்சீர்களுமாகிவந்த எழுசீராசிரிய விருத்தங்கள். (க)

2.—பாண்டவர் பன்னிரண்டியாண்டு வனவாசம் கழித்தமை.

அரவவெங்கொடியோனேவலின்படியேயைவருமாறிரண்டாண்டு
துருபதனளித்தபாவையுந்தாமுஞ்சுருதிமாமுனிகணம்பலவும்
பரிவுடன்மலரும்பலங்களுங்கிழங்கும்பாசடைகளுமினிதருந்தி
யொருபகல்போலக்கழித்தனரறிவுமொடுங்கியபுலன்களுமுடையோர்.

(இ - ள்.) வெம் அரவம் கொடியோன் ஏவலின் படி ஏ - வெவ்விய பாம்புக்கொடியை யுடையவனாகிய துரியோதனனுடைய கட்டளையின் படியே, ஆறு இரண்டு ஆண்டு - பன்னிரண்டுவருஷகாலம், ஐவர்உம் - பஞ்ச பாண்டவர்களும்,—துருபதன் அளித்த பாவைஉம் - துருபதன் (வேள்வியின் மூலமாகப்) பெற்ற பிரதிமைபோன்றவளாகிய திரௌபதியும், தாம் உம் - தாங்களும், சுருதி மா முனி கணம் பலஉம் - வேதங்களில்வல்ல சிறந்த இருடியர்கூட்டம்பலவுமாக, (இருந்து),— பரிவுடன் - மனத்திலன் போடு, மலர்உம் - புஷ்பங்களும், பலங்கள் உம் - பழங்களும், கிழங்கு உம்—, பசு (மை) அடைகள் உம் - பசிய இலைகளும், இனிது அருந்தி - இனிமையாக உண்டு,—அறிவுஉம் - விவேகமும், ஒடுங்கிய புலன்கள்உம் உடையோர் - அடங்கிய ஐம்பொறிகளையுமுடையவராய், ஒருபகல்போல கழித்தனர் - ஒருபகலைப்போலப் போக்கினார்கள்; (எ - று.)

பாண்டவர்கள் அறிவையும் அடங்கிய பொறிகளையுமுடையவராதலால், காட்டிற்கிடைத்த மலர்முதலிய உணவுகளை மனத்திருத்தியோடு உண்டு ஒருவருத்தமு மின்றி, பன்னிரண்டுவருஷங்களை ஒருநாளைக் கழிப்பதுபோலத் திரௌபதியுடனே எளிதிற்கழித்தன ரென்பதாம். காட்டில் வசித்தபோது இருடியர் கணமும் இவருடனுறைவதாயிற் றென்க. (உ)

3.—அஜ்ஞாதவாசத்தை எங்குச்செய்யலாமென்று தருமன் வினவ, அருச்சுனன் கூறலுறுதல்.

தொல்லறக்கடவுளருளுடனளித்ததோன்றறன் துணைவரைநோக்கிக்
கல்லமர்கிரியுங்கானமுமிடமாக்கழித்தனமொழிந்தனகால
மெல்லையோராண்டுமியாவருமுணராதிருப்பதற்காமிடம்யாதோ
சொல்லுமினென்றானென்றலுந்தொழுதுசுரபதிமகனிவைசொல்வான்.

(இ - ள்.) தொல் அறம் கடவுள் அருளுடன் அளித்த தோன்றல் - பழமையான தருமத்திற்கு உரிய கடவுளாகிய யமன் அருளோடு உண்டாக்கிய குமாரனாகிய யுதிட்டிரன், தன் துணைவரை நோக்கி - தன் தம்பிமாரைப் பார்த்து,— 'கல் அமர் கிரிஉம் கானம்உம் இடம்ஆ கழித்தனம் - கற்கள் பொருந்திய மலைகளையும் காட்டையும் இடமாகக்கொண்டு காலங்கழித்தோம்: காலம் - (காட்டிற்கழிக்கவேண்டிய காலவெல்லையான) பன்னிரண்டியாண்டுகளும், ஒழிந்தன - கழிந்திட்டன: எல்லை - (இனிக்கழிக்கவேண்டிய) காலவெல்லையான, ஓர் ஆண்டுஉம் - ஒருவருஷகாலமும், யாவர்உம் உணராது இருப்பதற்கு - எவராலும் அறியப்படாமல் வாசஞ்செய்வதற்கு, ஆம் - ஏற்றதான, இடம்—, யாதுஓ - எதுவோ? சொல்லுமின் - (நீங்கள்) சொல்லுங்கள்,' என்றான்—; என்றலும் - என்று (யுதிட்டிரன்) வினவியவுடனே, தொழுது - வணங்கி, சுரபதி மகன் - தேவேந்திரனருளாற்பிறந்த குமாரனாகிய அருச்சுனன், இவை சொல்வான் - இவ்வார்த்தைகளைச் சொல்பவனானான்; (எ - று.)—அருச்சுனன் கூறுவதை மேலிரண்டுகவிகளிற் காண்க.

'யாவருமுணராதிருப்பதற்காமிடம்' என்றதனால், அஜ்ஞாதவாசத்திற்கு ஏற்ற இடம் என்றவாறாயிற்று. தேவர்கட்கெல்லாம் தலைவனான இந்திரனுடைய அருளாற் குந்திதேவியினிடம் தோன்றியவனாதலால், அருச்சுனன் 'சுரபதிமகன்' எனப்பட்டான். 'தோன்றல் தன்துணைவரைநோக்கி' என்றமையால், அஜ்ஞாதவாசஞ்செய்வதற்காகத் தருமன் ஆலோசனைபுரிந்தது துணைவரைத்தவிர வேறு எவர்க்கும் தெரியாமலே யென்பது பெறப்படும்: முதனூலில், 'பன்னிரண்டுவருஷம் வனவாசஞ்செய்து கழித்தோம்: இனி, ஓரியாண்டு ஒருவருக்கும் தெரியாது கழிக்கவேண்டுமாதலால், நும்மிடத்து விடைபெற்றுக் கொள்ளுகிறோம்' என்று யுதிஷ்டிரன், உடனிருந்த முனிவர் முதலியோரிடத்து விடைபெற்றுக்கொண்டு, தாம் வசித்திருந்த ஆச்சிரமத்துக்குக் குரோசதூரம் அப்பாற்சென்று தம்பிமாருடனும் திரௌபதியுடனும் தௌமியமுனிவருடனும் இருந்து ஆலோசித்தனனென்று உள்ளது. ()

4.—இரண்டுகவிகள் - ஒருதொடர்: விராடநகரமே அஜ்ஞாதவாசஞ் செய்வதற்கு ஏற்றதென்று அருச்சுனன் தெரிவித்தமை கூறும்.

நீதியும்விளைவுந்தருமமுநிறைந்துநிதிகண்மற்றியாவையுநெருங்கி
யாதியின்மனுநூல்வழியினிற்புரப்பானவனியைமனுகுலத்தரசன்
மாதிரமுழுதுமவனபெரும்புகழ்மழவழங்குவதமாருமவ்வள்வி
வேதியர்பலருமுறைவதுமவனேவிராடர்கோன்மச்சநாடையா,

(இ - ள்.) நீதிஉம் - முறைமையும், விளைவுஉம்—, தருமம் உம் - தானமும், நிறைந்து—, நிதிகள் - செல்வங்களும், மற்றுயாவைஉம் - மற்றுமுள்ள தானியம் முதலானவைகளும், நெருங்கி—, அமரர்உம் - தேவர்களும், வேள்வி வேதியர் பலர் உம் - யாகஞ்செய்கின்ற பிராமணர்கள் பலரும், உறைவதுஉம்-வசிப்பதும், அவண்ஏ - அவ்விடத்திலேயே: (அது), - ஐயா—! விராடர்கோன் மச்சநாடு - விராடராஜனுடைய மச்சதேசமாகும்; அவனியை- அந்தப்பூமியை, ஆதியின் மனுநூல் வழியினில் - முற்காலத்தினின்று வருகின்ற மனுநூலின் வழியினால், புரப்பான் - பாதுகாப்பவன், மனுகுலத்து அரசன் - மனுகுலத்துத்தோன்றிய அரசன்: அவன் பெரும் புகழ்ஏ - அந்த விராடராசனுடைய பெருங்கீர்த்தியே, மாதிரம் முழுவதுஉம் வழங்குவது - திக்குக்களில் எங்குஞ் சொல்லப்படுவதாகும்; (எ - று.)

நெருங்கிஉறைவது என இயையும்: இனி, நெருங்கியென்பதை எச்சத்திரிபு ஆகக்கொண்டு, நீதிமுதலியன நிறைந்து நிதிகண்மற்றுயாவையும் நெருங்க மனுநூல் வழியினிற் புரப்பான் என்று இயைப்பினுமாம்: மனுநூல் தவறுமற் புரப்பதனால் அவ்வரசனிடத்து நீதிமுதலியன நிறைந்து நிதிகண்மற்றுயாவும் நெருங்குமென்க. நீர்வளத்தால் மச்சம் இடையறாது இருத்தல்பற்றி, அந்நாடு, மச்சநாடு எனப் படுவதாயிற்று. (௪)

5. ஆங்கவனகரியெய்திமற்றின்றேயைவருமணியுருக்கரந்து
தீங்கறவுறைவதல்லதுவேறோர்சேர்விடமிலதெனச்செப்பத்
தேங்கியவருளுக்கிருப்பிடமானசிந்தையான்சிந்தையாற்றுணிந்து
பாங்குறையரசர்யாரையுந்தத்தம்பதிகளேசெல்கெனப்பகர்ந்தான்.

(இ - ள்.) இன்றுஏ - இன்றைத்தினமே, அவன் நகரி எய்தி - அந்த விராடமன்னவனுடைய நகரியை யடைந்து, ஐவர்உம் - நாம் ஐந்துபேரும், அணி உரு கரந்து - அழகிய (நம்) வடிவத்தை மறைத்துக்கொண்டு, தீங்கு அற - (யாதொரு) தீமையுமில்லாமல், உறைவது - வசிப்பதுவே (செய்யத்தக்கது): அல்லது - இதுவல்லாமல், வேறு ஓர் சேர்வு இடம் - சேர்தற்கு ஏற்ற வேறோரிடம், இலது - இல்லை, என - என்று, செப்ப - (அருச்சுனன்) கூற,—தேங்கிய அருளுக்கு இருப்பு இடம் ஆன சிந்தையான் - அருளுக்குத் தேங்கியிருக்கும் இடமான மனத்தையுடைய தருமபுத்திரன், சிந்தையால் துணிந்து - (தன்) மனத்தினால் (அவ்வாறே செய்வதாக) நிச்சயித்து,— பாங்குஉறை அரசர் யாரைஉம் - (தன்) பக்கத்திலேயே வசிப்பவரான அரசர்களெல்லாரையும் பார்த்து, தம்தம்பதிகள்ஏ செல்க என - 'தங்கள் தங்களுடைய ஊருக்குச் செல்வீர்களாக' என்று, பகர்ந்தான்-சொன்னான்; (எ-று.)

அருச்சுனன் சொன்ன ஆலோசனை தன்மனத்திற்கு ஏற்றிருந்ததனால், தருமபுத்திரன், அவ்வாறே செய்வதாக நிச்சயித்துப் பிறகு ஆலோசனையிடத்தை விட்டுச்சென்று வனத்தில் தன்னோடிருந்தவர்களையெல்லாம் இனித் தாம் அஜ்ஞாதவாசஞ் செய்யவேண்டியிருப்பதனால் தங்கள் தங்களுடைய உறைவிடத்துச் செல்லுமாறு விடைகொடுத்தனுப்பினனென்பதாம். அரசர்

யாரையும் என்பதற்கு - அரசரையும் மற்றுமுள்ளாரையும் என்று உரைக்கலாம். மந்தணஞ் செய்யுமிடத்தில், யுதிஷ்டிரன், 'பன்னிரண்டுவருடம் வனவாசம் கழித்தோம். இனி, அஜ்ஞாதவாசம் எங்கு எப்படிச் செய்வது?' என்று கவலைகொண்டு கூற, அப்போது அருச்சுனன், 'தருமக்கடவுளின் வரத்தால் அஜ்ஞாதவாசஞ் செய்வது நமக்கு இனிது இயலும்: அதைப்பற்றிக் கவலவேண்டா: பாஞ்சாலம் மச்சம் சால்வம் முதலிய பலநாடுகள் இருக்கின்றன: இவற்றில் மனத்திற்குப் பிடித்த ஒருதேசத்தில் வசிக்குமாறு நிச்சயித்துக்கொள்க' என்ன, யுதிஷ்டிரன் மச்சதேசமே வாசத்துக்கு ஏற்ற இடம் என்று நிச்சயித்து, 'அங்கு நான்வேறுதொழிலின்றிக் கங்கன் என்றபேருடனே யதிவேஷம்பூண்டு அரசசபையில் வசிப்பேன்: விநோதத்திற்குச் சூதாட்டம் ஆடுவேன்: மற்றும் ஜ்யோதிஷம் சகுனம் நீதி வேதாந்தம் முதலியன சொல்லிக்கொண்டு மன்னவனுக்குஉத்ஸாஹமூட்டிக் காலங்கழிப்பேன்'என்று தன்செயலையும் கூறினன். பிறகு வீமசேனன் முதலிய ஒவ்வொருவரையும் நோக்கித் தனித்தனியே 'அங்கு நீர் என்னதொழிலைச் செய்துகொண்டு ஓரியாண்டு கழிப்பீர்?' என்று வினவ, ஒவ்வொருவரும் இன்ன இன்ன தொழிலைச் செய்துகொண்டு இருப்போம் என்று பதில்கூறினர் என்று முதனூலிலுள்ளது. (ரு)

6.—இருடியருக்குத் தருமபுத்திரன் விடை கொடுத்தனுப்புதல்.

முனிவராயுள்ளதபோவனத்தவரைமுடியுறத்தனித்தனிவணங்கிக்
கனிவுறுமன்பாலென்றுநானும்மைக்காண்பதென்றவர்மனங்களிப்ப
வினியனவுரைகள்பயிற்றியாவரையுமேகுவித்திற்றைநாளிரவிற்
றினகரனெழுமுன்செல்வமச்செல்வந்திகழ்தருநகர்க்கெனச்செப்பா.

இதுவும் அடுத்தகவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) முனிவர் ஆய் உள்ள - இருடியரான, தபோவனத்தவரை - தபோவனத்தில் வசிப்பவரை, முடி உற - (தனது) கிரீடம் (அவர்கள்பாதங்களிலே) பொருந்தும்படி, தனித்தனி வணங்கி - தனித்தனியே வணக்கஞ் செய்து,— கனிவு உறும் அன்பால் - மனக்கசிவு பொருந்திய அன்போடு, 'நான் உம்மை காண்பது—, என்று - (மீண்டும்) எப்போதோ?' என்று—, அவர் மனம் களிப்ப - அம்முனிவர்களுடைய மனம் மகிழ்ச்சியடையும்படி, இனியன உரைகள் பயிற்றி - இனிமையான வார்த்தைகளைச் சொல்லி,— யாவரைஉம் ஏகுவித்து - எல்லோரையும் (தங்கள் தங்களுடைய வாழிடத்திற்குச் செல்லுமாறு விடைகொடுத்து) அனுப்பிவிட்டு, 'இற்றை நாள் இரவில் - இன்றைத்தினம் இராத்திரிப்போதில், தினகரன் எழும் முன் - சூரியன் உதிப்பதற்குமுன்னே, அ செல்வம் திகழ்தரு நகர்க்கு-செல்வம் விளங்குகின்ற அந்த அழகிய பட்டணத்திற்கு, செல்வம் - போவோம்,'என செப்பா - என்றுசொல்லி,—(எ - று.)—"வளநாடடைந்தனன் பாண்டவர் தலைவன்" என அடுத்த செய்யுளோடு முடியும்.

தினகரன் - தன்னுதயத்தாற் பகலையுண்டாக்குபவன் எனக் காரணக்குறி. செல்வமச்செல்வம்-பிராசம். தபோதனத்தவரை யென்றும் பாடம். (சு)

## 7.—தருமன் தம்பியரோடும் திரௌபதியோடும் மச்சநாட்டை யடைதல்.

கல்கெழுகுறும்புஞ்சாரலங்கிரியுங்கடிகமழ்முல்லையும்புறவு
மல்குநீர்ப்பண்ணைமருதமுங்கடந்துவன்னியிற்பிறந்தமாமயிலும்
வில்கெழுதடக்கையிளைஞருந்தானும்விராடர்கோன்றனிக்குடைநிழலிற்
பல்குலமாக்கள்வாழ்வுகூர்வளநாடடைந்தனன்பாண்டவர்தலைவன்.

(இ - ள்.) பாண்டவர் தலைவன் - பாண்டவர்கட்குள் முதல்வனான தருமபுத்திரன்,— வன்னியில் பிறந்த மா மயில் உம் - அக்கினியில் தோன்றிய சிறந்தமயில்போன்ற திரௌபதியும், வில் கெழு தட கை இளைஞர் உம் - வில்பொருந்திய பெரியகைகளையுடைய தம்பிமாரும், தான் உம்—, கல் கெழு குறும்பு உம் - கல்லொடுவிளங்குகின்ற காடும், சாரல் அம் கிரி உம் - தாழ்வரையோடு கூடிய அழகிய மலையும், கடி கமழ் முல்லை உம் - மணம்வீசுகின்ற முல்லைநிலமும், புறவு உம் - கொல்லைகளும், மல்கு நீர் பண்ணை மருதம் உம் - மிக்க நீர்வளம்பொருந்திய விளைநிலத்தோடுகூடிய மருதநிலமும், கடந்து—, விராடர்கோன் தனி குடை நிழலில் - விராடராசனுடைய ஒப்பற்ற குடைநிழலிலே, பல் குலம் மாக்கள் வாழ்வு கூர் வளம் நாடு - பலகுலத்தவரான மனிதரும் வாழ்ச்சிபெருகுகின்ற மச்சநாட்டை, அடைந்தனன்—.

குறிஞ்சியும் முல்லையும் திரிந்தது பாலையாகு மாதலின் இக்குப்பாலை நிலத்தை 'கல்கெழுகுறும்பு' என்றாரென்னலாம். புறவு-முல்லையைச் சார்ந்த நிலம். முதலிரண்டடிகளில் நெய்தல் தவிர, மற்றைநான்கு நிலங்களும் கூறப்பட்டன. துரோணாசாரியரால் தன்மாணவனைக்கொண்டு வென்று கட்டி அவமதித்து விடப்பட்ட பாஞ்சாலராசனான யாகசேனன் தன்னைவென்ற துரோணன்மாணவகனான அருச்சுனனுக்கு விவாகஞ்செய்து தரும்படி ஒரு புத்திரியையும், துரோணாசாரியரைக் கொல்லும்படி ஒருபுத்திரனையும் பெறுமாறு யாசஉபயாசரைக் கொண்டு யாகஞ்செய்விக்க, அந்தவேள்வித் தீயினின்றும் திருஷ்டத்யும்நனும் திரௌபதியும் தோன்றினரென்ற சரித்திரம்பற்றி, திரௌபதியை 'வன்னியிற் பிறந்த மாமயில்'என்றார். பாண்டவர் தலைவன் மயிலும் இளைஞரும் தானும் மச்சநாடடைந்தான் — சிறப்பினால் பல பால்விரவி ஒருமுடிபு ஆயின: [நன் பொது. உஎ] முல்லையம்புறவும் என்று பாடமிருக்கலாம். (எ)

## 8.—பிறகு பாண்டவர் விராடனது நகரியினெல்லையிற் புக்கு மயான பூமியிடைச் சேர்தல்.

தராதலமுழுதுமுடையகோமகனுந்தம்பியர்நால்வருந்திருவு [ப்பக்
கிராவிடைவிரைவினுறிநடக்கடந்தோரெண்ணமுமிருக்கையும்வாய்
கராமுலாவருபைந்தடமும்வண்காவுங்கனகவான்புரிசையுஞ்சூழ்ந்த
விராடன்மாநகரியெல்லைபுக்கொருபான்மயானபூமியினிடைவிரவா.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) தராதலம் முழுது உம்-பூமிமுழுவதையும், உடைய-உடைமையாகக் கொண்டு ஆளத்தக்க, கோ மகன் உம் - இராசகுமாரனாகிய தருமபுத்திர

னும், தம்பியர் நால்வர்உம்-அவனுடைய தம்பிமார்நான்குபேரும், திருஉம்-திருப்போன்றவளான திரௌபதியும், இராவிடை - இராத்திரிப்போதில், விரைவின் - விரைவாக, இடை ஆறு - (மற்றும் விராடன்நகரத்தையடையச்செல்லவேண்டிய) இடைவழியை, கடந்து—,—கராம் உலாவரு பைந் தடம்உம்-முதலை உலாவுகின்ற புதுநீருள்ளதடாகமும், வண்காஉம்-வளப்பம்பொருந்திய சோலையும், கனகம் வான்புரிசைஉம்-பொன்மயமான பெரியமதிலும், சூழ்ந்த-சூழ்ந்திருக்கப்பெற்ற, விராடன் மா நகரி - விராடனுடைய பெரிய நகரியின், எல்லை - எல்லையிலே, ஓர் எண்ணம் உம் இருக்கைஉம் வாய்ப்ப - தம்முடைய ஒப்பற்ற எண்ணமும் இருப்பும்நேர்படுமாறு, புக்கு—, ஒருபால்-(அந்நகரியின்) ஒரு பகுதியான, மயானபூமியினிடை - மயானபூமியினிடத்தை, விரவா - பொருந்தி,—(எ - று.)—'நண்ணு' என அடுத்த கவியோடு தொடரும்.

தம்முடைய ஓரெண்ணமும் என்றது - அவர்கள் இன்னின்னதொழிலினராய் இவ்வாறு அவ்யாண்டைப் போக்கவேணுமென்று கொண்ட ஆலோசனையை. இருக்கை - தாம் மேற்கொள்ளுந் தொழிலுக்கு ஏற்ற இருப்பிடம். கராம் - க்ராஹம் என்ற வடசொலின் திரிபு. (அ)

9.—இரண்டுகவிகள் - அந்த ஒருகாளிக்கோயிலைச் சார்ந்திருந்த வன்னிமரத்தில் பாண்டவர் தம்முடைய படைக்கலம் முதலியவைகளை வைத்தமை தெரிவிக்கும்.

யாமளமறையால்யாவரும்பணிவாளெழுவகைத்தாயரிலொருத்தி
சாமளவடிவோடந்நகர்வாழ்வாள்சங்குதண்டங்கையிற்றரிப்பாள்
கோமளவல்லிக்கொடிநிகர்காளிகோயிலின்முன்னரோர்வன்னி
நாமளவிடுதற்கரியபல்கிளையானலம்பெறுபாதவநண்ணு.

(இ - ள்.) யாமளம் மறையால் - யாமளமென்று சொல்லப்படுகிற வேத மந்திரப்பகுதியைக் கொண்டு, யாவர்உம் பணிவாள் - எல்லாராலும் வணங்கப்படுபவளும், எழு வகை தாயரில் ஒருத்தி - ஸப்தமாதாக்களில் ஒருத்தியும், சாமளம் வடிவோடு அ நகர் வாழ்வாள் - கருநிறவடிவத்தோடு அந்நகரில் வசிப்பவளும், சங்கு தண்டு அம் கையில் தரிப்பாள் - சங்கத்தையும் தண்டாயுதத்தையும் அழகிய கையில் தரிப்பவளுமான, கோமளம் வல்லி கொடி நிகர் காளி - அழகிய வல்லி யென்று பேர்பூண்ட கொடியை யொத்திருப்பவளான காளியென்பவளின், கோயிலின் - கோயிலுக்கு, முன்னர் - முன்புறத்திலே, நாம் அளவிடுதற்கு அரிய பல் கிளையால்-நம்மால் அளவிடமுடியாத[மிக்க]பல கிளையோடு(பொருந்தி), நலம் பெறு-அழகுபொருந்திய, ஓர் வன்னி பாதவம்-ஒரு வன்னிமரமானது, (இருப்பதை), நண்ணு - கிட்டி,—(எ - று.)—"ஒளித்து ஒரு விரகால் வைத்தனராகி" என அடுத்த கவியோடு தொடரும்.

யாமளம் என்பது - அதர்வணவேதத்தின் ஒருபகுதியென்றும், அது - காளிஸ்தோத்ரம் முதலியவற்றைக் கொண்டதென்றுங் கூறுவர். எழுவகைத் தாயர்-ப்ராஹ்மீ மஹேஸ்வரீ கௌமாரீ வைஷ்ணவீ மாஹேந்த்ரீ வாராஹீ

மஹாகாளீ எனப்படுவர். சாமளம்=ஶ்யாமளம்: வடசொல். வன்னி= வெற்றி. பாதவம்=பாதபம்: அடியாற் பருகுவதெனக் காரணப்பொருள் படும் வடசொல். வாழ்வாள் பலபடை தனது கைத்தரிப்பாள் என்றும்பாடம்

10. தத்தமபடையுங்கவசமுமனைத்துந்தனித்தனியையவருந்தரித்த, மெய்த்திறலுடையயாவுமத்தருவின்கோடரத்தொளித்தொரு விரகால், வைத்தனராகியாவருமுணராவகையருமறைகளும்பயிற்றி, முத்தலைவடிவேற்காளியைவணங்கிமுன்னினர்புரிதொழின்முற்றும்.

(இ - ள்.) தனித்தனி - தனித்தனியே, ஐவர்உம் - பஞ்ச பாண்டவர்களும், தரித்த - பூண்டிருந்த, தம் தம படைஉம் - தங்கள் தங்களுடைய ஆயுதங்களையும், கவசம்உம்-கவசங்களையும், அனைத்துஉம்-ஆடைமுதலியவற்றையும், மெய் திறல்உடைய யாஉம் - உண்மையான வலிமையையுடைய மற்றுமுள்ளவற்றையும்,அ தருவின் கோடரத்து-அந்தவன்னிமரத்தின்பொந்திலே, ஒரு விரகால்-ஒப்பற்ற உபாயத்தினால், ஒளித்து வைத்தனர் ஆகி - ஒளித்து வைத்தவராய்,— யாவர்உம் உணராவகை - எவரும் அறியாதபடி, அரு மறைகள் உம் பயிற்றி-அருமையானமந்திரங்களையுஞ் சொல்லி, வடி முத்தலை வேல் காளியை வணங்கி - கூரிய திரிசூலத்தையேந்திய காளிகாதேவியை வணங்கிவிட்டு, புரி தொழில் முற்றுஉம் முன்னினர் - (தாம்) செய்யவேண்டிய தொழில்முழுவதையும் ஆலோசித்தார்கள்; (எ - று.)

கீழ் உருக்கரந்துறையவேணு மென்று தீர்மானித்த பாண்டவர், இப்போது இன்னார்இன்னார் இன்னஇன்ன உருக்கொண்டு இன்னின்ன தொழில் புரியவேணு மென்று மேல்நிகழ்த்தவேண்டிய யாவற்றையும் ஆராய்ந்து தீர்மானித்தன ரென்க. வெற்றிதரக்கூடிய மங்கை யாதலால், காளியை வணங்கினர். மெய்த்திறலுடையயாவும் என்றது - அட்சயபாண்டம் போன்றவற்றைக் காட்டுமென்னலாம். ஒருவிரகால் ஒளித்துவைத்தன ரென்றது - அஜ்ஞாதவாசஞ் செய்யுங்காலம் முற்றுமளவும் தாம் வைத்த பொருள்களில் எதுவும்கெடாதவாறு இருக்கும்படி வைத்தமையைத் தெரிவிக்கும். தமக்குஉரிய படைக்கலங்களோடு நகரிற்சென்றால் தம்மை நாட்டவரஞ்சுவதோடு மறைந்துறைதற்கு இடையூறுமா மென்ற காரணத்தால், ஆயுதங்களையெல்லாம் வன்னிமரத்தின்மீது மறையவைத்து மந்திரத்தாற் பிறர் கவராதபடி ரட்சையுமியற்றினர்பாண்டவ ரென்க. நாணியைக்கழற்றிவிட்டு நீட்டிய காண்டீவம்போன்ற அவ்வவர்களுக்குஉரிய விற்களையும் மற்றுமுள்ளவற்றையும் வெயில் மழை முதலியவற்றால் நலிவுநேரிடாதபடியும் மானுடர் அண்டாதபடியும் தோலைக்கொண்டு சுற்றச்செய்து பொதிந்து யுதிஷ்டிரன் நகுலன்மூலமாக மரத்தின்மீது அவற்றை வைத்தனனென்றும், ஒருவருஷம் முற்றுமளவும் அவற்றைப் பாதுகாக்குமாறும், அருச்சுனனுக்காவது தனக்காவது மீண்டும் பெறநினைக்கையில் பெறமுடியுமாறும் தேவர்களைக் குறித்து அபிமந்திரித்தும் வைத்தனனென்றும்,காளிஸ்தோத்ரங் கூறப்பட்டதென்றும் விவரங் காண்க. (௧௦)

11. — தருமன் துறவியுருக்கொண்டு நிற்க, அவனை வணங்கி விராடன் ஆசிபெறுதல்.

தம்பியர்வணங்கித்தனதுதாளிணையிற்றங்கவோர்தாபதவடிவு
மும்பரும்வியப்பக்கங்கனென்றுரைக்குமொருதிருநாமமுந்தரித்து
வெம்பரிதியினுஞ்செம்மைகூர்வடிவம்வெண்புரிநூலொடுவிளங்க
வைம்புலன்மகிழச்சென்றுகண்டிறைவந்தடிதொழவாசியுமுரைத்தான்.

(இ - ள்.) தம்பியர் வணங்கி தனது தாள்இணையில் தங்க - தம்பிமார்கள் வணங்கித் தன்னுடைய திருவடித்தாமரைகளில் தங்கவும், உம்பர்உம்வியப்ப - தேவர்களும் அதிசயிக்கவும், ஓர் தாபதம் வடிவுஉம் - ஒப்பற்ற துறவிவேஷத்தையும், கங்கன் என்று உரைக்கும் ஒரு திருநாமம்உம் - கங்கனென்று சொல்லும் ஒருபெயரையும், தரித்து-தாங்கிக்கொண்டு, (யுதிஷ்டிரன் வேத்தவை சார்ந்தானாக),—வெம் பரிதியின்உம் செம்மை கூர் வடிவம் - வெம்மை பொருந்தியசூரியனைக்காட்டிலும்செந்நிறம்மிக்க(அவ்யுதிஷ்டிரனது)வடிவம், வெண் புரி நூலொடு விளங்க - வெண்மைபொருந்திய முப்புரிநூலுடனே விளங்காநிற்க, ஐம்புலன் மகிழ கண்டு - (தன்னுடைய) பஞ்சேந்திரியங்களும் மகிழ்ச்சிகொள்ளுமாறு அம்முனிவனை(ச் சேய்மையிற்) கண்டு, வந்து - (தன்னிடத்தினின்று புறப்பட்டு)வந்து, இறை - விராடராசன், சென்று - (துறவியிருக்கு மிடத்துப்) போய், அடிதொழ - (அத்துறவியை) வணங்க, ஆசிஉம் உரைத்தான் - (அம்மன்னவனுக்கு அந்தத்துறவியும்) வாழ்த்துங் கூறினான்.

. தருமன் விராடநகரத்தில் வேத்தவையிற்புகுமுன் தாபதவடிவுகொள்ள, அவனைத் தம்பியர் வணங்கினர்: பின்னர் விராடனவைக்கு அவ்யுதிஷ்டிரன் சென்றானென்க. அங்ஙன் உம்பரும் வியப்பத் தருமன் தாபதவுருங்கொண்டபோது கங்கனென்ற பெயரைச் சூடினமை, இரண்டாமடியிற் பெறப்படும். இனி, நால்வர் சூழவிருந்து வணங்காவிடின் மதிப்பு உண்டாகாதாதலால், தருமன் தாபதவுருக்கொண்டு வேத்தவைக்குச் சென்றபோது தம்பியர் வணங்கிச் சூழஇருந்தனரென்பாருமுளர்: அது, தனித்தனியே சபைக்குத் தம்பியர் செல்வதாகக் கூறுவதோடு முரணும். புலன் - பொறிக்கு இலக்கணை. வந்து - அசையுமாம். ஆசி= ஆஶிஸ்: வடசொல். (கக)

12.—தாபதவுருக்கொண்ட தருமனை வணங்கிய விராடனது வினவும், அதற்கு அத்தருமன் இறுத்த விடையும்.

யாரையாநீவிரெங்குநின்றிவண்மற்றெழுந்தருளியதெனவினவப்
பாரையாளுடையவுதிட்டிரன்பாங்காய்ப்பயின்றனனவன்பெருவனத்திற்
சேருநாளுடன்போய்த்திரிந்தனனின்பாற்சில்பகல்வைகுமாறெண்ணி
வீரவார்கழலாய்வந்தனெனென்றான்வேள்வியாற்கேள்வியான்மிக்கோன்.

(இ - ள்.) 'ஐயா—! நீவிர் யார்—? எங்குநின்று இவண் எழுந்தருளியது - எவ்விடத்தினின்று இங்கு வந்தது?' என வினவ - என்று (தாபதவுருக்கொண்டிருந்த தருமபுத்திரனை விராடராசன்) விசாரிக்க,— வேள்வியால் கேள்வியால் மிக்கோன் - யாகஞ்செய்தலிலும் சிறந்தநூற்கேள்வியைப்

பெரியோரையடுத்துக்கேட்டலிலும் மிக்கவனான அந்தத் தருமபுத்திரன்,— (விராடனைநோக்கி),— 'வீரம் வார் கழலாய் - வீரத்திற்கு அறிகுறியாகத் தரித்த நீண்ட கழலைப் பூண்டவனே! பாரை ஆள் உடைய - பூமியையாளு தலை யுடைய, உதிட்டிரன் - தருமபுத்திரனுக்கு, பாங்குஆய் - தோழனாய், பயின்றனன் - பழகியிருந்தேன்: அவன் பெரு வனத்தில் சேரும் நாள் - அவன் பெரியகாட்டிலே சேரும்நாளிலே, உடன் போய் திரிந்தனன் - அவனுடன்கூடவே போய்த் திரிந்தேன்: நின்பால் சில் பகல் வைகும் ஆறு எண்ணி வந்தனென் - உன்னிடத்துச் சிலநாள் தங்கும்படி யெண்ணி இப்போது வந்துள்ளேன்,' என்றான் - என்று விடைகூறினான்; (எ - று.)

பாங்கு - அருகில் எனினுமாம். இங்குத் தருமபுத்திரன் விராடனிடத் துக் கூறலதில் மெய்ம்மைப் பொருள் தோன்றுமாறும் அமைந்திருத்தல் காண்க: அதுவருமாறு:—உதிட்டிரன் அவன் - யுதிஷ்டிரனாகிய அன்னான், பாங்குஆய் - சௌக்கியமாக, பயின்றனன் - (நாட்டில்) தங்கியிருந்தவன்,— பெருவனத்தில் சேரும்நாள், உடன் - தன் துணைவரோடு, போய் - (நாட்டை விட்டுச்) சென்று, திரிந்தனன்: (அவன்) நின்பால் சில்பகல் வைகுமாறு எண்ணி, வந்தனன் - வந்துள்ளானென்பது. மற்று - அசை. (௪௨)

13.—மன்னவன் மனமுவந்து அந்தமுனிவனை வரவேற்றல்.

மன்முனிமொழிந்தவாய்மைகேட்டந்தமனுகுலமன்னனுமகிழ்ந்து
தன்மனநெகிழ்ந்தநெகிழ்ச்சியுமுணர்வுந்தகைமையுமுவகையிற்றோன்ற
வின்றெனைமனையினின்றெய்தியபயன்யானேழெழுபிறப்பினும்புரிந்த
நன்மையின்விளைவேவேண்டுநாளீண்டுநண்ணுதிரெனநனிநவின்றான்.

(இ - ள்.) மன் முனி - அரசனாய்ப்பிறந்து துறவிவேடத்தைக்கொண் டுள்ள யுதிஷ்டிரன், மொழிந்த - சொன்ன, வாய்மை - உண்மையான சொல்லை, கேட்டு—, அந்த மனுகுலம் மன்னன் உம்-மனுகுலத்துத் தோன்றிய அரசனாகிய அந்த விராடமன்னவனும்,—மகிழ்ந்து—, தன் மனம் நெகிழ்ந்த நெகிழ்ச்சிஉம் - (அந்தமுனிக்கோலத்தையுடைய தருமபுத்திரன் விஷயத்தில்) தன்மனம் இளகியிருக்கும் நிலைமையும், உணர்வுஉம் - (அவனைப் பற்றிய) நல்லுணர்ச்சியும், தகைமை உம் - பாராட்டும், உவகையில் - (அந்தவிராட ராசன் வெளிக்காட்டிய)மகிழ்ச்சியில்தானே, தோன்ற - வெளிக்குத் தெரியா நிற்க,—'இன்று - இன்றைத்தினம், என் மனையின் - என்வீட்டிலே, எய் திய - (நீர்) வந்து சேரப்பெற்றதனாலான, பயன் - நல்விளைவு,—யான்—, ஏழ் எழுபிறப்பின்உம் - எழுவகைப்பட்ட எழுபிறப்பிலும், புரிந்த - செய் துள்ள, நன்மையின் - நல்வினையின், விளைவுஏ - பயனேயாம்: வேண்டும் நாள் - (நீர் இங்கே) வசிக்கவேண்டும் என்று நினைக்கிறநாள், ஈண்டு நண்ணு திர் - இங்குத்தானே வாசஞ்செய்மின்,' என - என்று, நனி நவின்றான் - இனிதாகக் கூறினான்; (எ - று.)

விராடராசனதுமுகத்தில் தோன்றிய குறிப்பு, அந்தமன்னவனுடைய மனமகிழ்ச்சி முதலியவற்றை வெளிததோற்றுவித்ததென்க; "அகத்தினழகு

முகத்தில் தெரியும்'' என்ற பழமொழி இங்குக் கருதத்தக்கது. எழுபிறப்பு - விலங்கு புள் தெய்வம் மானுடம் ஊர்வன நீர்வாழ்வன தாவரம் என்னும் எழுபிரிவினையுடையனவும், ஒருபிராணிசெய்த புண்ணியபாவங்கள் தொடர்தற்கு உரியனவுமான எழுபிறப்புக்கள். (கந)

14.—வீமன், சமையற்காரனேன்று சொல்லிக்கொண்டு விராடனவையைச் சேர்தல்.

தண்டினுக்கொருவன்புயவலிக்கொருவன்றனுவினுக்கொருவ னென்றுரைக்குந், திண்டிறற்பவனகுமாரனுஞ்சின்னாள்சென்றபின் றெள்ளமுதனைய, வுண்டியைக்குறித்துக்கற்றதன்கல்வியுரிமையைக் குறித்தடுதொழிற்கு, மண்டலத்தரசேயொருவன்யான்வீமன்மடை யனென்றரசவைவந்தான்.

(இ - ள்.) 'தண்டினுக்கு ஒருவன் - தண்டாயுதத்தையேந்திப் பொருவதில் ஒப்பற்றவன்: புயம் வலிக்கு ஒருவன் - தோள்வலியில் ஒப்பற்றவன்: தனுவினுக்கு ஒருவன் - தநுர்வித்தையிலும் ஒப்பற்றவன்,' என்று—, உரைக்கும் - (உலகத்தாரால்) சொல்லப்படுகின்ற, திண் திறல் - மிக்கவலிமையையுடைய, பவனகுமரன்உம் - வாயுபுத்திரனாகிய வீமசேனனும்,—சில் நாள் சென்ற பின் - (தருமபுத்திரன் விராடனையடைந்து) சிலநாள் கழிந்தபிறகு, தெள் அமுது அனைய உண்டியை குறித்து கற்ற - தெள்ளிய அமிருதம் போன்ற இனிய உணவைச்சமைத்தலைக் குறித்து(த் தான்) கற்றுள்ள, தன் கல்வி உரிமையை குறித்து - தன்னுடைய பாகசாஸ்திரத்திலேயுள்ள வல்லமையைச் சொல்லிக்கொண்டு, 'மண்டலத்து அரசே - பூமண்டலத்துக்குத் தலைவனே! அடு தொழிற்கு - சமைக்குந்தொழிலில், ஒருவன் யான் - ஒப்பற்றதிறமைபடைத்தவன் நான்: வீமன் மடையன்—,' என்று - என்று சொல்லிக்கொண்டு, அரசு அவை - ராஜசபையை, வந்தான்-வந்துசேர்ந்தான்.

தண்டாயுதப்போர் முதலியவற்றில் ஒப்பற்ற வீமன் 'பாக [சமையல்] சாஸ்திரத்தில் தான் நிகரற்றவன்: வீமன்மடையன்' என்று தன்னைத் தெரிவித்தான் என்க. வீமன்மடையன் என்ற தொடர் - வீமனுடைய மடையனென்று பொருள் படுதலோடு, வீமனாகிய மடையனென்றும் பொருள்படுவது காண்க. (சரு)

15.—சேர்ந்த வீமன் தன்திறமையை விளங்கக் கூறுதல்.

வந்துதன்றம்முன்மலரடிமுன்னிமலர்க்கையான்முடியின்மேல் வணங்கி, யைந்துபல்வகையிற்கறிகளும்வெவ்வேறறுசுவைமாறுமா றமைப்பேன், வெந்திறன்மல்லும்புரிதொழிலுடையேன்விருதுடை ப்பலாயனமெனன்பே, ரிந்திரனுலகுதன்னிலுமெண்ணிலென்றெழி ற்கெதிரிலையென்றான்.

(இ - ள்.) வந்து—, தன் தம்முன் - தனது தமையனுடைய, மலர் அடி - தாமரைமலர் போன்ற திருவடிகளை, முன்னி - தியானித்தபடியே, மலர்

கையால்-தாமரைமலர்போன்ற கைகளினால், முடியின்மேல்வணங்கி-சிரசின் மீது வைத்து வணங்கி[சிரசின்மேல் இருகையும் வைத்துக் குவித்து வணங்கி], 'பல் கறிகள்உம் - பலவகைப்பட்ட கறிகளையும், ஐந்து வகையின் - ஐந்து வகைக்குள், வெவ்வேறு அறுசுவை மாறும்ஆறு-ஆறுசுவைகளும் வெவ்வேருக மாறிமாறி வரும்படி, அமைப்பேன்—;வெம் திறல் - கொடியதிறமையோடு, மல்உம் - மற்போரும், புரி - செய்கின்ற, தொழில்-தொழிலை, உடையேன் - விருதுஉடை - புகழ்பெற்ற, பலாயனன் என் பேர் - பலாயனனென்பது என்னுடைய பேராகும்: எண்ணில் - ஆலோசிக்குமிடத்து, இந்திரன் உலகு தன்னில்உம் - இந்திரலோகத்திலும், என் தொழிற்கு - என் தொழிலைச் செய்வதற்கு, எதிர் - ஒப்பானவர், இலை—,' என்றான்—; (எ - று.)

ஐந்து வகையாகக் கறிகளையமைத்தல் - உண்பன கடித்துத்தின்பன பருகுவன மெல்லுவன நக்குவன ஆகப் பக்குவஞ்செய்தல். அறுசுவை - கைப்பு புளிப்பு கார்ப்பு உவர்ப்பு துவர்ப்பு தித்திப்பு என்பன. மேலுலகத்தி லிருப்பவை சிறந்தனவாயிருக்கு மென்ற கொள்கைபற்றி, இந்திரனுலகு தன்னிலு மென்தொழிற் கெதிரிலை யென்கின்றான்: தன்னுடையாற்றலை யுணராரிடத்துத் தன்னைப் புகழ்தல் தக்கதே யாதலால், இங்ஙனம் புகழ்ந்து கூறினானென்க. வலலன் என்று முதனூலிற் பேர் கூறப்பட்டுள்ளது. வீமன்வணங்கியது தருமனையேயென்பார் 'தம்முன் மலரடி முன்னிவணங்கி' என்றார். (௧௫)

16.--அவ்வீமனையும்விராடராசன்வேதமதிசெய்துதன்னிடத்துக்கோள்ளல்.

என்றபோதவனைவிராடனுமகிழ்வுற்றிருகையுஞ்சென்னிமேலிருத்திப்
பொன்றிகழ்மணிப்பூண்மென்றுகில்பலவும்புரவிபோதகங்களும்வழங்கி
யின்றுதொட்டெமக்குமெய்ப்பெருஞ்சுற்றத்தொருவனீயென்றடுதொழிற்கு
நின்றவரெவர்க்குந்தலைவனுமுரிமைநிலைபெறவழங்கினன்மாதோ.

(இ - ள்.) என்ற போது - என்று (வீமசேனன்) சொன்னபோது,—அவனை - அந்தப்பலாயனனென்றவீமனை, விராடன்உம் - விராடராசனும், மகிழ்வுஉற்று - மகிழ்ச்சிபொருந்தி, இரு கைஉம் - (தன்) இரண்டுகைகளையும், சென்னிமேல்இருத்தி - (அந்தவீமசேனனுடைய) சிரசின்மேலிருக்க வைத்து,—பொன் திகழ் மணி பூண் (பலஉம்) - பொன்னினாலும் இரத்தினங்களினாலும்விளங்குகின்ற ஆபரணங்கள் பலவற்றையும், மெல் துகில் பலஉம் - பலவகைப்பட்ட மெல்லிய ஆடைகளையும், புரவி போதகங்கள்உம் - குதிரைகளையும் யானைக்கன்றுகளையும், வழங்கி - கொடுத்து,— 'இன்று தொட்டு - இன்றுமுதல், எமக்கு—, நீ—, மெய் பெருஞ் சுற்றத்து ஒருவன் - உண்மையான பெருஞ் சுற்றத்தாரிலொருத்தனவாய்', என்று - என்று (முகமன்) கூறி,— அடு தொழிற்கு நின்றவர் எவர்க்குஉம் - (தன்னிடத்துச்) சமையல்தொழிலில் அமர்ந்து நிற்பவரெல்லார்க்கும், தலைவன் ஆம் - தலைவனாகின்ற, உரிமை - உத்தியோக முறைமையையும், நிலைபெற - நிலையாக, வழங்கினன் - (அந்தப் பலாயனனுக்குக்) கொடுத்தான்; (எ - று.)

பலவும் என்பது பூண்என்பதனோடும் கூட்டப்பட்டது. இருகையும் சென்னிமேலிருத்தியது - நீ என்னிடத்து ஒதுங்கிவாழலா மென்பதைக் குறிப்பிக்கும். இனி, தன்தலையின்மேல் தன்இருகைகளையும் வைத்து விராடன் வீமனை அஞ்சலிசெய்தா னென்றல், இந்நிலையில் ஏலாதென்க. போதகம் - யானைக்கன்று: வடசொல். ஒருவன் நீ - முன்னிலையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி. மாதோ - ஈற்றசை. ஐம்பெருஞ்சுற்றத்து என்ற பாடத்துக்கு, ஐம்பெருஞ்சுற்றங்களாவார்-மந்திரியர் புரோகிதர் சேனாபதியர் தூதர் சாரணர்என்ற இவர். (௧௬)

**17.—அருச்சுனன் உருப்பசி தந்த சாபத்தால் ஒருவருடம் தாங்கவேண்டிய பேடிவடிவத்தைக் கொள்ளுதல்.**

நீடியசிலைக்கைத்தேவர்கோன்மதலை நிருத்தநல்லரங்கினின்முன்னாள், வாடியமருங்குல்பணைத்தபூண்கொங்கை வாட்டடங்கண்கள் வார்குழைமே, லோடியவதனத்துருப்பசிபணியா லுறுவதற்கோரி யாண்டமைந்த, பேடியின்வடிவந்தரித்தனனாண்மைக் கிமையவரெவரினும்பெரியோன்.

(இ - ள்.) நீடிய சிலை கை - நீண்ட வில்லையேந்திய கையையுடைய, தேவர்கோன் மதலை - தேவேந்திரனுடைய புதல்வனான அருச்சுனனாகிய, ஆண்மைக்கு இமையவர் எவரின்உம் பெரியோன் - வீரத்தன்மையில் தேவர்கள் யாவரினும் மேம்பட்டவன்,—நிருத்தம் நல் அரங்கினில்-நாட்டியம் ஆடுதற்கு அமைந்த சிறந்த நாடகசாலையில், முன் நாள்-முற்காலத்தில், வாடிய மருங்குல் பணைத்த பூண் கொங்கை வாள் தடங் கண்கள் வார் குழைமேல் ஓடிய வதனத்து உருப்பசி - துவளுகிற [மெல்லிய] இடையையும் பருத்த ஆபரணங்களையணிந்த தனங்களையும் வாள்போன்ற விசாலமான கண்கள் நீண்டகாதணிமே லோடப்பெற்ற முகத்தையுமுடையளாயிருந்த உருப்பசி யென்ற தேவமாதின், பணியால் - ஏவலினால் [சாபத்தினால்], ஓர் யாண்டு உறுவதற்கு அமைந்த - ஒருவருஷகாலம் தங்கும்படி பொருந்திய, பேடியின் வடிவம் - பேடிவடிவத்தை, தரித்தனன்—; (எ - று.)

ஆண்மைக்கு எவரினும் பெரியோன் பேடியாயினான்: இது என்ன வியப்பு! என அதிசயந்தோன்றக் கூறியவாறு. அருச்சுனன் சிவபிரானை நோக்கித் தவம்புரிந்து பாசுபதம் பெற்றுப் பகைவென்றபின், தேவேந்திரன் அவ்வருச்சுனனைத் தன்னுலகத்திற்கு இட்டுக்கொண்டுபோய்ப் பெருஞ்சிறப்புச் செய்து தனிவிடுதி யளித்திருந்தானாக, உருப்பசி நடித்த புதுநாடகத்தைக் கண்டு அவ்வருச்சுனன் புகழ்ந்து தன்விடுதியி லிருக்கையில் சூரியாஸ்தமனமாகி நிலாத்தோன்றிய போது தனிப்பட்ட அவ்விடுதிக்கு உருப்பசி வந்தாள்: அவளைக் கண்ட அருச்சுனன், "நீ ஆயுவின் பாரியையாயிருந்தவளாதலால், எனக்கு மாதாவின் வருக்கத்தைச் சேர்ந்தவளன்றோ" என்று அவளைப் பணிந்தான்: உடனே அவள் வெகுண்டு "இரவிடை யாடவர்புகலா மொழி புகன்றாய்: நீ பேடியரியல் பாகுக" என்றுகூறித் தன்கோயிலிற் புகுந்தாள்:

மறுநாள் பொழுது விடிந்ததும், செய்தியுணர்ந்த தேவேந்திரன் தேவர் புடைசூழ அவளிருக்குமிடம் சேர, அவளும் தேவேந்திரனைப் பதம்பணிந்தாளாக, தேவர்கள் "இந்தப்பேடி உருவம் இந்த அருச்சுனனுக்கு வேண்டும்போது ஒருவருடம் வந்திருக்குமாறு அருள்புரிக" என்று அவளிடத்து வேண்ட, அங்ஙனமே அன்னாள் வரந்தந்தனளென்பது, அருச்சுனன் றவநிலைச்சருக்கத்துக் கூறிய சரிதை யாகும். (கஎ)

18.—பேடிவடிவம் படைத்த அருச்சுனன் விராடராஜசபை சென்று அருச்சுனன் கோயிலிலிருந்த பேடி யென்று தன்னைத் தெரிவித்தல்.

வாயுவின்மதலைசென்றுகண்டதற்பின் மற்றைநாளொற்றைவெண்கவிகைச், சேயொளிமகுடச்சென்னியானிருந்த பேரவைசிறப்புறச்சென்று, தூயவெண்புரிநூன்முனிதிருக்கழலி லொருபுடைதோய்தரத்தலைசாய்த், தேயவெஞ்சிலைக்கையருச்சுனன்கோயிலிருப்பதோர்பேடிநானென்றான்.

(இ - ள்.) வாயுவின் மதலை - வாயுபுத்திரனான வீமசேனன், சென்று - போய், கண்டதன் பின் - (விராடனைப்) பார்த்து (அங்கு) அமர்ந்தபின்பு, மற்றைநாள்—,—ஒற்றை வெள் கவிகை-ஒற்றை வெண்கொற்றக் குடையையும், சேய் ஒளி மகுடம் - செந்நிற வொளியையுடைய கிரீடத்தையுந் தரித்த, சென்னியான் - முடியையுடையவனாகிய விராடன், இருந்த - தங்கியுள்ள, பேர் அவை - பெருஞ்சபை, சிறப்புஉற - சிறப்படையும்படி, சென்று—, தூய வெள் புரி நூல் முனி திரு கழலில் - பரிசுத்தமான வெண்மையையுடைய முப்புரிநூலையணிந்த துறவியாகிய தருமபுத்திரனுடைய சிறந்த பாதங்களில், ஒரு புடை - ஒருபகுதியில், தோய்தர-படியும்படி, தலை சாய்த்து - தலையைவணங்கி, (அருச்சுனன் பிறகு மன்னவனைநோக்கி),— 'ஏய வெம் சிலை கை - ஏவுந்தன்மையுள்ள கொடிய வில்லைத்தரித்த கைகளையுடைய, அருச்சுனன் கோயில் - அருச்சுனனுடைய அரண்மனையிலே, இருப்பது - இருத்தலையுடைய, ஓர் பேடி நான் - ஒருபேடியாவேன் யான்,' என்றான் - என்று (தன்னைத்) தெரிவித்தான்; (எ - று.)

நான் அருச்சுனன்; இப்போது கோயிலில் [ராஜகிருகத்தில்] வசித்தற்குரிய பேடிவடிவம் படைத்துள்ளேன் என்று ஒருபொருளும் இதில் தோன்றுதல் காண்க. பேடி - பெண்ணுறுப்புமிக்கு ஆணுறுப்புக் குறைந்த நபும்ஸகம். (கஅ)

19.—இதுவும் அது.

நாதமுமியலுமேதகுநடநூனவிறருமரங்கினுக்குரியேன்
பேதையர்தமக்குநடம்பயிற்றுவிப்பேன்பெயர்பிருகந்நளையென்ப
வாதிபநினதுசெல்வமாநகரிலிருப்பதற்கெண்ணிவந்தடைந்தேன்
வேதமுமுலகுமுள்ளநாளளவும்விளங்குகநின்மரபென்றான்.

(இ - ள்.) நாதம்உம் - இன்னொலியான சங்கீதமும், இயல்உம் - (பாடுதற்குஉரிய) பாடலும், மேதகு - மேம்படுகின்ற, நடம் நூல் - நடனசாஸ்திர

த்தில், நவில்தரும் - கூறியபடி யமைந்துள்ள, அரங்கினுக்கு - நர்த்தன சாலையிலாடுதற்கு, உரியேன் - உரியவள்: (அன்றியும்), பேதையர்தமக்கு - மகளிர்க்கு, நடம் - நர்த்தனத்தை, பயிற்றுவிப்பேன் - பழக்குவித்தற்கு வல்லேன்: பெயர் - (என்னுடைய) பெயர், பிருகந்நளை என்ப - பிருகந்நளை யென்று சொல்வார்கள்: ஆதிப - தலைவனே! நினது செல்வம் மா நகரில் - உன்னுடைய வளப்பமுள்ள நகரத்தில், இருப்பதற்கு - வசிப்பதை, எண்ணி - நினைத்து, வந்து அடைந்தேன்—; வேதமும்—, உலகும்—, உள்ள நாள் அளவு உம் - இருக்கும்நாள் வரையிலும், நின் மரபு - உனதுகுலம், விளங்குக—, என்றான்—; (எ - று.)

நர்த்தனஞ்செய்யும்போது சங்கீதமும் பாடலும் உடன்வேண்டியிருத்தலால், 'நாதமுமியலு மேதகுநடம்' எனப்பட்டது. (கசு)

20.—விராடன் பிருகந்நளையைக் கொண்டாடி, உத்தரையென்ற தன்மகளுக்குப் பாங்கியாக அவளிடத்து விடுத்தல்.

வித்தகனெனவெக்கலைகளும்பயின்றவிராடனும்பேடிதன்மொழிகேட்
டித்திறமுடையார்வேலைசூழுலகினில்லையென்றினிதுரைத்தருளி
யத்தகவுடையாண்மகிழ்வுறக்கலனுமாடையும்வேண்டுவவழங்கி
யுத்தரைதனக்குப்பாங்கிநீயென்றாங்குரியதன்மகளுழைவிடுத்தான்.

(இ - ள்.) வித்தகன் என - வல்லவனென்று, எ கலைகள் உம் பயின்ற - எந்தக்கலைகளிலும் சுற்றுவல்லவனான, விராடனும்—, பேடிதன் மொழி கேட்டு - அந்தப் பேடியின் பேச்சைக் கேட்டு, 'இ திறம் உடையார்-(நடன நூலில்) இவ்வளவு வல்லமைபெற்றவர், வேலை சூழ் உலகினில் - கடலினாற் சூழப்பட்ட இந்தப்பூலோகத்தில், இல்லை—,'என்று—, இனிது-இனிமையாக, உரைத்தருளி - சொல்லி,—அ தகவு உடையாள்-அப்படிப்பட்ட திறமுடையவளான அந்தப்பேடி, மகிழ்வு உற - மகிழ்ச்சியடையும்படி, வேண்டுவ - (அவன்) விரும்பக்கூடிய, கலன் உம் - ஆபரணங்களையும், ஆடை உம் - வஸ்திரங்களையும், வழங்கி - கொடுத்து, 'உத்தரைதனக்கு - உத்தரை யென்கிற (என்) மகளுக்கு; நீ—, பாங்கி - உயிர்த்தோழியாவாய்', என்று - என்று சொல்லி, உரிய தன் மகளுழை - (தனக்கு) உரியமகளான அவளிடத்தில், ஆங்கு - அப்போது, விடுத்தான் - (அந்தப்பிருகந்நளையை) அனுப்பினான்; (எ - று.)

உரியதன்மகள் என்றது - தான் பெற்ற பெண்ணென்றபடி. இத்திறமுடையார் வேலைசூழுலகி னில்லை யென்றதனால், அன்னாளை மன்னவன் பரீட்சித்தறிந்தமை பெறப்படும். (உ0)

21.—சின்னாள் கழிந்து நகுலன் புரவியோட்டுவோனுருக்கொண்டு விராடன் குதிரையேறும் முன்றிலிற் சென்றிருத்தல்.

பின்னருஞ்சின்னாளகன்றபினகுலன்போரழகினுக்குவேளனையான்
மின்னுடைவடிவேல்வேந்தர்கோன்விராடன்வெம்பரியேறுமுன்றிலின்வாய்
மன்னியதொழில்கூர்கம்பியுங்கயிறுமத்திகையுடன்காத்தேந்தி
யுன்னயமுதலாம்புரவிநூலறிவோனுளநிகழ்தருக்கொடுசென்றான்.

(இ - ள்.) பின்னர்உம் - பின்னும், சில் நாள் அகன்ற பின் - சிலநாள் கழிந்தபிறகு, பேர் அழகினுக்கு - மிக்க அழகிலே, வேள் அனையான் - மன்மதனையொத்தவனும், உன்னயம் முதல்ஆம் புரவிநூல் அறிவோன் - உன்னயம் முதலிய குதிரையைப்பற்றிய நூல்களை யறிந்தவனுமாகிய, நகுலன்—, மின் உடை - ஒளியையுடைய, வடி வேல் - காய்ச்சியடிக்கப்பட்ட வேலாயுதத்தையுடையனான, வேந்தர் கோன் விராடன் - அரசர்க்கரசனான விராடன், வெம் பரி ஏறும் - விரும்பத்தக்க குதிரையிலேறுகின்ற, முன்றிலின்வாய் - முற்றத்திலே, மன்னிய தொழில் கூர் - (தான் இப்போது) மேற்கொண்ட குதிரையோட்டுந்தொழிற்கு ஏற்ற, கம்பிஉம் - கடிவாளமும், கயிறும்—, மத்திகையுடன் - குதிரைச்சம்மட்டியுடனே, கரத்து - கையிலே, ஏந்தி—, உளம் நிகழ் தருக்கொடு - மனத்திற்பொருந்திய மேம்பாட்டுடனே, சென்றான்—; (எ - று.)

தனக்குக் குதிரைநூலில் நன்கு பயிற்சியுண்டு என்ற உறுதி தோன்றுமாறு குதிரைசெலுத்துதற்குஏற்ற கருவியுடனே விராடராசன் குதிரையேறும் முன்றிலிலே நகுலனானவன் சென்றிருந்தனனென்பதாம். தருக்கு - செருக்கு: இங்குக் குதிரைநூலில் வல்லவனென்று தன்மனத்துக் கொண்டுள்ள உறுதியான எண்ணம். மத்திகை - குதிரையைச் செலுத்துகையில் உபயோகிக்குஞ் சாட்டை. கம்பிஎன்பதற்கு - உளவுகோல் என்று கூறினருமுளர். (உக)

22.—இதுமுதல் மூன்றுகவிகள் - விராடராசன் வினவ, நகுலன் தன்னை இன்னானென்று தெரிவித்தமை கூறும்.

சென்றவன்றன்மேற்புரவிமேலிருந்தோன்செழுந்தடங்கண்மலர்பரப்பி
வன்றொழிற்புரவிவான்றொழிற்குரியோயெவ்வயினின்றுவந்தனைநீ
யென்றலுமவனுமியம்பினன்விசயற்கிளையவனகுலனென்றெல்லாக்
குன்றினுந்தன்பேரெழுதினேனவன்றன்கொற்றம்யார்கூறதற்குரியார்.

நான்கு கவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) புரவிமேல் இருந்தோன் - குதிரையின்மேலேறியிருந்தவனான விராடன்,— சென்றவன் தன்மேல் - (மன்னவன் குதிரையேறும் முன்றிலிலே போய்) சேர்ந்திருந்தவனான நகுலன்மீது, செழுந் தட கண் மலர் பரப்பி - வளமுள்ள பெரிய (தன்) கண்மலரைப் பரவச்செய்து [பார்த்து], 'வல் தொழில் புரவி வான் தொழிற்கு உரியோய் - வலியதொழிலாகிய குதிரைசெலுத்துஞ் சிறந்ததொழிலுக்கு உரியவனே! நீ—, எ வயின் நின்று வந்தனை - எவ்விடத்திலிருந்து வந்தாய்?' என்றலும் - என்று வினவியவுடனே,—அவன்உம் - அந்நகுலனும், இயம்பினன் - (பின்வருமாறு) கூறலானான்: விசயற்கு இளையவன் - அருச்சுனனுக்குஅடுத்த தம்பியாகிய, நகுலன் என்று எல்லாம் குன்றின்உம் தன் பேர் எழுதினேன் - நகுலனென்று சொல்லப்பட்டு எல்லாமலையிலும் தன்பேரைத் தீட்டினவன்

(ஒருவன் உளன்): அவன் தன் கொற்றம் - அவனுடைய வெற்றியை, யார் கூறுதற்கு உரியார் - யார் சொல்லவல்லார்? (எ - று.)

யாவரும் அறியும்பொருட்டு உயர்ந்த இடத்தில் பேரையெழுதிவைத்தல், இயல்பு. (உஉ)

23. மற்றவன்றனதுவாசிமந்துரைக்குத்தலைவராய்வாழுமாக்களில்யா, னுற்றவனொருவன்வாம்பரிவடிவுமுரைதகுசுழிகளுமொளியும், பற்றியநிறனுங்கந்தமுங்குரலும்பல்வகைக்கதிகளும்பிறந்த, சொற்றகுநிலனுமாயுவுமுணர்வேன்றுயருறுபிணிகளுந்தவிர்ப்பேன்.

(இ - ள்.) யான்—,—அவன்தனது - அந்தகுலனுடைய, வாசி மந்துரைக்கு - குதிரைகட்டுங் கொட்டிலுக்கு, தலைவர் ஆய்—, வாழும்—, மாக்களில் - மனிதர்களுள், உற்றவன் ஒருவன் - சேர்ந்தவனான ஒருத்தன்: (யான்),— வாம் - தாவிச்செல்லுகின்ற, பரி வடிவு உம் - குதிரையின் வடிவமும், உரை தகு - சிறப்பித்துச்சொல்லத்தக்க, சுழிகள் உம் - நற்சுழிகளும், ஒளியும்—, பற்றிய நிறன் உம் - பொருந்திய நிறமும், கந்தம்உம்- (உடலின்) மணமும், குரலும்—, பல்வகை கதிகள்உம் - பலவகைப்பட்ட நடைகளும், பிறந்த - (குதிரைகள்) தோன்றிய, சொல் தகு நிலன் உம் - சிறப்பித்துச்சொல்லப்படுகிற தேசமும், ஆயு உம்- ஆயுளும்ஆகியவற்றை, உணர்வேன்-அறிந்துள்ளேன்: துயர்உறு-துன்பம் மிக்க, பிணிகள் உம்-(குதிரைக்கு வரும்) நோய்களையும், தவிர்ப்பேன் - போக்குவேன்; (எ - று.)

இதனால், நகுலன் அசுவசாஸ்திரத்தில் தனக்குஉள்ள வல்லமையை விவரித்துச்சொல்லியவாறு காண்க. குதிரைகள் இன்னின்னவடிவா யிருக்கும்:குதிரைகட்கு இன்னின்ன இடத்துச் சுழி இவ்வாறுஅமைந்திருந்தால் நலனும்: அவற்றின் ஒளி இன்னபடியிருக்கும்: அவற்றின்நிறம் இன்னபடியிருக்கும்: குதிரையங்கத்தினின்று இவ்வாறான மணம்வீசின் நன்று: குரல் இன்னின்னபடியிருப்பின் நலம் முதலியனவும், மற்றும் அக்குதிரைகட்கு வருங்கொடியநோய் வகையும் அவற்றின் பரிகாரங்களும் என்பனஎல்லாம் தான் அறிவேனென்கின்றான். வெண்மை செம்மை கருமை பொன்மை என்ற நால்வகை நிறங்களிலும், வெள்ளி நித்திலம், மாதுளம்போது செம்பஞ்சி, வண்டு கார், அழல் உரோசனை முதலியவாகப் பலவற்றினொளி யமைதலும், குதிரைகள் - வநாயு பாரசீகம் காம்போசம் பாஹ்லீகம் என்றாற்போன்ற பல தேசங்களில் தோன்றுவன வாதலும் அறிக. குதிரையின்வடிவம் முதலியன குறித்துத் திருவிளையாடற்புராணம் முதலியவற்றிற் கூறியிருத்தல் காணலாம். மற்று - அசை. (உங)

24. மண்டலம்வீதிகோணமேமுதலாம்வாசிகளூர்தொழில்வல்லேன், றிண்டிறற்றடந்தேர்பூண்பதற்குரியசெயலுடைப்பரிகளுந்தெரிவேன், வண்டிமிரலங்கன்மாலையாய்பாண்டுமைந்தர்போய்வனம்புகுந்ததற்பி னுண்டியுமிழந்தேனுறுதியுமிழந்தேனுன்புகழ்கேட்டுவந்துற்றேன்.

(இ - ள்.) மண்டலம் - வட்டமும், வீதி - நேரும், கோணம்ஏ - வளைவும், முதல் ஆம் - முதலாகிய, வாசிகள் ஊர் தொழில் - குதிரையேறிச்

செலுத்துந்தொழிலில், வல்லேன்—: திண் திறல் - மிக்கவலிமையையுடைய, தட தேர் - பெரிய தேர்களிலே, பூண்பதற்கு - கட்டிச் செலுத்துவதற்கு, உரிய—, செயல்உடை - செய்கையைக் கொண்ட, பரிகள் உம் - குதிரைகளையும், தெரிவேன் - ஆராய்ந்தறியவல்லேன்: வண்டு இமிர் அலங்கல் மாலையாய் - வண்டுகளொலிக்கின்ற அசையுந்தன்மையுள்ள வெற்றிமாலை பூண்டுள்ள அரசனே! பாண்டு மைந்தர் - பாண்டவர், போய் - (நகரத்தை)விட்டுச் சென்று, வனம் புகுந்ததன் பின் - காட்டைச் சேர்ந்த பிறகு, [பாண்டவர் வனவாசத்திற் சென்றபின் என்றபடி], உண்டிஉம் இழந்தேன் - உண்ணும் உணவையும் இழந்தேன்: உறுதிஉம் இழந்தேன் - மனவுறுதியையும் இழந்திட்டேன்: உன் புகழ் கேட்டு—, வந்துஉற்றேன் - (இங்கே) வந்து சேர்ந்தேன்; எ - று.)

சிலகுதிரைகள் ஏறிச்செலுத்துதற்கு உரியனவாக, சிலகுதிரைகள் தேரிற் கட்டியோட்டுதற்கு உரியனவா மென்பது அறிக. (உச)

25.—விராடன் நகுலனைச் சன்மானித்து அவனுக்குக் குதிரைகட்கு அதிபதியாகும் பதவியையு மளித்தல்.

என்னவப்புரவியேற்றுநாயகன்வந்தியம்பியவின்மொழிகேட்டு,
மன்னவர்க்கெல்லாமொதுங்குநீணிழலாய்வயங்குமாமதிக்குடைமன்
னன், முன்னவர்க்குள்ளவரிசைகள்யாவுமும்மடங்காகவேவழங்கி, யந்
நகர்த்துரங்கமவையனைத்தினுக்குமதிபதியெனும்பதங்கொடுத்தான்.

(இ - ள்.) என்ன - என்று, அ புரவி ஏறு நாயகன் வந்து இயம்பிய - அந்தச்சிறந்த குதிரைகட்குத் தலைவனானவன் வந்துசொன்ன, இன் மொழி- இனியவார்த்தையை, கேட்டு - செவியேற்று,— மன்னவர்க்கு எல்லாம் ஒதுங்கும் நீள் நிழல் ஆய் வயங்கும் - அரசர்கட்கெல்லாம் வந்து ஒதுங்குதற்கு உரிய நீண்ட நிழலையுடையதாய் விளங்குகின்ற, மாமதி குடை - சிறந்த சந்திரன்போன்ற வெண்கொற்றக் குடையையுடைய, மன்னன் - விராடராசன்,—(வந்த அந்த நகுலனுக்கு), முன்னவர்க்கு - முன்னமே (தன்னிடத்துக்) குதிரைத்தலைவரா யமர்ந்திருப்பவர்க்கு, உள்ள—, வரிசைகள் யாஉம் - சிறப்புக்களையெல்லாம், மும்மடங்கு ஆக - மூன்றுமடங்கு மிகுதியாக அமையும்படி, வழங்கி - கொடுத்து,—அ நகர் துரங்கம் அவை அனைத்தினுக்குஉம் - அந்த அரண்மனையிலுள்ள குதிரைகள் எல்லாவற்றுக்கும், அதிபதி-தலைவன், எனும் - என்கின்ற, பதம்-பதவியையும், கொடுத்தான்—.

துரங்கம் - வேகமாகச் செல்வதென்று பொருள்படும் வடசொல். புரவி யேறுநாயகன் என்று பிரதிபேதம். (உரு)

26.—சகதேவன் இடையர்கோலத்தோடு விராடனது சபையைச்சேர்தல்.

கிளைபடுபுரவிபுரந்திடுந்தாமக்கிரந்திபாம்பெயர்புனைநகுலற்
கிளையவனந்தகோபன்மைந்தனைப்போலிடையர்தங்கோலமதெய்தித்

துளைபடுகுழையிலொருகுழையணிந்துதோளிலோர்தொடித்தடிதழுவி
விளைபுகழ்விராடன்வேத்தவையதனைவேறொருநாளையினடைந்தான்.

(இ - ள்.) கிளை படு - பல பகுப்புப்பொருந்திய, புரவி - குதிரையை, புரந்திடும் - காக்குந்தொழிலைத் தெரிந்த, தாமக்கிரந்தி ஆம் பெயர் புனை - தாமக்கிரந்தி யென்கிற பெயர்பூண்ட, நகுலற்கு—, இளையவன் - தம்பியாகிய சகதேவன், நந்தகோபன் மைந்தனை போல் - நந்தகோபனுடைய மகனாய் வளர்ந்த ஸ்ரீக்ருஷ்ணனைப்போல், இடையர்தம் கோலம் அது எய்தி-இடைக் கோலத்தைப் பூண்டு, துளை படு குழையில் - துளைபொருந்திய ஒரு காதிலே மாத்திரம், ஒரு குழை அணிந்து-ஒப்பற்றகுழையென்னுங் காதணியை யணிந்து, தோளில்—, ஓர் தொடி தடி தழுவி-ஒரு வளைவான தடியைத் தாங்கிக் கொண்டு, விளை புகழ் விராடன் வேந்து அவை அதனை - முதிர்ந்த புகழை யுடைய விராடமன்னனுடைய இராசசபையை, வேறு ஒரு நாளையின் - வேறொருதினத்திலே, அடைந்தான் - வந்து சேர்ந்தான்; (எ - று.)

க்ருஷ்ணனைச் சகதேவனுக்கு உவமை கூறியதனால், க்ஷத்திரியனானவன் இடைக்கோலத்தைக் கொண்டமையும் விளங்கும். குழையணிந்து - தளிரை யணிந்துஎன்றலும் உண்டு. குதிரையின் வகைகளைப் பற்றி "மங்காளன் சாரங் கன் கங்காநீலன்மௌவழகன் கொங்காளன் கன்னசம்பான்,குங்குமச்சோரான் கரியான்நீலன் சாரன் குலவுமள்ளான் உரஞ்சிவந்தான் நல்லான் பொல்லான், தங்குகருங்காற்சம்பான் என்று கூறுந்தன்மையுள" என்று திருவாதவூரர்புரா ணத்தும், "உயர்கனவட்டம் போரா னூனுளான் கொங்கான் கங்கான், மயில்வரி நீலான் பொல்லான் மகிழ்விதை மௌவான் சேயான், நயன வஞ் சனம் பொன் மாரி பாடல நளினி பச்சை, பயமிலாமரீசி கோரம் பட்டவர்த் தனங்கள்பாரே" என்று திருவாலவாயுடையார்திருவிளையாடற்புராணத் திலும், மற்றும் கல்லாடம் முதலியவற்றிலும் கூறியிருப்பது காண்க. (௨௬)

### 27.—சகதேவன் தான் கொண்ட கோலத்திற்கேற்ப, வினாவிய விராடனுக்குத் தன்னைத் தெரிவித்தல்.

ஆர்கொனீயென்னவறன்மகனுடனோராசனத்திருந்தபூபதியைச்
சீருறவேறோர்விரகினால்வணங்கிச்செப்பினனன்னசாதேவன்
பார்கொளநினைந்துசுயோதனன்விடுப்பப்படர்வனம்புகுந்தபாண்டவரிற்
றார்கொள்வேலிளையோன்றனதுகோபாலன்றந்திரிபாலன்யானென்றான்.

(இ - ள்.) (வந்த அவனை விராடராசன் பார்த்து), 'நீ ஆர் கொல்' என்ன - 'நீ யாவனோ?' என்றுவினாவ,— அன்ன சாதேவன் - அந்தச்சகதே வன், அறன்மகனுடன் ஓர் ஆசனத்து இருந்த பூபதியை - தருமபுத்திர னுடனே ஒரேயாசனத்திலே வீற்றிருந்த அந்தவிராடராசனை, வேறு ஓர் விர கினால் வணங்கி - வேறொருதந்திரத்தினால் வணங்கிவிட்டு, சீர் உற - சிறப்புப் பொருந்த, செப்பினன் - (பின்வருமாறு) கூறினான்: 'சுயோதனன் - துரியோதனன், பார் கொள - (பாண்டவருடைய) இராச்சியத்தைக் கவரும் பொருட்டு, நினைந்து—, விடுப்ப - (காட்டிற்குச்செல்லுமாறு) ஏவியனுப்ப,—

படர் வனம் புகுந்த பாண்டவரில் - விசாலமான காட்டிலே சேர்ந்த பாண்டவருக்குள், தார் கொள் வேல் இளையோன் தனது-வெற்றிமாலையையணிந்து வேல்தாங்கிய இளைய தம்பியாகிய சகதேவனுடைய, கோபாலன் - பசுக்களைக் காப்பவன், யான்—: தந்திரிபாலன் - தந்திரிபாலனென்னும் பெயருடையேன்,' என்றான் - என்று விடைகூறினன்; (எ - று.)

விராடன் தன்னைவணங்கினனென்று நினையாநிற்கத் தருமனை வணங்கினனென்பார் 'பூபதியைச் சீருற வேறோர்விரகினால் வணங்கி' என்றார். ()

28.—விராடன் வந்தவனை யுபசரித்து நிரைக்காவல னாக்க, அவன் கோபாலர்க்கெல்லாந் தலைவனாதல்.

ஆங்கவனிவ்வாறுரைத்தலுமவனையருகுறவருகெனவழைத்துப்,
பாங்குறத்தக்கவழக்கமும்வழங்கிப்பல்வகைநிரைகளுநீயே, யீங்குமப்
படியேபுரத்தியென்றுரைத்தானிவனுமவ்வரசனேவலினாற், றீங்கறக்
கைக்கொண்டவ்வவர்க்கெல்லாந்தகைபெறுஞ்செம்மலாயினனே.

(இ - ள்.) ஆங்கு - அப்போது, அவன் - அந்தச்சகதேவன், இ ஆறு உரைத்தலும் - இப்படிச்சொன்னவுடனே, அவனை—, வருக என - வருவாயாக என்றுசொல்லி, அருகு உற அழைத்து - சமீபத்திலேபொருந்தக் கூப்பிட்டு, பாங்கு உற தக்க - இனிமைபொருந்தத் தகுதியான, வழக்கம் உம் - வரிசைகளையும், வழங்கி-கொடுத்து, (அவனைநோக்கி),— 'அப்படி ஏ-சகதேவனிடத்துப்போலவே, ஈங்கு உம்-இங்கேயும், பல்வகை நிரைகள் உம்-பலவகைப்பட்ட பசுக்கூட்டங்களையும், நீயே—,புரத்தி-பாதுகாப்பாய்,' என்று—,உரைத்தான் - (விராடராசன்)சொன்னான்:இவன்உம் - இந்தத் தந்திரிபாலனும், அ அரசன் ஏவலினால் - அந்தவிராடராசனுடைய கட்டளையினால், தீங்கு அற - துன்பமில்லாமல், கைக்கொண்டு - (நிரைகளைத் தன்) வசத்திற்கொண்டு, அ அவர்க்கு எல்லாம்-ஏற்கவேயிருந்த இடையர்கட்கெல்லாம், தகை பெறும் - பெருமைபெற்ற, செம்மல் ஆயினன் - தலைவனாயினன்; (எ - று.)

வழக்கம் - கௌரவமாக வழங்கப்படுவது: வரிசை: செயப்படுபொருள் விகுதி பெற்ற பெயர். (உஅ)

வேறு.

29.—திரௌபதி வண்ணமகளாகி, விராடமன்னவனுடைய தேவியின் கோயிலை நாடி யடைதல்.

ஓமமக வாரழலி னூடுருவு யிர்க்கு
மாமயிறி ரௌபதியும் வண்ணமக ளாகித்
தேமருவு தார்முடிவி ராடனிரு தோள்சேர்
கோமகளை நாடியவள் கோயிலிடை புக்காள்.

(இ - ள்.) ஓமம் மகம் ஆர் அழலினூடு - ஓமஞ்செய்த யாகத்தின் நிரம்பிய நெருப்பினிடையிலே, உரு உயிர்க்கும் - உருவங்கொண்டு வெளிப்

பட்ட, மா மயில் - சிறந்த மயில்போன்ற, திரௌபதிஉம்—, வண்ணம் மகள் ஆகி - மகளிர்க்கு அலங்காரஞ்செய்யும் பணிப்பெண் வடிவுகொண்டு, தேன் மருவு தார் முடி விராடன் இரு தோள் சேர் - தேன் பொருந்திய மாலைசூடிய முடியையுடைய விராடனுடைய இரண்டுதோளையுஞ் சேர்ந்த, கோமகளை - இராணியை, நாடி - அடையவிரும்பி, அவள் கோயிலிடை - அந்தஇராணியின் அரண்மனையிலே, புக்காள் - புகுந்தாள்; (எ - று.)—விராடன் தேவியின் பெயர் - சுதேஷ்ணை யென்பது.

இதுமுதற் பத்துக்கவிகள் - பெரும்பாலும் முதல்மூன்றுசீர்கள் விளங்காய்ச்சீர்களும் ஈற்றுச்சீரொன்று மாச்சீருமாகிவந்த அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள். (உகூ)

30.—வண்ணமகள் வந்திருந்தலை வாயில்காவலர் தெரிவிக்க, விராடன்மனைவி உள்ளே யழைத்துமாறு கூறுதல்.

மதுமலரின்வாழ்திருவும்வந்துதொழவுரியா
ளொதுமலினளாகியொருநுண்ணிடைநடந்தாள்
பதுமவிழியாயெனலும்வாயிலவர்பால்போன்
மதுரமொழியாளழைமின்வாணுதலையென்றாள்.

(இ - ள்.) வாயிலவர் வாயிலிலேயிருந்து பாதுகாவல் புரிபவர், (சுதேஷ்ணையைக்கிட்டி அவளைநோக்கி),— 'பதுமம் விழியாய் - தாமரைமலர் போன்ற கண்களையுடையவளே! மது மலரின் வாழ் திருஉம் வந்து தொழ உரியாள் - தேனைக்கொண்ட தாமரைமலரில் வாழ்பவளாகிய இலக்குமியும் வந்துதொழுதற்குஉரிய கட்டழகுடையவளான, ஒரு நுண் இடை - நுண்ணிய இடையையுடையாளொருத்தி, நொதுமலினள் ஆகி - சாதாரண மானுடப்பெண் போன்று, நடந்தாள் - வந்துள்ளாள்,' எனலும் - என்று தெரிவித்தவுடனே,— பால்போல் மதுரம் மொழியாள் - பால்போல்இனிய பேச்சையுடையவளான அந்த விராடன் மனைவி, (அங்ஙனம் சொன்ன வாயில்காவலரை நோக்கி),— 'வாள் நுதலை - ஒளியுள்ள நெற்றியையுடையவளான அந்தப் பெண்ணை, அழைமின் - (உள்ளே) அழைத்துவாருங்கள்,' என்றாள் - என்று கூறினாள்; (எ - று.)

வந்தவளின் கட்டழகைக் காணும்போது பெருஞ்சிறப்பினளாயிருக்க வேண்டுமென்று தோன்றுகின்றதாயினும், சாதாரணமான வறுமையுள்ள பணிப்பெண்கோலத்தைப் பூண்டுள்ளா ளென்பார், 'மதுமலரின்வாழ்திருவும் வந்து தொழவுரியாள் நொதுமலினளாகி நடந்தாள்' என்றார். நுண்ணிடை - பண்புத்தொகை யன்மொழி. வாணுதல்-அடையடுத்த சினையாகுபெயர். (௩௦)

31.—அரசன்மனைவி வந்தவளையுபசரித்துப் பின் வினவுதல்.

வந்தவளிருந்தவண்மருங்கணையும்வேலை
யந்தணுபசாரமுடனருகுறவிருத்திச்
சந்தொடகில்பூவிலைகடகவுடன்வழங்கி
யெந்தநகரூரையின்யாமுணரவென்றாள்.

(இ - ள்.) வந்தவள் - (வண்ணமகளின் வடிவுகொண்டு) வந்தவளான அவள், இருந்தவள் மருங்கு - அரண்மனையிலேயிருந்த அரசமனைவியின் பக்கத்திலே, அணையும் வேலை - வந்துசேர்ந்தபோது, (அரசன்தேவி),—அம் தண் உபசாரமுடன் - அழகிய குளிர்ந்த உபசாரத்துடனே, அருகுஉற இருத்தி - (தன்) சமீபத்திலே தங்கியிருக்குமாறு இருப்பிடந்தந்து,—சந்தொடு - சந்தனமும், அகில் - அகில்தூபமும், பூ - புஷ்பமும், இலைகள் - வெற்றிலைகளும், தகவுடன் - சிறப்பாக, வழங்கி - தந்து, '(நீர்), எந்த நகரீர் - எந்தநகரத்தீர்? யாம் உணர உரைமின் - நாங்கள் அறியும்படி சொல்லுங்கள்', என்றாள் - என்று வினவினாள்; (எ - று.)

எளியவள்போன்றுவந்தவளையும் விராடன்மனைவி உபசரித்தனளென்றமையால், அவளது தருக்கின்மைமுதலிய நற்பண்புகள் வெளியாம். (ந௧)

32.—மூன்றுகவிகள் - ஒருதொடர்: வந்தவள் தன்னையின்னாளென்று தெரிவித்து, தான் வந்த நோக்கத்தையும் தெரிவித்தல்.

தான்விரதமாயைபுரிசகுனிபொருசூதாற்
கான்விரதமாகவுறைகாவலர்கள்கோயின்
மான்விரதநோக்கியர்மருங்குறவிருந்தேன்
யான்விரதசாரிணியெனும்பெயரினாளே.

(இ - ள்.) தான் - சுயமாக, விரதம் மாயை புரி - விரஸமான [திருப்தி விளைக்காத வெறுப்பைவிளைக்கிற] வஞ்சனையைச் செய்கின்ற, சகுனி - சகுனியென்பான், பொரு - ஆடின, சூதால் - சூதாட்டத்தால், கான் விரதம் ஆக உறை - காட்டில்வசித்தலை விரதமாகக் கொண்டு வாழ்ந்த, காவலர்கள் - அரசர்களாகிய பாண்டவர்களின், கோயில் - அரண்மனையிலே, மான் விரதம் நோக்கியர் - மான்கள் (தோற்று) ஒழிவதற்குக்காரணமான கண்ணழகையுடைய (அப்பாண்டவரின்) இராணிமாரின், மருங்கு - சமீபத்திலே, உற - பொருந்த, இருந்தேன் —: யான் —,—விரதசாரிணி எனும் பெயரினாள் - விரதசாரிணியென்ற பேரையுடையேன்: (எ - று.)—விரதசாரணியென்று பிரதிபேதம்.

இந்தச்செய்யுளில் திரிபு என்னும் சொல்லணி காண்க. விரதம் என்பது முதலடியில் விரஸமென்ற வடசொல்லின் திரிபும், இரண்டாமடியில் வ்ரதமென்ற வடசொல்லின் திரிபும் ஆம்: மூன்றாமடியில் விரதம் என்பது - ஒழிந்திடுகை யென்ற பொருளுள்ள வடசொல். யான் விரதசாரிணி யெனும் பெயரினாள் - தன்மையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி. வ்ரதசாரிணீ என்ற வடசொல் - வ்ரதத்துடன் நடப்பவள் என்று பொருள் படும். (ந௨)

33. பூசுவனசுற்றுவனபூண்பனமுடிப்ப
தேசொடுவனப்புநனிதிகழும்வகையணிவேன்
வாசவனொடொத்தமனுகுலவரசன்மனைவி
யேசறவுனக்கெனுவையாகுவதெனென்னும்.

(இ - ள்.) பூசுவன - (உடம்பிற்) பூசுதற்கு உரிய கலவைச்சாந்து முதலியனவும், சுற்றுவன - சுற்றிக்கட்டவேண்டிய மாலை முதலியனவும், பூண்பன - பூணுதற்கு உரிய ஆடையணிகலன்களும், முடிப்ப - முடிக்கவேண்டிய கூந்தல்தார் முதலியனவும், தேசொடு வனப்பு நனி திகழும் வகை- ஒளியோடு அழகும் மிகவும்விளங்கும்படி, அணிவேன் - அலங்காரமுறச் செய்வேன்; வாசவனோடு ஒத்த மனுகுலம் அரசன் மனைவி - இந்திரனோடொத்தவனும் மனுகுலத்துத் தோன்றியவனுமான விராடராசனுடைய மனைவியே! உனக்கு—, ஏசு அற - குற்றமில்லாமல், ஏவுவை ஆகுவது - தோழியாக அமைய வேண்டுமென்பது, என் எண்ணம் - என்கருத்தாம்; (எ - று.) (௩௩)

34. எந்தைமனையிற்பயிலிளம்பருவநாளிற்
கந்தருவர்காவல்புரிகற்புடையளானே
னிந்துநுதலாய்மனிதர்யார்முகமுநோக்கேன்
வந்தனெனின்மாளிகையின்வைகும்வகையென்றாள்.

(இ - ள்.) எந்தை மனையில் - என்தந்தையினுடைய வீட்டில், பயில் - வாழ்ந்த, இளம்பருவம் நாளில்- இளம்பருவத்தினத்தில்(தொடங்கி), கந்தருவர் காவல் புரி - கந்தருவர் (யாதொருதீங்கும் வராமற்) காவல்செய்கின்ற, கற்பு உடையள் ஆனேன் - கற்பையுடையவளானேன்: இந்து நுதலாய் - சந்திரன் போன்ற முகத்தையுடையவளே! மனிதர் யார் முகம்உம் நோக்கேன் - எந்த மனிதருடைய முகத்தையும் கண்ணெடுத்துப் பாரேன்: நின் மாளிகையின் வைகும் வகை - உன்வீட்டிலே தங்கிவாழும்படி, வந்தனென் - (இப்போது) வந்துள்ளேன், என்றாள் - என்று கூறினாள், (அந்த வண்ணமகள்); (எ - று.)

கீழாண்டுகவிகளால், தான் இன்னாளென்பதையும், தனக்குத்தெரிந்த தொழிலையும், தான் அங்குவந்ததன் நோக்கத்தையும் தெரிவித்தவள், இந்தச் செய்யுளினால், தான் வலியோராற் பாதுகாக்கப்படும் கற்புடையளென்பதைக் கூறுகின்றாள். 'உனக்குஏவுவையாகுவதெனெண்ணம்' என்று கீழ்க் கவியிற் கூறியதனால், 'நின்மாளிகையின் வைகும்வகை வந்தனன்' என்று இங்குக்கூறியது-அனுவாதமென்க: நான் உன்மாளிகையில் வண்ணமகளாக வாழ்வேனென்றாலும், என்கற்பிற்கு இழுக்குமுண்டாக்க எவராலும் ஆகாதென்று கூறியவாறு. (௩௪)

35.—வண்ணமகள்கூறியதுகேட்டுச் சுதேஷ்ணை
தன்னிடத்து வண்ணமகளாக இருக்குமாறு பணித்தல்.

வண்ணமகள்கூறியவைமகிழ்வினொடுகேட்டுத்
துண்ணெனவெரீஇயினள்சுதேட்டிணைவிரும்பி
விண்ணவர்கள்பாவையரின்மேவுதியெனக்குக்
கண்ணிணையுநீயுனதுகாவலெனதுயிரும்.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) துண்ணென வெரீஇயினள் - (வந்தவளைக்கண்டதும்) திடுக்கிட்டு அஞ்சினவளான, சுதேட்டிணை—,—வண்ணமகள்—, கூறியவை -

சொன்னவற்றை, மகிழ்வினொடு கேட்டு - மகிழ்ச்சியோடு செவியேற்று, விரும்பி-(அவளிடத்து) அன்புபாராட்டி, (அவளைநோக்கி), '(நீ), விண்ணவர்கள் பாவையரின் - தேவமாதர்போல், மேவுதி - இனிதுதங்கியிருப்பாய்: எனக்கு கண் இணை உம் நீ-நீ எனக்கு இரண்டுகண்களையும் போல்வாய்: எனது உயிர்உம் - என்பிராணனும், உனது காவல் - உன்காவற்கு (உட்பட்டது).

பேரழகினளாகிய திரௌபதியைக் கண்டதும் ஒருகால் அரசன் நம்மையுபேட்சித்து இவளை மணந்துகொண்டுவிடுவானோ என்று சங்கைகொண்டாளென்று முதனூலிற் கூறியிருப்பதற்கு ஏற்ப, 'துண்ணென வெரீஇயினள்' என்றது. இனி, 'கந்தருவர் காவல்புரிகற்புடையளானேன்' என்று கூறியதைக் கேட்கவே, நம்மிடத்து இவள்வசிக்கும்போது, இவள்கற்புக்குக் கீசகன் முதலியோர் தீங்கிழைக்க முயலாமலிருக்கவேணுமே என்று கருதித் துண்ணென வெரீஇயினளென்றதெனவுமாம். கந்தருவர்காவல்புரி கற்புடையேனென்று கீழ்க்கூறியதனால், தெய்வமகளோ எனக் கருதி வெரீஇயினள் என்பாருமுளர். (௩௫)

36.—வண்ணமகளாகிய திரௌபதி சுதேஷ்ணையினிடம் அன்னாட்கு வேண்டியவற்றைச் செய்துகொண்டிருத்தல்.

அன்னையெனுமாறுநெறியானமுறைகூறி
யென்னருகிருத்தியெனவெரியின்வருமின்னு
மின்னனையநுண்ணிடைவிராடபதிதேவிக்
கெந்நலமுநாடொறுமியற்றினளிருந்தாள்.

(இ - ள்.) அன்னை எனும் ஆறு - தாய்என்று கருதுமாறு, (மிக்க அன்போடு), நெறி ஆன முறை - நீதிக்குஏற்ற முறையுள்ள வார்த்தைகளை, கூறி - சொல்லி, 'என் அருகு இருத்தி - என்னுடைய சமீபத்தில்தானே இருப்பாய்,' என - என்று (அந்தச்சுதேஷ்ணை) கூற,—எரியின் வரு மின் உம்- அக்கினியினின்றுதோன்றிய மின்னல்போன்றவளான அந்தத்திரௌபதியும், மின் அனைய நுண் இடை விராடபதி தேவிக்கு-மின்னல்போன்ற நுண்ணிய இடையையுடைய விராடராசாவின் மனைவிக்கு, எ நலம் உம்-எப்படிப்பட்ட [மிகச்சிறந்த] அழகிய கோலத்தையும், நாடொறுஉம் - தினந்தோறும், இயற்றினள் - செய்தவளாய், இருந்தாள் - வசித்துவந்தாள்; (எ - று.)

திரௌபதியாகிய வண்ணமகள், சுதேட்டிணைக்கு ஆடை அணிகலன் கூந்தல்முதலியவற்றை இனியவாகப்புனைந்துகொண்டு வசித்துவந்தனளென்பதாம். இயற்றினள் - முற்றெச்சம். (௩௬)

37.—பாண்டவர் மச்சநாட்டில் மறைந்துதங்கியிருந்தபோது அந்நாடு மிகவுஞ் செழித்திருந்தல்.

மைவருதடங்கண்மடமானுமதிமரபோ
ரைவருமறைந்தனர்களாயுறையுநாளின்

மெய்வருவழாமொழிவிராடபதிதிருநா
டுய்வருபெருந்திருவொடோங்கியதையன்றே.

(இ - ள்.) மை வரு தட கண் மடம் மான் உம் - கருநிறம்பொருந்திய பெரியகண்களையும் மடப்பத்தையுமுடைய மான்போன்றபார்வையையுடைய திரௌபதியும், மதி மரபோர் ஐவர் உம் - சந்திரகுலத்தவரான பாண்டவரைவரும், மறைந்தனர்கள் ஆய்—, உறையும் - வசித்துவந்த, நாளில் - அக்காலத்திலே,— மெய் வரு - உண்மையே வருகின்ற, வழா - (ஒருபோதும்) தவறுத, மொழி - பேச்சையுடைய, விராடபதி திருநாடு-விராடராசனுடைய சிறந்த மச்சநாடானது, உய்வு அரு - நீங்குதலில்லாத, பெருந் திருவொடு - மிக்கசெல்வத்தோடு, ஓங்கியது - மேன்மையுற்றிருந்தது; (எ-று.)

உத்தமோத்தமரான பாண்டவர் வசித்தலால், அந்நாடு எந்நாட்டினும் மேம்பட்டிருந்த தென்பதாம். மறைந்தனர்களாயுறைதல் - அஜ்ஞாதவாசஞ் செய்தல். அன்றே - ஈற்றசை. ஓங்கியதை என்பதில், ஐ - சாரியை. (௩௭)

38.—இதுவும் அது.

குருக்களவனூரினிடைகுருநிலனொடொப்புற்
றிருக்கும்வழிமாமழையுமெவ்விளைவும்விஞ்சித்
தருக்கினுடன்யானைமுதறானைகளும்விஞ்சிச்
செருக்குமுடன்விஞ்சியதுசெப்பவரிதம்மா.

(இ - ள்.) குருக்கள் - குருவமிசத்தவரான பாண்டவர்கள், அவன் ஊரினிடை-அந்தவிராடனுடைய நகரத்திலே, குருநிலனொடு ஒப்புஉற்று-குருநிலத்தில் வசிப்பதுபோன்று [தமக்குஉரியஊரில் வாழ்வதுபோன்று], இருக்கும் வழி-(இனிது)வசிக்கும்போது,—மா மழைஉம்-மிக்க மழையும்,எ விளைவு உம் - எப்படிப்பட்ட [பலவகையான] விளைவும், விஞ்சி - மிகுந்து,— யானை முதல் தானைகள்உம் தருக்கினுடன் விஞ்சி - (நாட்டின்செழிப்பினால் நன்கு போற்றப்படுவதனால்) யானைமுதலிய சேனைகளும் தருக்கு மிக்கு, (ஊர்முழுதும்), செருக்குஉம் - வளமும், உடன் விஞ்சியது - ஒருசேர [எங்கும்] மிக்கிருந்தது: (அதனால் அந்தஊரின்தன்மை), செப்ப அரிது - (இன்னபடியிருந்ததென்று) சொல்லுதற்கு முடியாது; (எ - று.)

அம்மா - வியப்பிடைச்சொல்: பாண்டவர்கள் அஜ்ஞாதவாசஞ் செய்வதனால், அவ்வூர் வாய்கொண்டு சொல்ல முடியாதபடி அவ்வளவு செழிப்பு விஞ்சியது குறித்து வியந்தவாறு. (௩௮)

நாடுகரந்துறை சருக்கம் முற்றிற்று.

---

4

### இரண்டாவது

# மற்போர்ச்சருக்கம்.

மற்போரைப்பற்றிய சருக்கமென்று விரியும். வேற்றுநாட்டினின்று வந்து 'மற்போரில் என்னினும் மிக்கார் இல்லை' என்று தருக்கிய மகாமல்லனுடன் வீமன் மற்போர்புரிந்து வென்றதைக் கூறுவது, இந்தச்சருக்கம்.

**1.—மல்லனொருவன் மற்போரில் ஒப்பற்றவன் என்று சொல்லிக்கொண்டு அந்தவிராடநகர்க்கு வருதல்.**

அல்லினுக் கிந்து வென்ன வாங்கவ ருறையு நாளில்
வில்லினுக் கிராம னென்ன வேலினுக் கிளையோ னென்னச்
சொல்லினுக் குததி தோய்கைத் தொன்முனி யென்ன வன்போர்
மல்லினுக் கொருவன் யானே வாசவ னென்று வந்தான்.

(இ - ள்.) அல்லினுக்கு - இராப்போதில், இந்து என்ன - சந்திரன் சிறப்புற்றிருப்பதுபோல, (மிக்கசிறப்புற), ஆங்கு - அந்தவிராடநகரிலே, அவர் - அந்தப்பாண்டவர், உறையும் - வசித்துவருகின்ற, நாளில் - காலத்தில்,—'வில்லினுக்கு இராமன் என்ன - வில்வித்தையில் ஸ்ரீராமன்போலவும், வேலினுக்கு - வேற்படையில், இளையோன் என்ன-(சிவபிரானுடைய) இளையகுமாரனாகிய முருகக்கடவுள்போலவும், சொல்லினுக்கு - தமிழ்மொழிக்கு, உததி தோய் கை - சமுத்திரம்படிந்த கைகளையுடைய, தொல் முனி என்ன - பழமையான அகத்தியமுனிவன்போலவும், வல் மல் போரினுக்கு - உடல் வலிமைகொண்டுசெய்யப்படுகிற மல்லயுத்தத்திற்கு, வாசவன் - வாசவனாக, யானே - யானே, ஒருவன் - ஒப்பற்றவன்,' என்று - என்று சொல்லிக்கொண்டு, (ஒருமல்லவீரன்), வந்தான் - (அந்தவிராடநகரில்) வந்துசேர்ந்தான்; (எ - று.)

சொல் - பாஷா என்றவடசொல்லின் மொழிபெயர்ப்பு. உததிதோய்கைத்தொன்முனி யென்று வருவதனால், சொல் - தமிழ்ச்சொல்லைக் காட்டிற்று. சூரபத்மாஎன்ற அசுரன் கடலிற் புகுந்துகொண்டானாக, அப்போது அகத்தியமுனிவன் தேவர்களின் வேண்டுகோளினால் கடனீரைத் தன்கைச்சுளுகத்தி லடக்கி, ஆசமனஞ் செய்தா னென்ற வரலாறுபற்றி, 'உததி தோய்கைத் தொன்முனி' என்றது. முதனூலில், வந்தமல்லன்பெயர் ஜீமூதனென்று இருப்பதனாலும், மல்லேந்திரனென்று அன்னான் கூறப்படுவதனாலும், வாசவன் என்பதைப் பேராகக் கொள்ளாமல், 'மல்லினுக்கு வாசவன் யான் ஒருவனே'என்று கூட்டியுரைக்கப்பட்டது. பாண்டவர் வந்து நான்குமாதம் கழிந்ததும், விராடநகரத்தில் சங்கரவுத்ஸவம் வந்ததாக, அப்போது பலமல்லர்களும் ஆங்கு வந்தனர்: அங்ஙனம் வந்தவர்களுள் ஒருவன் என்னில் மிக்காரில்லையென்று தன்னைப் பாராட்டிக்கூறிக்கொண்டு வந்தா னென்ற விவரத்தை முதனூலா லறிக. அல்லினுக்கு இந்துஎன்ன என்பதற்கு - இரவில் வானத்துத் தோன்றும் பல சோதிகளுள் சந்திரன்

போல என்றுஉரைத்து, இத்தொடரையும் போர்மல்லினுக்கு ஒருவன்யானே என்பதனோடு கூட்டுவாருமுளர்.

இச்சருக்கத்திலுள்ள பதினான்குகவிகளும் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றவை மாச்சீர்களுமாகிவந்த அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தங்கள். (க)

2 —அந்த மல்லனது வருணனை.

அண்டமாமுகடோடொத்தசென்னியனவனிமுற்றுங்
கொண்டமாமேருவொத்தகுங்குமக்கடகத்தோளான்
சண்டமாருதத்தோடொத்தவலியினன்றந்தியெட்டின்
கண்டமார்முகத்தினீண்டகையெனத்திரண்டகாலான்.

(இ - ள்.) (அந்தமல்லன்),— அண்டம் மா முகடோடு ஒத்த - அண்டத்தின் பெரிய மேலிடத்தையொத்த [ஓங்கிய], சென்னியன்-தலையையுடையவன்: அவனி முற்றும் - பூமிமுழுவதையும், கொண்ட - தாங்கிக்கொண்டுள்ள, மா மேரு ஒத்த - சிறந்த மேருமலைபோன்ற, குங்குமம் கடகம் தோளான் - குங்குமச்சேறுபூசிய கடகமென்ற தோள்வளையையணிந்த தோளையுடையவன்: சண்டமாருதத்தோடு ஒத்த - கொடுங்காற்றோடு ஒப்பிடத்தக்க, வலியினன் -பலத்தையுடையவன்: தந்தி எட்டின் - அஷ்ட திக்கஜங்களின், கண்டம் ஆர் முகத்தின் - கழுத்தையொட்டியுள்ள முகத்தினின்று, நீண்ட - நீண்டுள்ள, கை என - துதிக்கைபோல, திரண்ட - திரண்டுள்ள, காலான் - கால்களையுடையவன்; (எ - று.)

மேருமலை பூமியினிடையேயிருந்து அதனைத் தாங்குவதென்ற நூற்கொள்கைபற்றி, 'அவனிமுற்றுங் கொண்ட மாமேரு' எனப்பட்டது. தந்தி-தந்தத்தையுடையது என யானைக்குக் காரணவிடுகுறி. தந்தி எட்டு - கிழக்கு முதலிய திக்குக்களிலிருக்கும் ஐராவதம் புண்டரீகம் வாமனம் குமுதம் அஞ்ஜநம் புஷ்பதந்தம் ஸார்வபௌமம் ஸுப்ரதீகம் என்ற தெய்வயானைகள். தந்திக்கையை யுவமமாகக் கூறியதனால், இங்கு 'கால்' என்றது - அரைக்குக் கீழ்ப்பட்டுள்ள துடைமுதற்கொண்டுள்ள பகுதியைக் காட்டும்.

3.—அந்தமல்லன் பலமல்லர் தன்னைச் சூழ்ந்துவர, விராடனவைக்களத்தை யடைதல்.

ஆயிரமல்லர்தன்னையணிநிழலென்னச்சூழப்
பாயிரும்புரவித்திண்டேர்மிசைவரும்பரிதிபோல
மாயிருஞாலந்தன்னின்மற்றிவற்கெதிரின்றென்னச்
சேயிருந்தடக்கைவேந்தன்றிருந்தவையதனைச்சேர்ந்தான்.

(இ - ள்.) ஆயிரம் மல்லர் - பலமல்லர்கள், தன்னை —, அணி நிழல் என்ன - அழகிய நிழலைப்போல, சூழ - சூழ்ந்துவர,—பாய் இரு புரவி திண் தேர்மிசை வரும் பரிதி போல - பாய்ந்துசெல்லும் இயல்புள்ள பெரிய குதிரைகள் பூட்டிய வலிய தேர்மீதுவரும் சூரியன்போல், (பாயிரும் புரவித்

திண் தேர்மிசை வந்து),—மா இரு ஞாலந்தன்னில் இவற்கு எதிர் இன்று என்ன - மிகப்பெரியபூமியிலே இந்தமல்லற்கு ஒப்பானவர் இல்லையென்று (கண்டவர்) சொல்லுமாறு, சேய் இருந் தட கை வேந்தன் - செவ்விய பெரிய நீண்ட கைகளையுடைய விராடராசனது, திருந்து அவை அதனை - திருத்த முற்ற சபையை, சேர்ந்தான் - வந்தடைந்தான்; (எ - று.)

சூரியனுக்கு எங்ஙனம் ஒப்பான கிரகம் வானத்திலில்லையோ அவ்வாறே இந்தமல்லனுக்கு ஒப்பானவர் இப்பூவுலகிலில்லை யென்று சொல்லுமாறு மிக்கஆடம்பரஞ்செய்துகொண்டு நிழல்போல ஆயிரமல்லர் தன்னைச் சூழ்ந்து நிற்க, விராடனுடைய அவைக்களத்தை அந்தமல்லன் வந்துசேர்ந்தானென்க. கற்றோர்பலர் சேர்ந்திருத்தலால், விராடனுடைய சபை, திருந்தவையெனப் பட்டது. வந்தமல்லன் தேர்மீதூர்ந்துவந்தா னென்று மேல் ஏழாம்பாட்டிற் பெறப்படுவதனால், அவனுக்குத் திண்தேர்மிசை வரும் பரிதியை உவமை கூறினார். (௩)

4.—வந்தவன் 'மற்போருக்கு என்னைப்போன்றவ ரில்லை' என்ன, விராடன் அவனுக்குச் சிறப்புச்செய்து தன்னிடமுள்ள மல்லரை நோக்குதல்.

மன்னனைவணங்கிநின்றுவலியுடைமல்லின்போருக்
கென்னலதில்லையிந்தவெழுகடல்வட்டத்தென்றான்
கொன்னவில்வேலினானுங்கொடுப்பனகொடுத்துமுன்னந்
தன்னுழைவைகுமல்லர் தங்களைநோக்கினானே.

(இ - ள்.) (வந்த மல்லவீரன்), மன்னனை - விராடராசனை, வணங்கி நின்று—, 'வலி உடை - தேகபலத்தைக்கொண்டுசெய்கின்ற, மல்லின் போருக்கு - மற்போரிலே, (மிக்கவர்), இந்த எழு கடல் வட்டத்து - எழு கடல்களாற் சூழப்பட்ட இந்தப் பூமண்டலத்தில், என் அலது - என்னை யல்லாமல், இல்லை - (வேறொருவரும்) இல்லை,' என்றான் - என்று (தன் திறமையைத்) தெரிவித்தான்; கொல் நவில் வேலினான் உம் - கொல்லு தற்றொழிலிற் பயின்ற வேற்படையையுடைய விராடராசனும், கொடுப்பன -(அவனுக்குக் கொடுக்கத்தக்க) சிறப்புக்களை, கொடுத்து—, முன்னம் - (அந்த மல்லவீரன் வருதற்கு) முன்னமே, தன் உழை வைகும் - தன்னிடத்துத் தங்கியுள்ள, மல்லர் தங்களை - மல்லர்களை, நோக்கினான்—; (எ - று.)

தன்னுழைவைகும் மல்லர்களை நோக்கியது - 'என்னினும்மிக்க மல்லர் இந்தப்பூமண்டலத்தி லில்லை' என்று கூறுவதனால், இவனுடன் மற்போர் செய்து வெல்லவேண்டு மென்பதைக் குறிப்பிக்க வாகும். (௪)

5.—மற்றொழிலில் வல்லவர் அநேகர் அந்தமல்லனுடன்தனித்தனி பொருதல்.

அந்தமற்றொழிலின்மிக்கோரநேகர்நீடசனியொப்பார்
வந்தமற்றவன்றன்னைவருதியெம்மொடென்று
முந்தமற்கலைநூல்சொன்னமுறைமையினரசன்காணச்
சந்தமற்சமரஞ்செய்தார் தனித்தனியொருவராக.

(இ - ள்.) அந்த மல் தொழிலில் - (வந்த மல்லவீரன் வல்லமைபெற்றுள்ள) அந்த மற்போர்த் தொழிலிலே, மிக்கோர் - மிகவல்லவரான, அநேகர்—, நீடு அசனி ஒப்பார்-பேரிடியை யொப்பவராய் (க்கர்ச்சித்துக்கொண்டு); வந்த—, மல் தலைவன் தன்னை - மல்லர்தலைவனை, 'எம்மொடு - எம்முடனே, நீ—, வருதி-(மற்போர்செய்ய)வருவாய்,' என்று-என்று அறைகூவி,—அரசன் காண - விராடமன்னவன் கண்டுகொண்டிருக்க, முந்த - விரைவாக, மல் கலை நூல் சொன்ன முறைமையின் - மற்போர்த்தொழிலைப்பற்றிய சாஸ்திரஞ் சொன்ன முறைமையினால், சந்தம் மல் சமரம் - அழகிய மற்போரை, தனித் தனி ஒருவர் ஆக - தனித்தனியே ஒவ்வொருவராக, செய்தார்—.

கலை - சாஸ்த்ரம். போர்க்கு வரும்போது பெருமுழக்கஞ் செய்துகொண்டு வருவதனால், அசனியை யொப்பார் என்றது. (ரு)

6.—இதுவும் அடுத்த கவியும் - குளகம்: அரசனிடத்திருந்த மல்லர் வந்தமல்லனோடு தனித்தனிபொருது தோற்க, அரசன் வந்தவனை விசேஷமாகச் சம்மானித்தலைக் கூறும்.

தத்தியுந்தோளுந்தோளுந்தாக்கியுஞ்சென்னிகொண்டு
மொத்தியும்பற்பல்சாரிமுடுகியும்வயிரக்கையாற்
குத்தியுங்காலுங்காலுங்கோத்துமற்கூறுதோன்ற
வொத்தியும்பாறையென்னவுரனுடனுரங்கள்சேர்த்தும்.

(இ-ள்.) தத்தி உம்-தாவியும், தோள்உம் தோள்உம் தாக்கிஉம்-தோளுடன் தோள் பொருந்த மோதியும், சென்னி கொண்டு மொத்திஉம் - தலையைக்கொண்டு இடித்தும், பல் பல் சாரி முடுகிஉம் - பலபல சாரிகளால் விரைந்தும், வயிரம் கையால் குத்திஉம் - வயிரம்போலுறுதியான கைம்முஷ்டிகளாற் குத்தியும், கால்உம் கால்உம் கோத்துஉம் - காலுடன் கால் சேரப் பின்னியும், மல் கூறு தோன்ற - மற்போரின் கூறுபாடு புலப்பட, ஒத்திஉம்-சிறிதுபின்னிடைந்தும், பாறை என்ன உரனுடன் உரங்கள் சேர்த்தும் - பாறை ஒன்றோடொன்று சேர்க்கப்படுவதுபோல மார்போடு மார்பைச் சேர்த்தும்,—(எ - று.)—'ஆரம ருடற்றி' என அடுத்த கவியோடு இயையும்.

'ஓரொருமல்லராக ஆரமருடற்றி' என மேல் வருவதனால், 'உரனுடனூரத்தைச் சேர்த்தும்' என்று பாடமிருப்பின் நலம். சாரி - வலப்புறமாகவும் இடப்புறமாகவும் சஞ்சரித்தல். ஒத்தியும் - ஒற்றியும் என்றலுமாம். (சு)

7. ஓரொருமல்லராகவொருதனிமல்லன்றன்னோ
டாரமருடற்றிமல்லரனைவருமழிந்தபின்னர்
வீரரில்வீரனனவென்றிவேல்விராடன்மெச்சித்
தேரின்மேல்வந்தமல்லன்றனக்கெலாச்சிறப்புஞ்செய்தான்.

(இ - ள்.) ஒரு தனி மல்லன் தன்னோடு - ஒப்பற்ற தனித்த மல்லனான (வந்த அந்த) வீரனோடு, ஓர் ஒரு மல்லர் ஆக - ஒவ்வொரு மல்லவீரராக, ஆர் அமர் - அருமையான மற்போரை, உடற்றி - பொருது, (இங்ஙனம்);

மல்லர் அனைவர்உம் - எல்லாமல்லர்களும், அழிந்த பின்னர் - தோற்ற பிறகு,— வீரரில் வீரன் ஆன வென்றிவேல் விராடன் - வீரர்கட்குச் சிறந்த வீரனென்று மதிப்புப்பெற்ற வெற்றிபொருந்திய வேற்படையை யுடைய விராடராசன், மெச்சி - (வந்த மல்லவீரனைப்) பாராட்டி, தேரின் மேல் வந்த மல்லன் தனக்கு - தேரின்மேல்வந்த (அந்த) மல்லனுக்கு, எலாம் சிறப்புஉம் - எல்லாச்சிறப்புக்களையும், செய்தான்—; (எ - று.)

வீரத்தின்சிறப்புப் பெருவீரனானவிராடனுக்குத் தெரியு மாதலால், வந்தமல்லனை மெச்சி, பெருமல்லற்குச் செய்யவேண்டிய சிறப்புக்களை அந்த மல்லனுக்கு விராடமன்னவன் செய்தா னென்க. (எ)

8.—மற்றைநாள் தருமபுத்திரன் மன்னனிடம் 'இந்தமல்லனைப் பலாயனன் வெல்லத்தக்கான்'என்ன, அரசன் அவனை யழைப்பித்தல்.

அன்றுபோய்மற்றைநாளினரசனோடறத்தின்மைந்தன்
வென்றமாமல்லன்றன்னைவெல்லுதற்குரியமல்ல
னின்றுநின்மடையர்தம்மிற்பலாயனனென்போன்றன்னை
யன்றிவேறில்லையென்றானரசனுமழைமினென்றான்.

(இ - ள்.) அன்று போய்—, மற்றைநாளின் - மற்றைநாளிலே,—அரசனோடு-விராடராசனுடனே, அறத்தின்மைந்தன் - தருமபுத்திரன், 'வென்ற- (நேற்று) வெற்றிபெற்ற, மா மல்லன்தன்னை - சிறந்த மல்லவீரனை, வெல்லுதற்கு உரிய - ஜயிப்பதற்கு ஏற்ற, மல்லன் - மற்போர்செய்பவன், இன்று - இப்போது, நின் மடையர்தம்மில் - உன்னுடைய சமையற்காரர்க்குள், பலாயனன் என்போன்தன்னை அன்றி - பலாயனனென்பவனை யல்லாமல், வேறு - வேறொருத்தர், இல்லை—,'என்றான்—; அரசன்உம்-விராடராசனும், 'அழைமின் - (அந்தப்பலாயனனை)அழைத்துவாருங்கள்,' என்றான் - என்று கூறினான்; (எ - று.)

பலமல்லர்களும் அந்தமஹாமல்லனைக் கண்டு அஞ்சினார்களாகச் சிலர் எதிர்த்துத் தோற்றார்கள்: அந்தமஹாமல்லன் அப்போது விராடனைப் பார்த்து 'நான் மல்லராஜன்: என்னோடு பொரத்தக்கார் எவருமில்லை: சிங்கம் புலி முதலியவற்றுடனும் பொரவல்லேன்' என்ற கர்ச்சித்தான். அப்போது மற்றைமல்லர்களெல்லாம் அஞ்சி நடுங்கி நிற்பதுகண்டு விராடராசன் 'இந்தமல்லனோடு பொரவல்லார் யார்?' என்றுவினவ, அச்சத்தினால் எல்லா மல்லரும் வாய்திறவாது இருந்தனர். விராடராசன் வெகுண்டு 'நான் இந்தமல்லர்களுக்கு விட்டிருக்கும்கிராமங்களையும் சம்பளங்களையும் பறித்துக் கொண்டு விடுகிறேன்' என்றான்: அப்போது அருகேயிருந்த கங்கனென்ற யுதிஷ்டிரன் 'யுதிஷ்டிரனிடத்துக் கண்ட ஒருமல்ல னுண்டு: அவன் நமது அரண்மனையில் மடைப்பள்ளிவேலையி லிருக்கிறான்: அவன் இவனோடு பொரவல்லான்' என்றான்: என்னவும், விராடன் 'இந்தமல்லனோடு பொர அவனை விரைவாக அழைமின்' என்றான் என்று முதனூலி லுள்ளது. (அ)

9.—பலாயனனென்று மறுபேருள்ள வீமன்
மற்போர்க்குச்சித்தனாக அங்கு வருதல்.

பைம்பொன்மாமேருவெற்பின்பராரையைச்சோதிநேமி
விம்பமாய்வளைந்ததென்னவிளங்குபொற்கச்சைசேர்த்தித்
தம்பமாமென்னத்தக்கதண்டொடுதரணிவீழா
வும்பராரமுதமுண்டவுரவினன்விரைவின்வந்தான்.

(இ - ள்.) தரணி வீழா உம்பர் ஆர் அமுதம் உண்ட உரவினன் - பூமியிற் கிடைக்காத தேவர்களின் அரியஅமிருதத்தை யுண்ட வலிமைபடைத்தவனான வீமன்,—பைம் பொன் மா மேரு வெற்பின் பரு அரையை-பசும் பொன்மயமான பெரியமேருமலையின் பருத்தஅரையை, சோதி நேமி - ஒளிமயமான சக்கரம், விம்பம்ஆய் வளைந்தது என்ன-வட்டமாக வளைந்துகொண்டுள்ளது என்னுமாறு, விளங்கு - விளங்குகின்ற, பொன் கச்சை - பொற்கச்சையை, சேர்த்தி-(இடையிற்) கட்டிக்கொண்டு,— தம்பம் ஆம் என்ன தக்க-தம்பமோ என்று கருதும்படியுள்ள, தண்டொடு - தண்டாயுதத்துடனே, விரைவின் வந்தான்—; (எ - று.)

வீமனது இடையிற் பொற்கச்சை விளங்குவது, மேருவின்பராரையில் நேமி வட்டமாச் சூழ்ந்தது போலும். சோதிநேமி - சூரியனென்பாருமுளர். தரணி வீழா - கங்கைநீர்ப் பெருக்கில் வீழ்ந்து, (பாதளஞ்சென்று), உம்பராரமுதம்உண்ட என்றுகூறலுமாம்: இச்சரித்திரம் வாரணாவதச் சருக்கத்திற் கூறப்பட்டுள்ளது. கச்சை - அரையாடை யவிழ்ந்திடாதபடி கெட்டியாக இருப்பதற்கு இடையிற் கட்டுவது. பருமை + அரை = பராரை: பண்புப் பெயர் ஈறுபோய், வருமொழி முதல்நீண்டு நிலைமொழியீறுகெட்டது: "ஈறுபோதல்... இனையவும் பண்பிற்கியல்பே" [நன். பத. 9.] (கூ)

10.—இரண்டுகவிகள் - பலாயனனும் முன்னர்வெற்றிபெற்றிருந்த
மல்லவீரனும் பொருதலைத் தெரிவிக்கும்.

கதையுடைக்காளைவந்துகடுந்திறன்மல்லன்றன்னோ
டுதையமோடத்தமென்னுமோங்கலோரிரண்டுசேர்ந்து
துதைவுறப்பொருவதேபோற்றோள்புடைத்துருமினார்த்துப்
பதயுகத்தாலுந்தத்தம்பாணிகளாலுஞ்சேர்ந்தார்.

(இ - ள்.) கதை உடை - கதாயுதத்தை யுடைய, காளை - இளவீரனான பலாயனன், கடுந்திறல் மல்லன்தன்னோடு-கொடிய திறமையையுடைய மல்லனோடு, வந்து-வந்துசேர்ந்ததனால், (அவ்விருவரும்),உதையமோடு அத்தம் என்னும் ஓங்கல் ஓர் இரண்டு சேர்ந்து-உதையமலையோடு அத்தமலை யெனப்படும் ஓரிரண்டுமலையும் ஒன்றுசேர்ந்து, துதைவு உற - நெருங்குதல்பொருந்த, பொருவதுஏ போல் - போர்செய்வதுபோல, தோள் புடைத்து - (தம்) தோள்களைத் தட்டியும், உருமின் ஆர்த்து - இடிபோலக் கர்ச்சித்தும், பதம்

யுகத்தால்உம் - இரண்டுபாதங்களாலும், தத்தம் பாணிகளால் உம் - தங்கள் தங்களுடைய கைகளாலும், சேர்ந்தார் - நெருங்கிப் பொருதார்கள்.

பொருவதே போற் சேர்ந்தார் என இயையும். (௧0)

11. உதைத்தனர்வீசிவன்போடுரங்கொடுகரங்களெற்றிப்
புதைத்தனர்விரல்கண்மெய்யிற்புருவமுமூக்கும்வாயிற்
சிதைத்தனர்புயங்களென்னுஞ்சிலம்புகடாக்கத்தாக்கப்
பதைத்தனரோடியோடிப்பற்றினர்மீளமீள.

(இ - ள்.) (ஒருவரை யொருவர்),—வன்போடு - வலிமையோடு, வீசி உதைத்தனர்—: உரம்கொடு - வலிமையோடு, கரங்கள் எற்றி - கைகளால் மோதி, விரல்கள் மெய்யில் புதைத்தனர் - விரலின்வடு உடம்பிலே புதையும் படி செய்தார்கள்; புருவம்உம் மூக்குஉம் - புருவங்களையும் மூக்குக்களையும், வாயில் - வாயோடு, சிதைத்தனர் - பழுதுபடச்செய்தனர்: புயங்கள் என்னும் சிலம்புகள் தாக்க தாக்க - (மாற்றானுடைய) தோள்களென்கிற மலைகள் மோதுவதனால், பதைத்தனர் - (வலிதாங்க மாட்டாமல்) துடித்து, ஓடிஓடி- ஓடி யோடிப்போய், மீளமீள பற்றினர் - மீண்டும் மீண்டும் (ஒருவரை யொருவர் மற்போர் புரியுமாறு) பற்றிக் கொண்டார்கள்; (எ - று.)

புருவமும் மூக்கும் வாயிற் சிதைத்தனர் என்பதற்கு - புருவத்தையும் மூக்கையும் வாய்ப்புறத்திலாகும்படி யழித்தன ரெனினுமாம். (௧௧)

12.—வீமன் வந்த மல்லனை யழித்தல்.

கற்றனகாயமெல்லாங்கண்டுகண்களிக்கக்காட்டி.
யுற்றனர்நின்றபோதிலூதையின்புதல்வனூரு
மற்றவன்மருங்குபற்றவன்கரமிடறுபற்றச்
செற்றனனிடிம்பன்றன்னைச்செற்றவெங்கொற்றத்தோளான்.

(இ - ள்.) கற்றன - (தாம்) அறிந்துள்ளனவான, காயம் எல்லாம் - இலக்குக்களை யெல்லாம், கண் கண்டு களிக்க காட்டி - (பார்ப்பவர்) கண்கள் கண்டு களிக்குமாறு தோற்றுவித்து, உற்றனர் - நெருங்கினவராய், நின்ற போதில் - (அவ்விரண்டுமல்லரும்) நின்ற சமயத்தில்,—இடிம்பன் தன்னை செற்ற வெம் கொற்றம் தோளான் - இடிம்பாசுரனை யழித்த கொடிய வெற்றி தங்கிய தோள்களையுடையவனான, ஊதையின் புதல்வன் - காற்றின் குமாரனாகிய வீமசேனன், ஊரு - (தன்னுடைய)தொடை, மற்றவன் மருங்கு பற்ற- மற்றொருவனான மல்லனுடைய இடுப்பைச் சுற்றியவண்ணம் பற்றிநிற்க, வல் கரம் - வலிய கையானது, மிடறு பற்ற - (அவன்) கழுத்தைப் பற்றிநிற்க, செற்றனன் - (வந்த) மல்லனை யழித்திட்டான்; (எ - று.)

காயம் - ஆங்கிலத்தில் 'Feat' எனப்படும். (௧உ)

13.—வந்த மல்லனை வென்றுநின்ற வீமனை மன்னன் பாராட்டுதல்.

தேர்மிசைவந்தமல்லன்சிதைந்தபேருறுப்பினோடும்
பார்மிசைகிடக்கநின்றபவனைப்புயங்கொட்டியார்த்தான்

சீர்மிகுமல்லன்றன்னைச்சிறப்புறத்தழுவியெல்லாப்
போர்முகங்களுக்குநின்னைப்போல்பவரில்லையென்றான்.

(இ - ள்.) தேர் மிசை வந்த—, மல்லன்—, சிதைந்த - அழிந்திட்ட, பேர் உறுப்பினோடும்-(தன்னுடைய) பெரிய உறுப்புக்களுடனே, பார்மிசை கிடக்க - பூமியின்மீது விழுந்துகிடக்க,—நின்று - (வெற்றிபெற்று) நின்று கொண்டு, பணை புயம் கொட்டி ஆர்த்தான் - (தன்னுடைய) பருத்த தோள்களைக்கொட்டி யாரவாரஞ்செய்பவனான, சீர் மிகு மல்லன் தன்னை - சிறப்புப்பொருந்திய மல்லனான பலாயனனென்றுபேர்பூண்ட வீமசேனனை, சிறப்புஉற - சிறப்புப் பொருந்த, தழுவி-கட்டிக் கொண்டு, 'எல்லாம் போர்முகங்களுக்குஉம் - முனைமுகங்களிலெல்லாம், நின்னை போல்பவர் - (உன்னை) ஒத்திருப்பவர், இல்லை—,' என்றான்-என்று (விராடமன்னவன்) பாராட்டிக் கூறினான்; (எ - று.)

தன்மல்லன் வெற்றி பெற்றது கண்ட மகிழ்ச்சியினால் தன்தேசத்துக்கே ஒருமேம்பாட்டை யுண்டாக்கிய அந்தமல்லனை மன்னன் தழுவினானென்க.

14.—விராடன் பலாயனனுக்குப் பலவரிசைகளளித்து அவன்றிறமையைப் புகழ்ந்துகூறுதல்.

மன்னவர்க்களிக்கத்தக்கவரிசைகளனைத்துநல்கி
முன்னவனாகிவைகுமுனிமனங்களிக்குமாறு
தன்னருகணுகவைத்தித்தலத்தெதிரில்லையிந்த
வின்னமுதடுவோற்கென்றானியற்றிறல்விராடன்றானே.

(இ - ள்.) இயல் திறல் விராடன் - பொருந்திய திறமையையுடைய விராடராசன்,— மன்னவர்க்கு - அரசர்களுக்கு, அளிக்கத்தக்க - கொடுத்தற்குஉரிய, வரிசைகள் அனைத்துஉம் - சிறப்புக்களையெல்லாம், நல்கி-(அந்த வென்ற பலாயனனென்ற மல்லனுக்குக்) கொடுத்து,— முன்னவன் ஆகி வைகும் முனி மனம்களிக்கும் ஆறு-(தன்)முன்னிடத்தி லிருப்பவனாகித் தங்கியுள்ள கங்கபட்டனென்ற முனிவனுடைய நெஞ்சம் மகிழ்ச்சியடையுமாறு, (அந்தப்பலாயனனை), தன் அருகு அணுக வைத்து - தன்னுடைய சமீபத்திலே சேரவைத்து, 'இந்த இன் அமுது அடுவோற்கு - இனிய சமையலைச் சமைக்கும் இந்தப் பலாயனனுக்கு, எதிர் - ஒப்பானவர், இ தலத்து - இந்தப் பூமியிலே, இல்லை—,' என்றான் - என்று (அந்தப் பலாயனன் திறமையைக் கொண்டாடிக்) கூறினான்; (எ - று.)—மன்னவர் களிக்கத்தக்க என்றும், அருகணைய வைத்துத் தலத்து என்றும் பாடம். (௧௪)

மற்போர்ச்சருக்கம் முற்றிற்று.

---

மூன்றாவது

## கீசகன்வதைச் சருக்கம்.

கீசகவதையைத் தெரிவிக்குஞ் சருக்க மென்பது பொருள். விரதசாரிணியென்ற பேர்பூண்டு, விராடன்தேவியாகிய சுதேஷ்ணையினிடம் வண்ணமகளாயிருந்த பாண்டவரின்தேவியாகிய திரௌபதியைக் கண்டு காமுற்ற கீசகன் இரவிலே வீமனாற் பொருது கொல்லப்பட்ட செய்தியோடு, கீசகனுடலோடு திரௌபதியையும் ஈமவழலிலிடுமாறு உபகீசகர் பற்றிச்செல்லத் திரௌபதியின் புலம்பலால் அதனையுணர்ந்த வீமன் அவர்களையும் கொன்ற செய்தி இதிற் கூறப்படும்.

### 1.—கீசகன் சுதேஷ்ணையைக் காண வருதல்.

அன்ன நாளினின் மன்னவன் றேவியா மன்ன மென்னடை யாரமு தன்னசொற், சொன்ன சாயற் சுதேட்டிணை தன்றிருத் துணைவர் நூற்றொரு நால்வரிற் றோற்றமு, மன்னு மாண்மையுந் தேசுஞ்சிறந்துளான் வரூதி னிக்குத் தலைவன்முன் றோன்றிய, கன்னல் வேளனை யான்றன் றுணைவியைக் காண வந்தனன் காண்டகு மேனியான்.

(இ - ள்.) அன்ன நாளினில் - அந்தக் காலத்திலே, மன்னவன் தேவி ஆம் - விராடராசனுடைய மனைவியாகிய, அன்னம் மெல் நடை - அன்னப் பறவைபோன்ற மெல்லிய நடையையும், ஆர் அமுது அன்ன சொல்-கிடைத்தற்கு அரிய தேவாமிருதம் போன்ற[இனிய]சொல்லையும், சொன்னம் சாயல்-ஸ்வர்ணம்போன்ற உடலொளியையுமுடைய, சுதேட்டிணை தன்-சுதேட்டிணையென்பாளுடைய, திருத்துணைவர் நூற்றொருநால்வரில்-சிறந்த உடன் பிறந்தவர்கள் நூற்றுநால்வருக் குள்ளே,—தோற்றம் உம்-(கம்பீரமாகக் காணப்படும்) காட்சியும், மன்னும் ஆண்மை உம்-நிலையாகப்பொருந்திய பராக்கிரமமும், தேசுஉம்-ஒளியும், சிறந்துளான்-மிக்குள்ளவனும், வரூதினுக்கு தலைவன்-(விராடனுடைய) சேனைக்குத் தலைவனும், முன் தோன்றிய கன்னல் வேள் அனையான் - (சிவபெருமானால் உடலெரிந்து போவதற்கு) முன் வடிவத்தோடு காணப்பட்ட கரும்புவில்லையேந்திய மன்மதனை யொத்தவனும், காண்தகு மேனியான் - காணத்தக்க [மிக அழகிய] உடம்பை யுடையவனுமான கீசகன், தன் துணைவியை - தன்னுடன்பிறந்தவளான சுதேஷ்ணையை, காண - பார்ப்பதற்கு, வந்தனன்—; (எ - று.)—தேசு - புகழுமாம்.

ஸூதவமிசத்திற்சேர்ந்த கேகயனுக்கு மாளவியென்ற ஒருபாரியையும், அவள்தங்கை மற்றொருபாரியையுமாக இருந்தனர்: மூத்தவளான மாளவியினிடத்துக் கீசகனும் உபகீசகர் நூற்றைவரும் தோன்றினர்: இவர்கள் காலேயரென்று பிரசித்தரான அசுரரின் அமிசமானவர்: அவர்களிற் கீசகன் பாணனுடைய அமிசமானவன்: மாளவியின்தங்கையினிடத்துப் பிறந்தவள் சுதேஷ்ணையென்பவள். மத்ஸ்யதேசாதிபதியான விராடன்மனைவி சுரதையென்பவள் இறந்துவிடவே, அந்த விராடன் இந்தச்சுதேஷ்ணையை மணந்த

னன்: மைத்துனன்மார்களாகிய கீசகர்கள் சிறுதாயின்பெண்ணான சுதேஷ்ணையோடு மச்சநாட்டையடைந்தனர்: கீசகன் விராடனிடம் சேனாபதியாயிருந்து பலநாடுகளையும் அம்மன்னவனுக்கு வென்றுதந்தானென்ற இவ்விவரத்தை முதனூலா லறிக. முதனூலுக்கு ஏற்ப, நூற்றொருநால்வரில் என்றஇடத்து நூற்றொருமறுவரில் என்றுமற்போன்று பாடமிருக்கலாமென்று தோன்றுகின்றது.

முதற் பத்தொன்பதுகவிகள்-பெரும்பாலும் முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றையவை விளச்சீர்களுமாகிவந்த கழிநெடிலடிநான்கு கொண்ட எண்சீராசிரிய விருத்தங்கள். (க)

2.—தமக்கையைவணங்கிக் கீசகன் மீள்கையில், விரதசாரிணியென்ற திரௌபதி பூக்கொய்துகொண்டு இவன்முன் முடுகுதல்.

தம்பியப்பெருந்தையலை நூபுரத் தாளின்வீழ்ந்து தகவுடன்மீடலு, மம்பரத்தவர்கற்பகக்காநிக ரந்தவந்தப்புரத்தகன்காவினில், வெம்புகர்க்களிற்றைவர்தந்தேவியாம் விரதசாரிணிமென்மலர்கொய்திளங், கொம்பொடொத்திடைசோரப்பணைத்தபொற் கொங்கையாளிவன்முன்னர்க்குறுகினள்.

(இ - ள்.) தம்பி - சுதேஷ்ணையின் தம்பியான கீசகன், அ பெருந்தையலை - பெருமையுள்ள அந்தச்சுதேஷ்ணையை, நூபுரம் தாளில் வீழ்ந்து - நூபுரமணிந்த பாதங்களிலே வணங்கி, தகவுடன்-பெருமையோடு, மீடலும் - மீளாநிற்கையில்,— அம்பரத்தவர் கற்பகம் கா நிகர் அந்த அந்தப்புரத்து அகல் காவினில் - தேவலோகத்தவரின் கற்பகச்சோலையையொத்த அந்த அந்தப்புரத்தைச்சார்ந்த அகன்றுள்ள சோலையிலே, மெல் மலர் கொய்து - மெல்லிய மலர்களைப் பறித்துக்கொண்டு, வெம் புகர் களிறு ஐவர்தம் தேவி ஆம் விரதசாரிணி - விரும்பத்தக்க முகப்புள்ளிகளையுடைய ஆண் யானை போன்றவரான பஞ்சபாண்டவரின் மனைவியாகிய விரதசாரிணியென்கிற, இளங்கொம்பொடு ஒத்து இடை சோர பணைத்த - இளங்கொம்புபோன்று இடுப்பானது ஒல்கிநிற்குமாறு பருத்துள்ள, பொன் கொங்கையாள் - அழகிய ஸ்தநங்களையுடையவள், இவன் முன்னர் - இந்தக்கீசகனுடைய முன்னிலையிலே, குறுகினள் - நெருங்கினள்; (எ - று.)

தமக்கையைப்பணிந்துவிட்டுக் கீசகன் மீள்கையில், அந்தப்புரத்துச் சோலையில் பூப்பறித்துக்கொண்டுமீண்ட விரதசாரிணியென்ற திரௌபதிக்கு அவன் முன்னர்வருமாறு நேர்ந்த தென்க. அந்தப்புரம் - ராஜஸ்திரீகள் வசிக்குமிடம். (உ)

3.—கீசகன் திரௌபதியைக் கண்டதும் அவள்மீது மோகங்கொள்ளுதல்.

இயற்கையானகவினுடைப்பாவையை யிறைவன்றேவிக்கிளையவன்கண்டனன், செயற்கையாநலன்கண்டிலன்யார்கொலித் தெரிவையென்றுதன்சிந்தையினோக்கினன், மயற்கையாலழிந்தானைம்புலன்

களும் வழக்கொழிந்துமதிமருண்டானிணைக்,கயற்கையானக்கயற்றட
ங்கண்ணியைக் கண்டகாட்சியிற்காமுகனாகியே.

(இ - ள்.) இணை கயல் கையான் - இரட்டைக்கயல்மீன் இரேகையைக் கையிலே யுடையவனாகிய, இறைவன் தேவிக்கு இளையவன்-விராடராசனுடைய மனைவிக்குத் தம்பியாகிய கீசகன்,—இயற்கை ஆன கவின் உடை பாவையை - இயற்கையழகையுடையவளான திரௌபதியை, கண்டனன்-கண்டான்: அ கயல் தடங்கண்ணியை - கயல்மீன்போன்ற விசாலமான கண்களை யுடையவளான அந்தவிரதசாரிணியை, கண்ட - (அங்ஙனம்) பார்த்த, காட்சியில்-காட்சிமாத்திரத்திலேயே, காமுகன் ஆகி—,செயற்கை ஆம் நலன்-(ஆடைஆபரணம் முதலியவற்றால் தோன்றும்) செயற்கையான அழகை, கண்டிலன் - காணாதவனாகி, இ தெரிவை யார்கொல் என்று தன் சிந்தையின் நோக்கினான் - 'இந்தமாது யாவளோ?' என்று தன்மனத்திலே நாடி,—மயற்கையால் - காமமோகத்தினால், அழிந்தான் - மனமழிந்து, ஐம்புலன்கள் உம் வழக்கு ஒழிந்து - (ஐம்பொறிகளும்) ஐம்புலன்களின்மேற் செல்லுதல் நீங்கி, மதி மருண்டான் - புத்தியில் மயக்கங்கொண்டான்; (எ - று.)

மகாவீரனாதால், உத்தமலட்சணமான இணையக்கயலிரேகை கீசகன் கையி லமைந்தது. (௩)

4.—கீசகன் திரௌபதியின் கட்டழகைக் கண்டு ஐயுறுதல்.

இந்திரன்னகர்ப்பாவைகொலோமட லேந்துபங்கயத்தேவிகொலோவியற், சந்தமாருந்தடவரைத்தையலோ தாரணிக்குள்வருந்தனித்தெய்வமோ, முந்தராவுறைபாதலந்தன்னில்வாழ் மோகினிக்குயிலோமுரல்கின்றிடு, முந்துநீரரமங்கைகொலோவெழி லோவியத்தொளியோவெனவுன்னினான்.

(இ - ள்.) இந்திரன் நகர் பாவை கொல் ஓ - தேவலோகத்தில் வாழும் அமரமடந்தையோ? மடல் ஏந்து பங்கயம் தேவி கொல்ஓ- இதழ்கள் பொருந்திய தாமரைமலரில் வாழும் இலக்குமியோ? இயல் சந்தம் ஆரும் தட வரை தையல்ஓ - இயற்கையான அழகுபொருந்திய பெரியமலையின் புத்திரியான பார்வதியோ? தாரணிக்குள் வரும் தனி தெய்வம்ஓ-பூமியிலேவந்து மானிடப் பிறவியில்தோன்றிய ஒப்பற்ற பெண்தெய்வமோ? முந்து அரா உறை பாதலந் தன்னில் வாழ்மோகினி குயில்ஓ-முற்பட்ட[சிறந்த]பாம்புகள்வசிக்கும் பாதாளலோகத்திலேவாழ்கின்ற மோகினித்தெய்வத்தினமிசமான பெண்ணோ? முரல்கின்றிடு முந்து நீர் அரமங்கைகொல்ஓ-ஒலிசெய்தவண்ணம்பெருகுகின்ற நீரில் வாழும் அரமகளோ? எழில் ஒளி ஓவியம் ஓ-அழகிய ஒளியையுடைய சித்திரப் பதுமையோ?என-என்று(துணிவு பிறவாமல்);உன்னினான்-(பலபடியாக அந்தத் திரௌபதியைக் குறித்து) எண்ணினான், (அந்தக்கீசகன்); (எ - று.)

இலக்குமியைக்கூறியபின் 'வரைமகள்' என வந்ததனால் பார்வதியோ என்று கூறப்பட்டது. கொலோஎன்று வந்தஇடங்களில் இரண்டில் ஒன்று அசையென்க. பாவை, குயில்என்பன- உவமவாகுபெயர். (௪)

5.—கீசகன் அவளை அருகிருந்தாரால் இன்னாளென அறிந்து, அவள்காலில்விழுந்து காதலாற் பல கூறுதல்.

அருகுநின்றமகளிரைமற்றிவளார்கொலென்னவறியான்வினவினான், வரிநெடுங்கண்மகளிருமாதரார் வண்ணமாமகளென்றனர்மையலா, லுருகுகின்றவக்காளையுநாணமுற் றொடுங்கிநின்றவுயர்தவப்பாவைத, னிருபதங்களில்வீழ்ந்தெனதாவிநீ யென்றுமீளவுமெத்தனை கூறினான்.

(இ - ள்.) அறியான் -(அந்தத்திரௌபதியை இன்னாளென்று) அறியாதவனான கீசகன், மற்று-பின்பு, அருகுநின்ற - (அங்குச்) சமீபத்திலேயிருந்த, மகளிரை - மாதராரைநோக்கி, 'இவள் ஆர்கொல்—?' என்ன - என்று, வினவினான்-விசாரித்தான்; வரிநெடுங் கண் மகளிர்உம்-செவ்வரிபரந்த நெடியகண்களையுடையரான (வினவப்பட்ட) மகளிர்களும், மாதரார் வண்ணமாமகள் என்றனர் - (இவள்) மாதரசியான சுதேஷ்ணைக்கு அலங்காரஞ்செய்யும் சிறந்தமகள் என்று தெரிவித்தனர்: மையலால் உருகுகின்ற அ காளைஉம் - காமமயக்கத்தால் மனமுருகுகின்ற அந்த இளவெருதுபோன்றவனான கீசகனும், நாணம் உற்று ஒடுங்கி நின்ற உயர் தவம் பாவைதன் - நாணமடைந்து (இவனால் என்னதீமை விளையுமோ என்ற அச்சத்தினால்) உடல்குன்றிநின்ற சிறந்த நல்வினையையுடைய அந்தத் திரௌபதியின், இரு பதங்களில் வீழ்ந்து - இரண்டு கால்களிலே (தன் சிரசுபடும்படி) விழுந்து கும்பிட்டு, 'நீ எனது ஆவி - நீ என்னுடைய உயிர்போல்வாய்,' என்று - என்றுசொல்லி,— மீளஉம் - பின்னும், எத்தனை கூறினான் - எத்தனையோ வார்த்தைகளைச் சொன்னான்; (எ - று.)

காமப்பித்துக்கொண்டு அந்தக்கீசகன் சொன்னவை அனுவதித்தற்கும் தகாதன என்ற காரணத்தால், அவற்றை விவரியாமல், 'எத்தனை கூறினான்' என்று கூறியொழிந்தார். என்று நின்றங்கினியன கூறினான் என்றும் பாடம்.

6.—இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்: கீசகனைப் பழித்தும் மருட்டியும் திரௌபதி கூறியவற்றைத் தெரிவிக்கும்.

கூறுகின்றமொழிகளுக்குத்தரங் கொடாதுநின்றதொர்கொம்பரின்வாய்மறைந், தேறுகின்றபழிகளும்பாவமு மிம்மைதானுமறுமையும்பார்த்திலை, மாறுகின்றிலைசொல்லத்தகாதபுன் மாற்றமின்னமுமன்னுயிர்யாவும்வந், தாறுகின்றகுடைநிழல்வேந்தனுக் கழிவுசெய்தியறிவிலிபோலுநீ.

(இ - ள்.) கூறுகின்ற - (அந்தக்கீசகன்) சொல்லுகிற, மொழிகளுக்கு - வார்த்தைகட்கு, உத்தரம் கொடாது - மறுமொழி தாராமல், நின்றது ஓர் கொம்பரின்வாய் மறைந்து - அருகேயிருந்த ஒருமரக்கிளையிலே மறைந்துகொண்டு; (திரௌபதி அந்தக்கீசகனைநோக்கிப் பின்வருமாறு கூறலானாள்):

'பழிகளும் பாவமும்—, ஏறுகின்ற-(உனக்கு)மிகுகின்றன: இம்மை தான் உம்- இவ்வுலகத்தில் விளைவதையும், மறுமை உம் - மறுபிறப்பில் விளையப்போவதையும், பார்த்திலை-(நீ) ஆலோசித்தாயில்லை: சொல்ல தகாத புல் மாற்றம்- சொல்லுதற்குத் தகாத அற்பவார்த்தைகளை, இன்னமும்—, மாறுகின்றிலை-(சொல்லுவதினின்றும்) நீங்குகின்றாயில்லை: (நீ இவ்வாறுஇருந்தால்), மன் உயிர் யாஉம் வந்து ஆறுகின்ற குடை நிழல் வேந்தனுக்கு - (உலகத்தில்) நிலைபெற்ற பிராணிகளெல்லாம் வந்து இளைப்பாறுதற்கு இடமான வெண்கொற்றக்குடைநிழலையுடைய விராடனுக்கு, அழிவு - நாசத்தை, செய்தி - செய்கின்றவனாவாய்: நீ—, அறிவிலி போலும் - அறிவுகெட்டவன் போலக் காண்கின்றாய்; (எ - று.)

பிறனில்லாளை விரும்புவதனால் இம்மையிற் பழியும் மறுமையிற் பாவமும் விளையு மாதலால், 'இம்மைதானும் மறுமையும் பார்த்திலை' என்றாள். இவனுடைய அநியாயத்தால், அரசனுக்கே தீங்குவிளையக் கூடு மென்று அஞ்சினாள். ஏறுகின்ற - 'அன்' சாரியைபெறாத முற்று. (சு)

7.—மாரசாயகத்தா லுயிர்மாளினும் வசையிலாதமரபின்வந் தோர்பிறர், தாரமானவர்தம்முகம்பார்ப்பரோ தக்கவர்க்குத்தகவிவை யேகொலாஞ், சோரனாதலிற்சொற்றாயினித்தவிர் சுரேசரைவர்தங் காவலென்றோளிணை, வீரபோவென்னருகுறிலாவிபோம் விழித்திமைக் குமுன்னென்றுவிளம்பினாள்.

(இ - ள்.) மார(ன்) சாயகத்தால் - மன்மதபாணத்தினால், உயிர் மாளின் உம் - உயிர் போவதாயிருந்தாலும் [இறப்புநேர்வதானாலும்], வசை இலாத மரபின் வந்தோர் - குற்றமற்ற வமிசத்திற் பிறந்தவர், பிறர் தாரம் ஆனவர் தம் முகம் பார்ப்பர்ஓ - அயலாருடைய மனைவியானவளின் முகத்தைக் கண்ணெடுத்துப் பார்த்தலேனுஞ் செய்வரோ? தக்கவர்க்கு-யோக்கியர்கட்கு, தகவு - நற்குணங்கள், இவை கொல் ஏ-இவ்வாறு பிறர்மனையை விரும்புதல் முதலியனவோதாம்? சோரன் ஆதலின்-கள்ளத்தன முடையா யாதலால், சொற்றாய் - (நீ இவ்வாறான வார்த்தைகளைச்) சொன்னாய்: இனி—, தவிர் - (இவ்வாறானபேச்சை) ஒழிவாய்: என் தோள் இணை - என்னுடைய இரண்டு தோள்களும், சுரேசர் ஐவர் தம்-சிறந்ததேவர் ஐவர்களின், காவல்-பாது காவலிலுள்ளன: வீர-வீரனே! போ-அப்பாற்போ: என் அருகு உறில் - என்னருகே வந்தாலோ, விழித்து இமைக்கும் முன் - கண்ணை மூடித் திறக்குங் காலவளவைக்குள், ஆவி போம் - உன்னுயிர் ஒழிந்திடும், என்று—, விளம்பினாள் - சொன்னாள்; (எ - று.)—ஆம் - அசை.

விழித்திமைக்குமுன் போ என்று இயைத்தலும் ஒன்று. கந்தருவர் காவல்புரி கற்புடையள் என்று வந்ததற்கு ஏற்ப, சுரேசர் என்பதும் கந்தருவர் என்ற பொருளைத் தருமென்க. (எ)

8.—திரௌபதி கடிந்துகூறவும் கீசகன் காலில் விழ்ந்துவேண்ட, அவள் சுதேஷ்ணையிடஞ் சேர்தல்.

பேதையிப்படிக்கூறவுங் காதனோய் பெருகுசிந்தையன்பின்னையு முன்புரு, வாதரத்தெனதாருயிர்போகினு மமையுமென்றவளம்புயச் சிறடி, மீதுநெற்றிபடத்தொழுதான்வடி வேற்கணாளும்வெகுண்டுவி ரைவினிற், றாதுளங்கனிவாய்முத்தவாணகைச் சுதேட்டிணைப்பெய ராளுழைத்துன்னினாள்.

(இ - ள்.) பேதை - மடவரலான திரௌபதி, இப்படி கூறஉம் - இவ்வாறு (கீசகன்செயலைக் கண்டித்துச்) சொல்லவும், காதல் நோய் பெருகு சிந்தையன் - ஆசைநோய் விஞ்சிய மனத்தையுடையவனாய்,—(கீசகன்),—பின்னை உம் - பின்னும், முன்பு உரு - அவளுடைய முன்னே வந்து, 'ஆதரத்து எனது ஆர் உயிர் போகின்உம் அமையும் - காதல் காரணமாக எனது அருமையான உயிர் இறப்பதானாலும் தகும்;' என்று-என்றுசொல்லி, அவள் அம்புயம் சிறு அடிமீது-அந்தத்திரௌபதியின் தாமரைமலர்போன்ற சிறிய பாதங்களின்மேல், நெற்றி பட தொழுதான்-(தன்) நெற்றிபட வணங்கினான்: வடி வேல் கணாள் உம்-கூரிய வேற்படைபோன்ற கண்களையுடையளான அந்தத் திரௌபதியும், வெகுண்டு - கோபங்கொண்டு,—தாதுளை கனி வாய் முத்தம் வாள் நகை சுதேட்டிணைப் பெயராளுழை - தாதளம்பழம்போன்ற சிவந்த வாயையும் முத்துப்போன்று ஒளிபொருந்திய பற்களையுமுடையளான சுதேஷ்ணை யென்பாளிடத்தில், விரைவினில் துன்னினாள்-விரைவாகப் போய்ச் சேர்ந்தாள்; (எ - று.)—முன்புஉரு ஆதரத்து என்று என இயைத்து-இதற்கு முன்பில்லாத காதலோடு என்றுகூறி எனினுமாம். (அ)

9.—சென்ற திரௌபதி தன்வருந்தந் தோன்ற நின்று அவளிடத்து நிகழ்ந்தது சொல்லுதல்.

நடுங்குமெய்யினள்பேதுறுநெஞ்சின ளுணுநீர்மையணாவினுணீரிலா, தொடுங்குமென்மையடன்மையினற்புன லுகுத்தகண்ணின ளோவியம்போன்றுளாள், கடுங்கண்யானைப்பிடரிருந்திங்கிலங் காக்கும்வெண்குடைக்காவலன்றேவிகே, டொடுங்கழற்கழலானின்றனை வனெற் சுட்டியாயிரஞ்சொல்லலசொல்லினாள்.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) ஓவியம் போன்றுஉளாள் - சித்திரப்பதுமை போன்றுள்ளவளாகிய அந்தத் திரௌபதி,—நடுங்கும் மெய்யினள் - (அச்சத்தினால்) நடுக்கமடைந்த உடம்பை யுடையவளும், பேதுறு நெஞ்சினள் - கலங்கிய மனத்தை யுடையவளும், நாணும் நீர்மையள் - நாணுகின்ற தன்மை யுடையவளும், நாவினுள் நீர் இலாது ஒடுங்கும் மென்மையள் - (தனக்கு நேர்ந்திருக்கின்ற அவஸ்தையை எண்ணித் தன்) நாவினிடத்து நீரூறுதலுமில்லாமல் (வறண்டுபோக) ஒடுங்குதற்குக் காரணமான மென்மைத்தன்மை யுடையவளும், தன்மையினால்-

(மெல்லியலான) தன்மைக்குஏற்ப, புனல் உகுத்த கண்ணினள்-நீரைச்சிந்து கின்ற கண்களையுடையவளுமாய்,—கடுங்கண் யானை பிடர் இருந்து இ நிலம் காக்கும் வெள் குடை காவலன் தேவி-கொடிய கண்களையுடைய யானையின் பிடரியிலே யிருந்துகொண்டு இந்தப்பூவுலகைக்காக்குந் தன்மையுள்ள வெண் கொற்றக்குடையையுடைய அரசனுடைய மனைவியே! கேள் - (நிகழ்ந்த தைக்) கேட்பாயாக: தொடும் கழல் கழலான் - அணிந்த வீரக்கழலை யுடைய பாதங்களை யுடையவனான, நின் துணைவன் - உன்னுடன் பிறந்தவன், என் சுட்டி என்னைக்குறித்து, சொல் அல ஆயிரம் சொல்லினான்-சொல்லத்தகா தனவான பலவார்த்தைகளைச் சொன்னான்; (எ - று.)

முதலிரண்டடிகள் - அந்தத்திரௌபதிக்கு அச்சத்தினால் தோன்றும் மெய்ப்பாடுகளை விளக்குவன. மூன்றாமடி - நீதிநெறிநடத்தும் மன்னவ னுக்கு நீ மனைவி யாதலால், அநீதிநடவாமல் பார்க்கவேண்டுவது உனக் கும் பொறுப்பே யென்பதைக் குறிப்பிக்கும். (௯)

10.—இனிச்செய்யவேண்டுவது இன்ன தென்றும், நெறிதவறின் இன்னது விளையுமென்றும் அந்தத்திரௌபதி கூறுதல்.

விரதசாரிணியென்பதுந்தேவரென் மெய்புரக்கும்விரதமுமிங்கு னக், கிரதமாகவரமனைக்கெய்துமு னியம்பினேனெனையாவருமிச்சி யார், சுரதமாடுமகளிரைத்தேடிநின் றுணைவன்வேட்கையுஞ்சோகமு மாற்றிடு, சரதமாகநினைபாதொழிநெறி தப்பிலாருயிர்தப்புமென்றோ தினாள்.

(இ - ள்.) விரதசாரிணி என்பதுஉம் - (என்பெயர்) விரதசாரிணியென் பதையும், தேவர் என் மெய் புரக்கும் விரதம்உம் - தேவர்கள் என்உடலைக் காக்கின்ற கொள்கையையும், இங்கு - இங்குள்ள, உனக்கு—, இரதம் ஆக - இனிமையாக, வரம் மனைக்கு எய்தும் முன் - (உன்னுடைய) சிறந்த வீட்டில் (வண்ணமகளாய்ச்) சேர்தற்குமுன்னம், இயம்பினேன் - சொல்லி யுள்ளேனே: (இப்படியிருப்பதனால்தான்), எனை - என்னை, யாவர்உம் - எவரும், இச்சியார் - விரும்பமாட்டார்: (ஆகையால்), சுரதம் ஆடும் மகளிரை- (விலைப்பொருட்டாகப்) புணர்ச்சியை நிகழ்த்துகின்ற வேசியரை, தேடி—, நின் துணைவன் - உன்தம்பியின், வேட்கைஉம் - ஆசையையும், சோகம் உம் - (மன்மதனால் நிகழ்ந்துள்ள) வருத்தத்தையும், மாற்றிடு - மாறச்செய்: சரதம் ஆக - திண்ணமாக, நினையாது ஒழி - (என்னால் அவனுடைய வேட் கையையும் சோகத்தையும் போக்கலாமென்று) நினையாதுதவிர்வாய்: நெறி தப்பில்-முறைமைதவறி (ஏதேனும்) நிகழுமானால், ஆர் உயிர் தப்பும் - (உன் தம்பியின்) அரியஉயிரே அழிந்திடும், என்று—, ஓதினாள்-கூறினாள் (அந்தத் திரௌபதி); (எ - று.)

விரதசாரிணி என்பது - நல்லொழுக்கத்துடன் நடப்பவளென்று கார ணப் பொருள்படும். என்பெயரினாலேயே யான் எப்படிப்பட்ட தன்மை

யுடையவ ளென்பதை நீ அறிந்திடலாமேயென்பது, குறிப்பு. ஸாரதம் - வடசொல். (௧௦)

11.—திரௌபதியின்வாசகங்கேட்டுச் சுதேஷ்ணை அவள் கண்ணீர் துடைத்து 'என்வீடணுகாவகைபோ' என்று தம்பியைமுனிதல்.

கேகயங்களெனுமெழிற்சாயலாள் கிளந்தவாசகங்கேட்டிடியேறு று,நாகமென்னநடுங்கியப்பூங்கொடி நயனநீர்துடைத்துற்றதுநன்றெ னு, வேகமுற்றமனத்தொடுதம்பியை மிகமுனிந்துதன்வீட ணுகாவ கை,யேகுகென்றனளென்றலுஞ்சோகமோ டேகினனறம்பாவமென் றெண்ணலான்.

(இ - ள்.) கேகயங்கள் எனும்-கேகயப்பறவை யென்று சொல்லத்தக்க எழில்-அழகிய, சாயலாள்-தோற்றத்தை யுடையவளான திரௌபதி, கிளந்த-சொன்ன, வாசகம்-வார்த்தையை, கேட்டு—,(சுதேஷ்ணை),—இடிஏறு உறம்-பேரிடியினோசையைக் கேட்டல்பொருந்திய, நாகம் என்ன - பாம்புபோல, நடுங்கி—, அ பூங் கொடி நயனம் நீர் துடைத்து-அந்தப்பூங்கொடி போன்ற திரௌபதியின் கண்ணீரைத் துடைத்து, 'உற்றது-நேர்ந்த நிகழ்ச்சி, நன்று-நன்றாகவுள்ளது', எனு - என்றுசொல்லி, வேகம் உற்ற - கோபாவேசம் மிகுந்த, மனத்தொடு - மனத்துடனே, தம்பியை - கீசகனை, மிக முனிந்து - மிகவுங் கோபித்து, தன் வீடு அணுகா வகை-(இனித்) தன்வீட்டைச்சேராத படி, 'ஏகுக - போய்விடுவாயாக,'என்றனள் - என்று கூறினாள்: என்றலும் - என்று சொன்னவுடனே, அறம் பாவம் என்று எண்ணலான்-(இந்தச்செயல்) புண்ணியம் விளைப்பது (இது) பாவத்தைத் தருவது என்று ஆலோசித்த லில்லாதவனாகிய அந்தக்கீசகன், சோகமோடு - துயரத்தோடு, ஏகினன் - (தன் வீட்டுக்குச்) சென்றான்; (எ - று.)

இடியேற்றைக்கேட்ட நாகம் நடுங்குமென்பது, நூற்கொள்கை: "விரி நிறநாகம் விடருளதேனும், உருமின் கடுஞ்சினஞ் சேணின்று முட்கும்" என்றது, நாலடி. கேகயம் - மயில். அப்பூங்கொடிஎன்பது சுதேஷ்ணையைச் சுட்டுவதாயின், நயனம் - திரௌபதியின் நயனம் என்க. (௧௧)

12.—அற்றைநாளிராத்திரி கீசகன் பட்ட மன்மதாவஸ்தை.

சென்றுதன்மனைபுக்கபின்மன்மதன் செருவினொந்தழிசிந்தைய னாய்மலர், மன்றன்மெல்லணைவீழும்வெம்பாலையால் வருத்தநோவிம் மலாணைதானெனுந், தென்றறன்னையுந்தியெனுந்திங்களைத் தினகரன் கொலென்றேங்குஞ்செயலழிந், தன்றவன்கருங்கங்குலிற்பட்டபா டவனையல்லதையார்படுவார்களே.

(இ - ள்.) சென்று-போய், தன் மனை புக்க பின் - தன் வீட்டினுள்ளே சேர்ந்தபிறகு, மன்மதன் செருவில்-மன்மதன் செய்யும் போரிலே, நொந்து - வருந்தி, அழி - அழிந்த, சிந்தையன் ஆய் - மனத்தையுடையவனாய்,— மலர் மன்றல் மெல் அணை வீழும் - மலர்கொண்டு பரப்பிய நறுமணமுள்ள

மெல்லிய படுக்கையிலே விழுவான்: 'இ மலர் அணை தான் - இந்தப் பூம்படுக்கை, வெம்பாலையால் வகுத்ததுஓ-வெப்பமுள்ள பாலைநிலத்தா லியன்றதோ?' எனும்-என்பான்: தென்றல் தன்னைஉம் - தென்றற் காற்றையும், தீ எனும் - தீயென்று சொல்வான்: திங்களை-சந்திரனைப் பார்த்து, '(இவன்), தினகரன்கொல்-சூரியனேயோ!' என்று-என்றுகருதி, எங்கும்-எக்கமடைவோன்: செயல் அழிந்து - செய்யவேண்டிய தொழில் இன்னதென்றுணராது மனமழிந்து, அன்று-அன்றைத்தினம், அவன்—, கருங் கங்குலில்-கரிய இராப்போதிலே, பட்ட - அடைந்த, பாடு - வருத்தத்தை, அவனை அல்லது - அவனையல்லாமல், யார் (வேறு) யாவர், படுவார்கள்ஏ-அனுபவிப்பார்களோ? (எ-று.)

பாலை-மிகவும் வெம்மையை யுடையநில மாதலால், தனக்கு மிக்கவெப்பஞ்செய்யும் மலரணையை, 'வெம்பாலையால் வகுத்ததோ இம்மலரணை தான்' என்னலானான். காமமயக்கம் கொள்பவர்க்கு, குளிர்ந்திருப்பனவான மலரணை திங்கள் தென்றல் முதலியன வெப்பத்தைச் செய்தல், இயற்கை. அல்லதை, ஐ - சாயை. 'அன்றகன் கருங்கங்குலில்' என்றும் பாடம். (௧௨)

13.—கீசகனுதரத்தை யாற்ற நினைந்த அவன்சேடியர் சுதேஷ்ணையிடம் வண்ணமகளைக் கீசகன் கண்டால்தான் ஆவிநிலைக்குமென்று வேண்டுதல்.

பாவிதன்மனைச்சேடியரானவர்பலரும்வந்துபடியுடைமன்னவன்
றேவிதன்னைவணங்கியக்காமுகன்சிந்தைநோயுஞ்செயலும்புகன்றெழிற்
காவியங்கண்ணவளைத்தனதுகண்காணினுந்தணியுங்கடுங்காதலு
மாவியும்பெறுமெய்யணுகானினதாணையென்றனராதரமாற்றுவார்.

(இ - ள்.) பாவிதன்-பாபிஷ்டனான கீசகனுடைய, மனை-வீட்டிலுள்ள, சேடியர்ஆனவர் பலர்உம் - பணிப்பெண்கள் பலரும், வந்து—,—படி உடை மன்னவன் தேவிதன்னை - பூமியைப் பாதுகாத்தலுடைய விராடமன்னவனுடைய மனைவியை, வணங்கி—,ஆதரம் ஆற்றுவார்—(அந்தக்கீசகனுடைய) காமவிடாயைத் தணிவிக்க முயல்பவராய்,— அ காமுகன் சிந்தைநோய்உம் செயல்உம் புகன்று - காமநோய் கொண்டவனான அந்தக்கீசகனுடைய மனத்திலுள்ள காமநோயையும் (அதற்கு ஏற்ப அவன் மலரணை முதலியவற்றால் வெப்பங் கொள்ளுஞ்) செய்கையையும் சொல்லி, - 'எழில் காவி அம் கண்ணவளை - அழகிய கருங்குவளைமலர்போலும் அழகிய கண்களையுடைய அந்த வண்ணமகளை, தனது கண் காணின்உம் - (அந்தக்கீசகன்) தன் கண்களாற் கண்டாலும், கடுங் காதல்உம் தணியும் - (அவன் இப்போதுகொண்டுள்ள) கொடியகாதல் தணியப்பெறுவான்: ஆவிஉம் பெறும்-தன்னுயிரும் இறவாது நிலைத்திருக்கப்பெறுவான்: மெய் அணுகான் - அவளுடம்பைக் கட்டித் தீண்டான்: (இவ்விஷயத்தில்), நினது ஆணை-,' என்றனர் - என்றுகூறினார்கள்.

பிறர்மனைநச்சுதலென்பது பஞ்சமகாபாதகங்களு ளொன்றாதலால், அந்தப்பாதகத்திற்குத் துணிந்த கீசகனை, 'பாவி' என்றார். ஆதரம் மாற்றுவார் என்றும் பிரிக்கலாம். காதலும் ஆவியும் - எச்சவும்மைகள். (௧௩)

14.—அந்தச் சேடியரின் சொல்லைக் கேட்டதும், சுதேஷ்ணை கீசகன்செயலுக்கு வருந்திப் புலம்புதல்.

பாசகாரிகளாமைம்புலன்களும் பரிவுகூரப்பரிந்துயர்ந்தோர்புகல், வாசகாதிகள்கற்றுந்தெளிந்திலை மதனவேதத்தின்மார்க்கமும்பார்த்திலை,நாசகாலம்வரும்பொழுதாண்மையு ஞானமுங்கெடுமோநறுந் தார்முடிக், கீசகாவென்றழுதனளம்மொழி கேட்டபோதக்கிளிநிகர் மென்சொலாள்.

(இ - ள்.) அ மொழி கேட்ட போது - (சேடியர் சொன்ன) அந்தவார்த்தை செவிப்பட்டபோது,—அ கிளி நிகர் மெல் சொலாள் - கிளிபோன்று மென்மையாகப் பேசுபவளான அந்தச்சுதேஷ்ணை,—'பாசகாரிகள் ஆம்-மனப்பிணிப்பை யுண்டாக்குவனவான, ஐம்புலன்கள்உம் - (பஞ்சேந்திரியங்கட்கு உரிய சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும்) ஐந்துவிஷயங்களும், பரிவு கூர - துன்பத்தை மிகுவிக்க, பரிந்து - (அதனால்) மனம் வருந்தி, உயர்ந்தோர் புகல் வாசக ஆதிகள் கற்றுஉம் தெளிந்திலை - பெரியோர் கூறியுள்ள நீதிவாக்கியங்களை யெல்லாம் படித்திருந்தும் மனத்தெளிவு பெற்றாயில்லை: மதன(ன்)வேதத்தின் மார்க்கம்உம் பார்த்திலை - மன்மதவேதத்தின் முறைமையையும் காண்கின்றாயில்லை: நறுந் தார் முடி கீசகா - நறியமாலையை யணிந்த முடியையுடைய கீசகனே! நாசகாலம் வரும் பொழுது—, ஆண்மை உம் - மனவுறுதியும், ஞானம்உம் - நல்லறிவும், கெடும் ஓ-கெட்டுவிடுமோ?' என்று-எனச்சொல்லி, அழுதனள்-புலம்பலானாள்; (எ-று.)

பாசம் - பாஶம்: கயிறு என்ற பொருளுள்ள இவ்வடசொல், மனப்பிணிப்பு என்ற பொருளை இலக்கணையாற் காட்டும். மதனவேதம் - வாத்ஸ்யாயனம்; அடியோடு தன்மீது விருப்பமில்லாதவரைப் புணரலாகா தென்பது, மதனவேதத்தின் மார்க்கமாம். (கச)

15.—மூன்று கவிகள் - ஒருதொடர்: சுதேட்டிணை நீங்கப்புக் துலையாமல் கீசகனுவிகாக்க 'இந்தமாலையைக் கொடுத்து மீள்வாய்'என்று ஆதுலந்தொடு வண்ணமகளை வேண்டினமையைத் தெரிவிக்கும்.

ஆகுலத்தொடுநெஞ்சந்தளர்ந்துதன் னருகினின்றவருந்ததியேநிகர், மீகுலக்கொடிதன்னிருதாள்மிசை வீழ்ந்துநின்றன்விழியருளுண்டெனிற், கோகுலத்திலுயர்ந்தவென்காதலன் கோலுநீதியுங்குன்றுவெனதுரை, நீகுலைக்கிலனைத்துமின்றேகெடு நேரிழாயிதுநெஞ்சுறக்கேட்டியால்.

(இ - ள்.) (பின்பு அந்தச்சுதேஷ்ணை),—ஆகுலத்தொடு-வருத்தத்தினால், நெஞ்சம் தளர்ந்து - மனம் சோர்ந்து, தன் அருகில் நின்ற—, அருந்ததி நிகர்-அருந்ததியை யொத்த, மீ குலம் கொடிதன்-சிறந்த குடியிற்றோன்றிய கொடி போன்றவளான திரௌபதியின், இரு தாள்மிசை வீழ்ந்து - இரண்டு பாதங்களிலே வணங்கி,—(அவளைநோக்கிப் பின்வருமாறு கூறலானாள்). நேர் இழாய்-அழகிய ஆபரணங்களை யணிதற்குரியவளே! நின்தன்-உன்னுடைய,

விழி அருள் உண்டு எனில்-கண்ணின் அருள்நோக்கம் உண்டு என்றால், (அப்போது), கோகுலத்தில் - அரசர்திரளில், உயர்ந்த - மேம்பட்ட, என் காதலன் - என் கணவனுடைய, கோல்உம் - செங்கோலும், நீதிஉம் - அரசநீதியும், குன்றா - பழுதுபடா: எனது உரை - என்பேச்சை, நீ—, குலைக்கில்- (செய்யாது) தட்டினால், அனைத்துஉம் - (என்காதலனுடைய கோலும் நீதியுமாகிய) எல்லாமும், இன்றுஎ கெடும் - இன்றைத்தினமே அழியும்: இது - (யான்சொல்லிய) இந்தப்பேச்சை, நெஞ்சு உற - மனம் பொருந்த, கேட்டி - கேட்பாய்: (எ - று.)

நீ கீசகனிடத்துப் போய்வரவேணு மென்று நேரே சொல்லுதற்குச் சூசிப் பூர்வபீடிகையாக இங்ஙனம் சுதேஷ்ணை கூறுகின்றாள். விழியருள் உண்டெனில் என்பதன் கருத்து - என்மீது கருணைகொண்டு நான் சொல்வதையேற்றுப் புரிவாயேயானால் என்பது. இதுஎன்று சுட்டியது-எனதுரை நீ குலைக்கில் அனைத்துமின்றே கெடும் என்பதை. கீசகனது புஜபலத்தினாலேயே விராடன் தேசத்தை இனிதுஆள்கின்றா னென்பதுகருதி,சுதேஷ்ணை இவ்வாறு கூறினாள். ஆல் - ஈற்றசை. (கரு)

16. இளையனாதலினென்னிளையோன்மனத் தெண்ணமின்றியிகன்மதனம்பினா, லளையுமேனியனாகிநின்மெய்ந்நல மாதரித்தின்றடாதுசெய்நீர்மையால், விளையுமேகொடுவெம்பழியிப்பழி விளைவுறாமல்விரகினக்காதலைப், களையுமாறெண்ணினாங்கவனாவியுங் காத்துநின் பெருங்கற்பையுங்காக்குமால்.

(இ - ள்.) என் இளையோன் - என்தம்பி, இளையன் ஆதலின் - (அறிவு முதிராத) இளமைப்பருவத்தோனாதலால், மனத்து—, எண்ணம் இன்றி - ஆலோசனை யில்லாமல், இகல் மதன் அம்பினால் - மாறுபாட்டையுடைய மன்மதனுடைய அம்பினாலே, அளையும்-தொளைக்கப்பெற்ற, மேனியன் ஆகி - உடம்பையுடையவனாய், நின் மெய் நலம் - உனது உடலினாற்பெறலாகும் இன்பத்தை, ஆதரித்து-விரும்பி, இன்று-இன்றைத்தினம், அடா(த)து-தகாத செயலை, செய் - செய்யத்தொடங்கிய, நீர்மையால் - தன்மையினால், (முடிவில்), கொடு வெம் பழி - மிகக் கொடிய பழி, விளையும்ஏ - உண்டாகுமே: இபழி விளைவுஉறாமல் - இந்தப்பழி யுண்டாகாதபடி, விரகின் - தந்திரமாக, அ காதல்நோய் - (அவனுடைய) அந்த ஆசைநோயை, களையும் ஆறு - போக்கும்வகையை, எண்ணின் - எண்ணினால், ஆங்கு - அப்போது, (அச்செயல்), அவன் ஆவிஉம் காத்து - அந்தக்கீசகனுடைய உயிரையுங் காத்து, நின் பெருங் கற்பைஉம் காக்கும்—; (எ - று.)—ஆல் - தேற்றம்.

திரௌபதியின் மேனியைத் தீண்டினால் பிறர்கற்பையழித்தா னென்றபழியும், தீண்டாது உயிரொழிந்தால் பிறர்மனை நயந்து உயிர்நீத்தா னென்றபழியும் விளையுமென்னலாம். பழி விளையாமல் அந்தக்கீசகன் உயிருய்வதற்கு உபாயம் மேலிற் கவியிற் கூறுகிறாள்: அச்செயலை நீ செய்யவேணுமென்றே பதினேந்தாஞ் செய்யுளில் சுதேஷ்ணை வேண்டியது. (கசு)

17. எண்ணுகின்றனனியானொன்றுநீமருதெனதுவாய்மையெதிர்கொண்டிளையவ,னண்ணுமில்லிடைச்சென்றிந்தநாண்மலர் நறைகொண்மாலையைநல்கினைமீளுவாய், கண்ணினின்னுருக்காணினுமற்றவன் கன்னமின்புறக்கட்டுரைகேட்பினும், வண்ணமாமகளேயுயிர்நிற்குநீ வாழியேகிவருகெனவாழ்த்தினாள்.

(இ - ள்.) யான் ஒன்று எண்ணுகின்றனன் - யான் ஒருவார்த்தையை ஆலோசித்துச் சொல்லுகின்றேன்: நீ—, மருது - மறுத்துச் சொல்லாமல், எனது வாய்மை - எனது வாயிலிருந்து வருவதை, எதிர்கொண்டு - ஏற்றுக்கொண்டு, இளையவன் நண்ணும் இல்லிடை சென்று - (எனது)தம்பி வசிக்கிற வீட்டினிடத்துப் போய், இந்த நாள் மலர் நறை கொள் மாலையை - இந்தப் புதியமலர்கொண்டுதொடுத்த நறுமணமுள்ள மாலையை, நல்கினை - கொடுத்துவிட்டு, (உடனே), மீளுவாய் - திரும்பிவிடுவாய்: அவன்-அந்த (என்தம்பியான) கீசகன், வண்ணம் மா மகளே - அலங்காரஞ் செய்யுஞ் சிறந்த பணிப்பெண்ணே! நின் உரு - உன்வடிவத்தை, கண்ணின் காணின் உம்—, கன்னம் இன்புஉற - காது மகிழ்ச்சியடைய, கட்டுரை கேட்பின்உம்- (உன்னுடைய) தொடுத்துச் சொல்லும் பேச்சைக் கேட்டாலும், உயிர் நிற்கும் - (அவனுடைய) உயிர் (உடலில்) தரிக்கும்: ஏகி வருக - போய் வருவாயாக: நீ வாழி - நீ வாழ்வாயாக, என - என்றுசொல்லி, (அந்தத் திரௌபதியை), வாழ்த்தினாள்—; (எ - று.)—மற்று - அசை.

கீசகனிடத்துச் சென்று வருவதனால், நின்கற்பிற்கு யாதோரிடையூறுமின்றி யிருக்கவேணுமென்ற கருத்தினால், 'நீ வாழி' என்று வாழ்த்தினாள்.()

18.—திரௌபதி அந்நச்சுதேஷ்ணை கூறிய சொல்லைக் கண்டித்தபடியே வேறு வழியில்லாமையால் அவள்சொற்படி மலர்மாலையைக் கீசகனிடத்துக் கொண்டு போதல்.

மொழியலாதமொழியைச்சுதேட்டிணை மொழிந்தபோதுமுதுக்குறைவுள்ளவப், பழியிலாமொழிப்பாவைவெம்பாதகம் பகர்தியென்னைவெருதொழிபாவைநீ, யழிவிலாதபெருங்கிளைக்கல்லல்கூ ரழிவுவந்ததறிந்திலையென்றுதன், விழிகளாரஞ்சொரியக்கொடுத்தபூ வேரிமாலைகொண்டேகினண்மின்னனாள்.

(இ - ள்.) சுதேட்டிணை—, மொழிஅலாத மொழியை - சொல்லத்தகாத பேச்சாகிய அந்தச் சொல்லை, மொழிந்தபோது—; முதுக்குறைவு உள்ள - பேரறிவு படைத்த, அ - அந்த, பழி இலா மொழி பாவை - குற்றமில்லாத பேச்சுக்களையுடைய பெண்ணான திரௌபதி, (சுதேஷ்ணையை நோக்கி),—'வெம் பாதகம் பகர்தி - கொடியபாவச் செயலைச் சொல்லுகின்றாய்: பாவை - பிரதிமைபோன்றவளே! (நான் பின்வருமாறு சொல்வது குறித்து),நீ-,என்னை வெருது ஒழி-என்மீது வெறுப்புக்கொள்ளாம விருப்பாயாக: அழிவு இலாத - அழிதலில்லாத [நல்வாழ்வு வாழ்கின்ற], பெருங் கிளைக்கு - (உன்னுடைய) பெரிய சுற்றத்துக்கு, அல்லல் கூர் - துன்பம்மிகுதற்குக் காரணமான, அழிவு—,

வந்தது - வந்ததை, அறிந்திலை - அறிந்தாயில்லை;' என்று-எனச்சொல்லி,— தன் விழிகள் - தனது கண்கள், ஆரம் சொரிய - முத்துப்போன்ற நீரை யுகுக்க,—கொடுத்த - (அந்தச்சுதேஷ்ணை) கொடுத்திட்ட, பூ வேரி மாலை - மலர்கொண்டு தொடுத்த மணமுள்ள மாலையை', கொண்டு - எடுத்துக்கொண்டு, மின் அனாள் - மின்னல்போன்ற பேரொளிபடைத்த உடலையுடைய அந்தத் திரௌபதி, ஏகினள் - செல்லலானாள்; (எ - று.)

நீ சொல்லுகிற வார்த்தையைத் தட்டாமற் செய்யவேண்டுவது பணிப்பெண்ணாகிய எனக்குக் கடமை யென்று செய்கின்றேன்: ஆனாலும், இதனால் உன்னுடைய தம்பிமார்க்கு நாசமே விளையும்: இதனை யறிந்திலை யென்று மேல்விளையப் போவதை ஆராய்ந்து திரௌபதி கூறினா ளென்க. ஆரம் - கண்ணீருக்கு, உவமவாகுபெயர். சுதேஷ்ணை 'எனக்குத் தாகமாக இருத்தலாற் பருகுமாறு சுரையை இந்தப்பாத்திரத்தில் வாங்கிவருக' என்று வண்ணமகளை நோக்கிக்கூற, அன்னாள் தடுத்துப்பேச, அந்த இராணி கட்டாயப்படுத்தியனுப்பினா ளென்று முதனூலி லுள்ளது. (கஅ)

19.—திரௌபதியைக் கீசகனிடத்துச் சென்று வரும்படியேவிய சுதேட்டிணையைக் குறித்த கவிக்கூற்று.

ஆண்டுவந்ததுருபதன்மாமக ளடைந்தநாட்டொட்டமரரொரைவரே, தீண்டலன்றியொருவருமென்னைமெய் தீண்டுவாரிலையென்றென்றுசெப்பவு,நீண்டசெங்கைத்தரணிபன்காதலி நினைவிலாமனெறியற்றதம்பிபான், மீண்டுமெவ்வழியேகென்றுரைப்பதே விதியையாவர் விலக்கவல்லார்களே.

(இ-ள்.) ஆண்டு வந்த - அப்போது வந்த, துருபதன் மா மகள் - துருபதனுடைய சிறந்த மகளாகிய திரௌபதி, அடைந்த நாள் தொட்டு - (தான் விராடன்மனைவியினிடம் வண்ணமகளாகிச்) சேர்ந்த நாள்முதல், 'அமரர் ஓர் ஐவர் ஏ தீண்டல் அன்றி - ஐந்துகந்தருவதேவர்களே (தன்னைத்) தீண்டுவதன்றி, ஒருவர்உம் - வேறொருத்தரும், என்னை —,மெய் தீண்டுவார் இலை—,' என்று என்று செப்பஉம் - என்று பலமுறை சொல்லியிருக்கவும்,—நீண்ட செம் கை - (முழங்தாளளவும்) நீண்டுள்ள செவ்விய கையையுடைய, தரணிபன் காதலி - விராடமன்னவனுடைய மனைவி, நினைவு இலாமல் - ஆலோசனையில்லாமல், நெறிஅற்ற தம்பிபால் - ஒழுக்கங்கெட்ட தம்பியாகிய கீசகனிடத்து, மீண்டும் - மறுபடியும், அ வழி - அவனுள்ள இடத்து, ஏகு - ஏகுவாய், என்று உரைப்பதுஏ - என்று (திரௌபதியைநோக்கிச்) சொல்லதோ? [இது தகுதியன்று என்றபடி]: விதியை யாவர் விலக்க வல்லார்கள்—? (எ - று.)

'விதியை யாவர் விலக்கவல்லார்கள்' என்ற பொதுப் பொருள் கீழ்க்கூறிய சிறப்புப்பொருளைச் சமர்த்தித்ததனால், இது-வேற்றுப்பொருள்வைப்பணி. விதி திரௌபதி வியாஜமாகக் கீசகன் இறக்கவேணு மென்பது. (கக)

வேறு

20.—உதயகாலத்தில் திரௌபதி கீசகன் மனையிலேகுதல்.

மாதவள் கீசகன் மனையி லேகவற்
போதக லவுமவன் புலம்பல் போகவும்
பாதமில் வன்றிறற் பாக னூர்ந்ததே
ராதப னுதயவெற் பணுகி னானரோ.

(இ - ள்.) மாது அவள் - பெண்ணான அந்தத்திரௌபதி, கீசகன் மனையில் ஏக - கீசகனுடைய மனையிலே செல்லவும், (அவ்வேளையில்), அல் போது அகல உம் - இராப்போது கழியவும், அவன் - அந்தக்கீசகனுடைய, புலம்பல் - தனிமையினாலாகிய துன்பம், போகவும்—,—பாதம் இல் - காலில்லாதவனான [முடவனான], வல் திறல் - மிக்க சாமர்த்தியத்தை யுடைய, பாகன் - பாகனாகிய அருணனென்பவனால், ஊர்ந்த - செலுத்தப் பெற்ற, தேர் - தேரின்மீது, ஆதபன் - சூரியன், உதயவெற்பு - உதய மலையிலே, அணுகினன் - அடைந்தான்; (எ - று.)—அரோ - ஈற்றசை.

தான் காலில்லாதிருக்கையில் ஒற்றைச்சக்கரத்தையுடைய சூரியனது தேரை ஒருநாளிற் பகலும் இரவும் உண்டாகும்படி வெகுவிரைவாகச்செலு த்துதலால், 'வன்றிறற் பாகனூர்ந்த தேர்' எனப்பட்டது.

இதுமுதல் இருபத்தாறுகவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரொன்று மாச்சீரும், மற்றவை விளச்சீர்களுமாகிய அளவடிநான்குகொண்ட கலி விருத்தங்கள். (உ0)

21.—திரௌபதியைக் கண்டதும் கீசகன் தகாதமொழி சொல்ல, அவள் சூரியனை வணங்குதல்.

தருக்கியகாமுகன்றகாதுசொல்லவே
யுருக்கிளர்சாயலோடுளமழிந்துபோய்
முருக்கிதழ்வல்லிதன்முளரிச்செங்கையா
லருக்கனையிறைஞ்சினளழிவில்கற்பினள்.

(இ-ள்.) தருக்கிய-வலிமைச்செருக்கைக் கொண்ட, காமுகன் - காமுகனாகிய கீசகன், தகா (த) து - தகாதவார்த்தைகளை, சொல்லவே—,—அழிவு இல் கற்பினள் - அழிதலில்லாத கற்பையுடையவளாகிய, முருக்கு - பலாச மலர்போன்ற, இதழ் - உதட்டையுடைய, வல்லி - கொடிபோன்றவளான அந்தத் திரௌபதி,—உரு - (தனது) வடிவத்திலே, கிளர் - விளங்கு கின்ற, சாயலோடு - நிறத்துடனே, உளம் - மனமும், அழிந்து - அழிய, போய்—,—தன் - தன்னுடைய, முளரி - தாமரைமலர்போன்ற, செங் கையால் - சிவந்த கையினால், அருக்கனை - சூரியனை, இறைஞ்சினள் - வணங்கினள்; (எ - று.)—சூரியனை வணங்கின படியை அடுத்த செய்யுள் தெரிவிக்கும்.

ஜகத்தில் நடப்பதற்கெல்லாம் ஸாட்சி யாகிய தேவதை யாதலால், சூரியனை யிறைஞ்சிக் கூறினள். (உக)

22.—சூரியனைத் தன்னிடரைப் போக்குமாறு திரௌபதி வேண்டுதல்.

துரங்கமோரேழுடன்சோதிகூர்மணிக்
கரங்களோராயிரங்கவினத்தோன்றினாய்
வரங்கொள்வேனின்னையான்மரபுபொன்றுமென்
றிரங்குறுமென்னகத்திடரைநீக்குவாய்.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) துரங்கம் ஓர் ஏழ் உடன்-ஏழுகுதிரைகளுடனே, சோதிகூர்-ஒளிமிக்க, ஓர் ஆயிரம் மணி கரங்கள்-அழகிய ஆயிரங் கிரணங்கள், கவின-விளங்கும்படி, தோன்றினாய்-உதித்துள்ளவனே! நின்னை யான் வரம் கொள்வேன் - உன்னிடத்துப் பின்வருமாறு நான் வரம்பெறுவேன் [நீ எனக்கு ஒருவரம் தரவேணுமென்றபடி]: 'மரபு-என்குலத்தின் பெருமை [கற்புநெறி கெடாத் தன்மை], பொன்றும் - இந்தக் கீசகனால் அழிவுறுமே!' என்று—, இரங்குறும் - வருந்துகின்ற, என் அகத்து - என்மனத்திலுள்ள, இடரை - துன்பத்தை, நீக்குவாய் - போக்குவாயாக; (எ - று.)

சூரியன் தேர்க்குக் குதிரைகள் ஏழ் என்று சிலவிடத்தும், சூரியன் குதிரைகள் ஏழில் ஒன்று ஏழ் [ஸப்த] என்றபெயரினதுஎன்று சிலவிடத்தும் கூறப்பட்டுள்ளது. (உஉ)

23.—சூரியனை வேண்டிநின்ற திரௌபதி கீசகன்முன்னர் மலர்மாலையைக் கொடுத்துவிட்டு நிற்றல்.

என்றுகொண்டென்றினைப்பணிந்துமன்றலாற்
கன்றியகீசகக்கலகன்முன்புபோய்
மன்றலந்தொடையலும்வழங்கிமெய்வெரீஇ
நின்றனளாநிலைநின்றகற்பினாள்.

(இ - ள்.) என்று கொண்டு - என்றுசொல்லிக்கொண்டு, என்றினை - சூரியனை, பணிந்து - வணங்கி,—(பின்பு), மன்றலால் - புணர்ச்சிவிருப்பினால், கன்றிய - வாடிய, கீசகன் கலகன் - கீசகனென்ற கலகஞ்செய்வானது, முன்பு - முன்னிலையில், போய்—,— மன்றல் அம் தொடையலும் வழங்கி - நறுமணமுள்ள அழகிய பூமாலையையுங் கொடுத்துவிட்டு, மெய் வெரீஇ - உடல் நடுக்கங்கொண்டு, நின்றனள்—: (யாவளெனில்),— நிலை நின்ற கற்பினாள் - உறுதியாகவுள்ள கற்பையுடையவளான திரௌபதி.

எத்துணைக்கொடியவனாயிருப்பினும் அவன்முன் நிற்கும் போதும் தன் கற்பைக் கெடாது பாதுகாத்துக்கொள்வது என்ற உறுதியுடன் திரௌபதி நின்றனளென்பார் 'நிலைநின்ற கற்பினாள் நின்றனள்' என்றார். கீசகக் காலன்என்றுபிரதிபேதம். ஆல் - அசை. (உங)

24.—அப்போது கீசகன் படுக்கையி லிருந்த நிலை.

காமருகுளிரிபைங்கதலிமெல்லடை
தாமரைவளையம்வண்டாதருபல
ராமுறையணைத்துமெல்லமளிமேல்விரித்
தீமவல்லெரியின்பேலென்னவைகினான்.

(இ - ள்.) காமரு குளிரி - அழகிய குளிர்ச்சியையுடைய, பைந் கதலி மெல் அடை - இளைய வாழையின் மெல்லிய தளிரிலையும், தாமரைவளையம் - தாமரைச்சுருளும், வண் தாது அறு மலர் - வளப்பமுள்ள மகரந்தம் நீங்காத தாமரைமலரும், ஆம் - முதலாகிய, முறை அனைத்தும் - முறைமையாகிய யாவும், மெல் அமளிமேல் விரித்து - மெல்லிய படுக்கையின்மேற் பரப்பி, ஈமம் வல் எரியின் மேல் என்ன - சுடுகாட்டிற் சுடுநெருப்பின் மீது பிணம் இருப்பதுபோல, வைகினன் - தங்கியிருந்தான்; (எ - று.)

தாபத்தைப் பொறுக்கமாட்டாமையாற் கீசகன் குளிர்ச்சியை வேண்ட, ஏவலாளர் சைத்தியோபசாரமாகப் படுக்கையில் வாழைத்தளிர் முதலியவற்றை யிட்டுவைத்தனராக, அதன்மேற் படுத்திருக்கும் கீசகனுக்கு அப்படுக்கையும் பெருவெப்பத்தைச் செய்வதனால் ஈமவெரியின்மேற் கிடப்பது போலத் தவிப்புற்றுக் கிடந்தன னென்கிறார். இவனுக்கு உண்டாகிய காமதாபம் இவனுயிரையே கொண்டுபோவதற்குக் காரணமா மென்று குறிப்பிக்க, இவனுக்கு உயிருடனிருக்கும் போதே ஈமவெரியிற் கிடந்தாற் போலுந் தன்மை வாய்த்த தென்றது. குளிரி - கல்லாரமலரென்பாரும், பீலிக்குஞ்ச மென்பாரு முளர். (உச)

25.—பலமாதர் சந்தனம் முதலியவற்றை அவன் தாபந்தணிக்கக்கருதி வீச, அவையும் வெப்பத்தை மிகுவிப்பன வாதல்.

சாந்தொடுதண்பனிநீருந்தாமமு
மேந்தியகரத்தினரேழைமார்பலர்
காந்தியகனன்மிசைக்காட்டுநெய்யென
வேந்தனதுடலகம்வெதும்பவீசினர்.

(இ - ள்.) சாந்தொடு சந்தனமும், தண் பனி நீர்உம்-குளிர்ந்த பனிநீரும், தாமம்உம்-பூமாலையும், ஏந்திய-தாங்கியுள்ள, கரத்தினர்-கையையுடையவரான, ஏழைமார் பலர்-பலஸ்திரீகள், —(தாம் ஏந்திய அந்தச் சாந்துமுதலியவற்றை), காந்திய-பற்றியெரிகின்ற, கனல்மிசை-நெருப்பிலே, காட்டும்-சொரியப் பெறுகின்ற, நெய் என - நெய்யைப்போல, (ஏற்கெனவே காமதாபத்தால் வெப்பங் கொண்டுள்ள), வேந்தனது - கீசகனென்ற அரசகுமாரனது, உடல் அகம் - உடம்பு, வெதும்ப-(பின்னும்)தாபங்கொண்டெரியுமாறு, வீசினர்-எறிந்தார்கள்.

பற்றியெரிகின்ற நெருப்பிற் பெய்யும் நெய் எங்ஙனம்அந்தநெருப்பைப் பின்னும் பற்றியெரியுமாறு செய்யுமோ, அங்ஙனமே ஏழைமார் கீசகன்மீது பெய்த சாந்து முதலியவை அவன்காமதாபத்தை மிகுவிக்கலாயின வென்பதாம். 'வீசினர்' என்ற சொல்வினாற்றலால், அவனருகே வந்து சந்தனத்தை யப்புதல் முதலியன செய்யவும் இயலாதபடி அவன்மேனி வெப்பம் மிக்கிருந்த தென்பது பெறப்படும். கீசகனுடைய விரகதாபத்தைச் சந்தனம் முதலியன மிகுவித்தன என்று கூறவேண்டிய இடத்தில் 'காட்டும்' என்று பிரயோகித்திருத்தலால், இலக்கணையால், அச்சொற்குச் சொரியப் பெற்ற என்று பொருள் கூறலாயிற்று. (உரு)

### 26.—கீசகன் தன்முன்னே நிற்கும் திரௌபதியைக் காணுதல்.

தாக்கியகாமநோய்தழைக்கவன்புற
நோக்கியதிசையெலாங்காணுநோக்கினன்
பாக்கியநெஞ்சுறப்பலித்ததென்னவே
நீக்கியமடந்தைமுனிற்றல்கண்டுளான்.

(இ - ள்.) தாக்கிய - (தன்னை) வருத்திய, காமம் நோய் - மன்மதனால் நேர்ந்த வியாதியானது, தழைக்க-கிளையாகிற்க, அன்புஉற-காதல்பொருந்த, நோக்கிய-கண்ணுக்குஎட்டிய,திசை எலாம்-திக்குக்கள் முழுவதிலும்,காணும்-பார்க்கின்ற, நோக்கினன் - கண்பார்வையை யுடையவனான கீசகன்,—'பாக்கியம் - (தான்செய்துள்ள) புண்ணியப்பேறு, பலித்தது - பயனையுண்டாக்கிற்று', என்ன - என்று கருதுமாறு, நீக்கிய மடந்தை - (தன்னை) முன்பு விலக்கிய பெண்ணாகிய திரௌபதி, முன் நிற்றல் - முன்னே நிற்பதை, நெஞ்சுஉற - மனமார, கண்டுளான் - பார்த்தவனானான்; (எ - று.)

காமநோய் மிகமிக கண்ணுக்குத் தெரியுமிடங்களி லெல்லாம் கீசகன் மருளமருள விழித்துப்பார்த்தவனாய், திரௌபதிவந்து முன்னிற்றலைக் கண்டானென்க. அவள் முன்னேநின்றது - தான்செய்த புண்ணியப்பயனே அவளைத் தன்முன்னே வந்துநிற்குமாறுசெய்தது என்று அந்தக்கீசகன் கருதுதற்கு இடங்கொடுத்தது என்ற கருத்துப்பட, 'பாக்கியம்பலித்த தென்ன நெஞ்சுறமடந்தைமுன்நிற்றல் கண்டுளான்' என்றார். (உசு)

### 27.—இரண்டுகவிகள் - தன்னுதரந்தோற்றத் திரௌபதியை வந்தனள்என்று கீசகனழைத்தலைத் தெரிவிக்கும்.

வந்தனளென்னுடைமாதவப்பயன்
வந்தனளென்னுடைவழிபடுந்தெய்வம்
வந்தனளென்னுடையாவிவாழ்வுற
வந்தனளென்னுடைவண்ணமங்கையே.

மூன்றுகவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) என்னுடை மாதவம் பயன் - என்னுடைய பெருந்தவத்தின் பயன் போன்றவள், வந்தனள்—: என்னுடை வழிபடும் தெய்வம் - யான் வழிபடுகின்ற தெய்வம் போன்றவள், வந்தனள்—: என்னுடை ஆவி - என்னுடைய உயிர்போன்றவளான பெண், வந்தனள்—: என்னுடை வண்ண மங்கை - என்னுடைய வண்ணமங்கை, வாழ்வு உற-(யான்) வாழ்ச்சியடைய, வந்தனள்—: (எ - று.)

வழிபடுகிறதெய்வம் தன்விருப்பத்தை யளிக்கவல்லதாதல்போல இந்த வண்ணமங்கை தன்விருப்பமாகிய கலவியின்பத்தை யளிப்பாளென்னுங் கருத்தினால், அவளை 'வழிபடுந்தெய்வம்' என்கின்றான். என்னுடை ஆவி வாழ்வுற என்னுடை வண்ணமங்கை வந்தனள் வந்தனள் என்று கூட்டி யுரைப்பாருமுளர். (உஎ)

28. வருகநீயருகுறமதுரவாசகந்
தருகநீயிருசெவிதழைக்கவுள்ளநின்
றுருகநீதழுவுகவுடலந்தேமுறப்
பருகநீவழங்குகபவளவாயெனு.

(இ - ள்.) நீ—, அருகு உ.ற - சமீபத்திற் பொருந்த, வருக—: நீ—, இரு செவி தழைக்க - (என்னுடைய) இரண்டுகாதுகளும் செழிக்குமாறும், நின்று உள்ளம் உருக - (உன்வாசகங்கள் என்மனத்திலே) நிற்பதனால்(அந்த) மனம் உருகுமாறும், மதுரம் வாசகம் - இனிய வார்த்தைகளை, தருக—: உடலம் தேம் உற - என்னுடம்பு இன்பமடையுமாறு, நீ தழுவுக—: நீ—, பருக - (நான்)நுகருமாறு, பவளம் வாய் - பவழம் போன்ற(உன்)வாயிதழை, வழங்குக - தருவாயாக, எனு - என்று சொல்லி,—(எ - று.)—"கிடந்தவ னெழுந்து" என்று மேற்கவியில் தொடரும். (உஅ)

29.—தன்னைக் கீசகன் பற்றவருகையில் திரௌபதி யோட, கீசகனும் தொடர்ந்து செல்லுதல்.

கிடந்தவனெழுந்தொருகேடுவந்துறு
மடந்தையைத்தழுவுவான்வந்துசார்தலும்
விடந்திகழ்விழியினாளோடவேட்கையாற்
றொடர்ந்தனனறிவிலாச்சோரன்றானுமே.

(இ - ள்.) கிடந்தவன் - படுக்கையிற் படுத்திருந்தவனான கீசகன், எழுந்து—, ஒரு கேடு வந்துறு மடந்தையை - ஒருதீங்கும் வரப்பெறாத பெண்ணாகிய திரௌபதியை, தழுவுவான் - ஆலிங்கனஞ்செய்துகொள்ளுதற் பொருட்டு, வந்து சார்தலும் - வந்துசேர்ந்த வளவில்,—விடம் திகழ் விழியினாள் - கொடுமைவிளங்குகின்ற கண்பார்வையை யுடையவளான அந்தத் திரௌபதி, ஓட - ஓடாநிற்கையில்,—அறிவு இலா சோரன் தான் உம் - நல்லறிவு இல்லாத கள்ளநெஞ்சை யுடையவனான அந்தக்கீசகனும், வேட்கையால்-காதலால், தொடர்ந்தனன் - (அவளைத்) தொடர்ந்து சென்றான்; (எ - று.)

'கேடுவந்துறா மடந்தை' என்றது, அவளுடைய பாதிவிரதியத்திற்கு ஒருவராலுந் தீங்கு இழைக்க முடியாது என்ற குறிப்பினது. அவள் நோக்கே அந்தக் கீசகனுடைய மரணத்திற்குக் காரண மாவதால், 'விடந்திகழ் விழியினாள்' என்றதென்னலாம்: அன்றியும், கருவிழிக்கு விடத்தை உவமை கூறுதலும் உண்டு. (உகூ)

30.—கீசகனால் தொடரப்பெற்று ஓடின திரௌபதி அரண்மனையில் அரசர்காண வந்து வீழ்தல்.

ஓடியமடக்கொடியுலகுகாவலன்
சூடியமணிமுடிதுலங்குகோயிலின்
வாடியகொடியெனவந்துவீழ்ந்தன
ணீடியவேத்தவைநிருபர்காணவே.



(இ - ள்.) ஓடிய - (அக்ஙனம்) ஓடிப்போன, மடம் கொடி-மடப்பத்தையுடைய கொடிபோன்றவளான திரௌபதி,—வாடிய கொடி என-வாட்டமுற்ற கொடி போல,—வேந்து அவை நீடிய நிருபர் காண-அரச சபையிலே மிக்குள்ள அரசரெல்லாங் காணுகிற்கையில், உலகு காவலன் - விராடதேசத்திற்குத் தலைவனாகிய விராடராசன், சூடிய - அணிந்துள்ள, மணி முடி - இரத்தினம் பதித்த கிரீடத்தோடு, துலங்கு - விளங்குகின்ற, கோயிலின் - அரண்மனையிலே, வந்து வீழ்ந்தனள்—; (எ - று.)

தன்முறையீட்டை யுணர்த்துமாறு காவலன்மணிமுடியுடன் துலங்கு கோயிலிற் சென்றன ளென்க. இராசசபையிற் பலஅரசர் திரண்டிருப்பாராதலால்,'நீடிய வேத்தவைநிருபர் காணவீழ்ந்தனள்' என்றார்: இனி, நிருபர் என்றது - விராடனைக் காட்டுமென்றலும், தருமபுத்திரனைக் காட்டு மென்றலும் உண்டு. நீடிய - பெருமைபெற்ற, வேத்தவை யெனினுமாம். (௩௦)

31.—அந்தக் கீசகன் தன்னிணைக்கையால் திரௌபதியைத் தீண்டக் கருதுதல்.

தொழுந்தகைமனுகுலத்தோன்றல்கண்ணெதிர்
விழுந்தழுந்தெரிவையைவேட்கைநோயினா
லழுந்தியகாமுகனச்சமின்றியே
செழுந்துணைக்கைத்தலந்தீண்டவுன்னினான்.

(இ - ள்.) தொழும் தகை - (யாவராலும்) வணங்குதற்கு உரிய நற்குணமுடைய, மனு குலம் தோன்றல்-மனுகுலத்திலே தோன்றியவனான விராடராஜனுடைய, கண் எதிர் - கண்ணுக்கு எதிரிலே, விழுந்து—, அழும் - அழுகின்ற, தெரிவையை - பெண்ணாகிய திரௌபதியை, வேட்கை நோயினால் - காதல்நோயிலே, அழுந்திய - ஆழ்ந்துவிட்ட, காமுகன் - காமவிச்சையையுடையவனான கீசகன், அச்சம் இன்றி - (பலருங்காண்கையில் நாம் ஒரு பெண்ணைத் தீண்டலாமோ என்கிற) கூச்சமு மில்லாமல், செழுந் துணை கைத்தலம் - வலிமையுள்ள இரட்டையான (தன்)கைகளால், தீண்ட - (அவளைப்) பற்றுவதற்கு, உன்னினான் - நினைத்தான்; (எ - று.)

மனு - வைவஸ்வதமனு. இந்தக்கீசகன் மனுகுலத்தோன்றலின் கண்ணெதிரில் அச்சமின்றித் தெரிவையைத் தீண்ட உன்னிய காரணம் வேட்கை நோயிலழுந்தியதும், அரசன்தன்னை யொன்றுஞ்செய்யமாட்டானென்ற நம்பிக்கையு மாகும். 'ஆசைவெட்கமறியாது' என்பது பழமொழி. (௩௧)

32.—சூரியனேவலால் ஒருகிங்கரன் விரைவாகவந்து அந்தத் திரௌபதியைத் தீண்டாதவாறு கீசகனை அப்பால் வீசுதல்.

உன்னுமவ்வளவையினுருளையொன்றுடைப்
பொன்னெடுந்தேரவன்புகலமற்றொரு
வன்னெடுங்கிங்கரன்சூறைமாருத
மென்னவந்தடுத்தயலெடுத்துவீசினான்.

(இ - ள்.) உன்னும் அ அளவையின் - (திரௌபதியை அந்தக்கீசகன் தீண்ட) நினைத்த அவ்வேளையில், உருளை ஒன்று உடை பொன் நெடு தேர

வன் - ஒற்றைச்சக்கரம் பூண்ட அழகிய நீண்ட தேரையுடையவனான சூரிய பகவான், புகல - ஏவ,—மற்று ஒரு வல் நெடு கிங்கரன் - வேறொரு வலிய நெடிய பணியாளன், சூறை மாருதம் என்ன அடுத்து வந்து - சுழல்காற்றுப் போல விரைந்து கிட்டிவந்து, எடுத்து—, அயல் வீசினன்-(அந்தக் கீசகனைத் திரௌபதியைத் தீண்டாதபடி) அப்பால் எறிந்திட்டான்; (எ - று.)

கீழ் இருபத்திரண்டாஞ் செய்யுளில் "இரங்குறு மென்னகத் திடரை நீக்குவாய்" என்று சூரியனைநோக்கி வேண்டிக்கொண்டதற்கு ஏற்ப, அவனேவிய கிங்கரன் இந்தத் திரௌபதியைப் பாதுகாத்தனனென்க. தான் இருந்த இடத்திற்குச் சுதேஷ்ணையின் கட்டளையினால் திரௌபதி சுராபாத்திரத்தைக் கொணர்கையில் கீசகன் இவளைக்கண்டு வலியக் கையைப்பற்ற, இவள் உதறிக்கொண்டுசெல்லுகையில் அந்தக்கீசகன் இவளைப்பின்தொடர்ந்து சென்று இராசசபையிலே கூந்தலைப்பற்றிச் சினத்தினால் இவளைக் காலினால் தள்ள, அப்போது சூரியனாலேவப்பட்ட ராக்ஷஸனொருவன் வந்து அந்தக் கீசகனைப் பூமியில் தள்ளினானாக, பின்னர் இவள் விராடராசனிடத்து முறையிட்டும் அவன் விசாரியாதுவிட்டனனென்று முதனூல் கூறும். (௩௨)

33.—விராடன் கீசகன்செயலைக் கண்டறிந்தும் அச்சத்தினால் வாளாவிருத்தல்.

கண்டனனிருந்தமண்காவல்வேந்தனு
மெண்டகுநெறிமுறையிடறுகீசகன்
றிண்டிறல்வலிமையுஞ்செயலுஞ்சிந்தையிற்
கொண்டொருவாய்மையுங்கூறவஞ்சினன்.

(இ - ள்.) இருந்த - (வேத்தவையிலே) தங்கியிருந்த, மண் காவல் வேந்தன் உம் - பூமியைப் பாதுகாத்தலை யுடைய விராடவரசனும், கண்டனன் - (கீசகனுடைய அக்கிரமச் செயலைக்) கண்ணாரக்கண்டவனாயும், எண்தகு நெறிமுறை - (பெரியோரால்) மதித்தற்குஉரிய நியாயவழியினின்று, இடறு - தவறிய, கீசகன் - கீசகனுடைய, திண் திறல் வலிமைஉம் - மிக்க வலிமையையும், செயல்உம்-அக்கிரமச் செய்கையையும்,சிந்தையில் கொண்டு-மனத்திலெண்ணி, ஒரு வாய்மை கூறஉம் - ஒருவார்த்தை சொல்லவும், அஞ்சினன்—; (எ - று.)

அரசனாதலால் நீதியிற்பிழைத்த கீசகனைத் தண்டிக்கவேண்டியதே முறையாயிருக்க அதைச் செய்யாவிடினும், 'நீ செய்வது முறையன்று: தகாத செயல்' என்றாவது சொல்லியிருக்கலாமே: அதுவுஞ் செய்திலனென்பதாம். 'வாய்மையும்'என்ற விடத்தினின்று பிரித்துக் கூட்டப்பட்ட உம்மை, எச்சப்பொருளது. (௩௩)

34.—கீசகன் திரௌபதி இவர்கள்செயலைக்கண்ட வீமன், கீசகனையழிக்குமாறு ஒருமரத்தைப் பிடுங்கும்படி வெகுண்டு நோக்குதல்.

அடுதொழிற்பலாயனனமுதமின்னையுங்
கடுமையிற்பின்றொடர்காளைதன்னையும்

படருறக்கண்டுதன்பாங்கர்நின்றதோர்
விடவியைப்பிடுங்குவான்வெகுண்டுநோக்கினான்.

(இ - ள்.) அடு தொழில் - (அரண்மனையிலே) சமையல்வேலையிலமர்ந்திருந்த, பலாயனன் - பலாயனனென்று மாறுபெயர் பூண்ட வீமசேனன்;— அழுத மின்னை உம் - அழுதுகொண்டு முன்னே செல்கின்ற மின்னல்போல் பவளான திரௌபதியையும், கடுமையில் - விசையாக, பின் தொடர் - (அந்தத் திரௌபதியைப்) பின்னே தொடர்ந்துசென்ற, காளைதன்னை உம் - இளவெருது போல்பவனான கீசகனையும், படர் உற-(தன்மனத்துத்) துன்பமுண்டாக, கண்டு - பார்த்து,—தன் பாங்கர் நின்றது ஓர் விடவியை - தன்பக்கத்திலிருந்ததொரு மரத்தை, பிடுங்குவான் - (அந்தக்கீசகனை மோதி யொழிக்கும்படி) வேரோடு பிடுங்கும்பொருட்டு, வெகுண்டு நோக்கினான் - சினக்குறிப்புக்கொண்டு பார்த்தான்; (எ - று.)

விடவி=விடபீ: கிளைகளையுடையது என மரத்திற்குக் காரணக்குறி. முதலில் மரத்தைப் பிடுங்குவான் வெகுண்டு நோக்கியது, தருமன் கருத்தையுணர்தற்பொருட்டென்னலுமாம். (ஙச)

35.—தருமன் அந்தவீமன்செயலைக் குறிப்பாக விலக்குதல்.

கனிட்டனதெண்ணமக்கங்கனாகிய
முனித்தகையுணர்ந்தவன்முகத்தைநோக்கியித்
தனிப்பெருமராமரந்தழல்கொளுந்திடா
துனக்கடுமிந்தனமன்றென்றோதினான்.

(இ-ள்.) கனிட்டனது-(தன்னினுஞ்) சிறியவனாகிய வீமசேனனுடைய, எண்ணம் - கருத்தை, அ கங்கன் ஆகிய முனி தகை - அந்தக் கங்கனென்று மாறு பெயர்பூண்ட துறவியாகிய நற்குணமுள்ள தருமபுத்திரன், உணர்ந்து - தெரிந்துகொண்டு, (அச்செயலைத் தடுக்குமாறு), அவன் முகத்தை நோக்கி - அந்த வீமசேனனுடைய முகத்தைப் பார்த்து, 'இ தனி பெரு மராமரம் - இந்தத்தனித்துள்ள பெரிய மராமரமானது, தழல் கொளுந்திடாது - நெருப்புப்பற்றி யெரிவதற்கு ஏற்றதாகாது: (ஆகையால் இப்போது), உனக்கு அடும் இந்தனம் அன்று - உனது அடுதொழிற்கு ஏற்ற விறகு அன்று,' என்று—, ஓதினான் - (குறிப்பினாற்) சொல்லி (அந்த வீமன் செயலை)த் தடுத்திட்டான்; (எ - று.)

இந்தனத்துக்கு உதவுமாஎன்று பலாயனன் பார்ப்பதாகவைத்துக் கொண்டு, 'இது விறகுக்கு உதவாதாதலால்,இதனைப் பிடுங்கவேண்டா'என்று தடுப்பவன்போல 'இந்தவேளையில் இதுகொண்டு எதிரியை ஒழிக்க முயல்வது தகாது' என்பதைக் குறிப்பித்தான் தருமபுத்திர னென்க. பலாயனனென்ற வீமனுடையசெயலை இங்குத் தருமபுத்திரன் வேறுகாரணங்கூறி மறைத்ததாக வந்தது அணியியலில் வஞ்சநவிற்சியணியின் பாற்படும்: வடநூலார் வ்யாஜோக்தி யென்பர். முனித்தகை - முனிவர்க்குரிய நற்குணமுடையவனென அன்மொழித்தொகை. (ஙரு)

36.—அதுகேட்டு வீமன் வலிமையை யடக்கிக்கொண்டுநின்றானாக, திரௌபதி விராடன் முன்னிலையில் அழுதுகொண்டு கூறுதல்.

சீரியகங்கனன்றுரைத்தசெம்மொழி
பாரியதாமெனப்பலாயனன்கொளா
வீரியமகத்துளேநிறுத்தும்வேலையிற்
கூரியவிழியினளழுதுகூறுவாள்.

(இ - ள்.) சீரிய - சிறப்புற்ற, கங்கன் - கங்கனென்று மாறுபெயர் பூண்ட தருமபுத்திரன், அன்று - அப்போது, உரைத்த - சொன்ன, செம் மொழி - நேர்மையான வார்த்தையை, 'பாரியது ஆம் - (இச்சொல்) சிறப் புற்ற பேச்சாம்,' என - என்று, பலாயனன் - வீமசேனன், கொளா - (மனத் தில்) கொண்டு, வீரியம் - (தன்) வலிமையை, (வெளிக்காட்டாது); அகத் துளே - (தன்)மனத்தினிடத்தில்தானே, நிறுத்தும் - அடக்கிய, வேலையில் - அப்போது,—கூரிய விழியினள் - கூர்மையான கண்களை யுடையவளான திரௌபதி, அழுது கூறுவாள் - அழுதுகொண்டு கூறுபவளானாள்; (எ-று.)— திரௌபதி விராடன்முன்னிலையிலே புலம்பிக் கூறுவதை, மேல் மூன்று கவிகளிற் காண்க. (௩௬)

37.—மூன்றுகவிகள் - விராடனிடம்
திரௌபதி முறையிடுவதைத் தெரிவிக்கும்.

தீண்டுதறகாதெனச்செம்மையொன்றிலான்
வேண்டியசெய்வதுவேந்துநீதியோ
வாண்டகையிதற்குநீயல்லவாமெனா
வீண்டொருமொழிகொடாதிருப்பதென்கொலோ.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) '(என்னை), தீண்டுதல்—, தகாது—', என - என்றுசொல்ல வும்,— செம்மை ஒன்று இலான் - நற்குணம் சிறிதுமில்லாதவனாகிய கீச கன், வேண்டிய(து) - (தான்) விரும்பியசெயலை, செய்வது-செய்யவிடுவது, வேந்து நீதியோ - அரசநீதிக்கு ஏற்குமோ? ஆண் தகை - ஆண்மைக்குண முடையோனே! நீ—,இதற்கு - இந்தக் கீசகனுடைய செய்கைக்கு, 'அல்ல - (இது) செய்யத்தக்கதல்ல: (அன்றி), ஆம் - (இது) செய்யத்தக்கதே,' எனா - என்று, ஈண்டு - இப்போது, ஒரு மொழி - (இவ்விரண்டில்) ஒரு சொல்லை, கொடாது - தராமல் [வாய்விட்டுச் சொல்லாமல்], இருப்பது—, என் கொல்ஓ - என்னகாரணமோ? (எ - று.)

நான் கீசகன்செயலைக்குறித்து உன்னிடம் முறையிட்டுக்கொள்ளு கிறேனே! இப்போது இந்தக்கீசகன்செயலை மன்னவனாகிய நீ கண்டிக்கவா வது வேண்டும்: அல்லது அது செய்யமுடியாவிட்டால், அவன்செயல் சரியே யென்றாவது பாராட்டவேண்டும்: இவ்விரண்டில் ஒன்றுஞ்செய்யாது இருப் பதும் ஒருமுறையோ! என்கிறாள். அக்கிரமஞ்செய்வதைக் கண்டிப்பது

செங்கோலன்முறை: அக்கிரமத்தைச் சரியென்பது கொடுங்கோலன்முறை: இவ்விரண்டில் ஒன்றிலுஞ் செல்லாதது என்னே! என்கிறாள். (ருஎ)

38. அன்புடைத்தேவிதன்னருகுதோழியாய்
நின்பெருங்கோயிலினீடுவைகினே
னென்பெருவினையினுலின்றுன்மைத்துனன்
றன்புயவலியினற்றழுவவுன்னினன்.

(இ - ள்.) அன்பு உடை-(என்னிடத்து) அன்புள்ள, தேவிதன் அருகு - (உனது) அரசியின் சமீபத்திலே, தோழி ஆய் - தோழியாகி, நின் பெருங் கோயிலின்-உனது பேரரண்மனையில், நீடு-வெகுநாள்கள், வைகினேன்-தங்கினேன்: என் பெரு வினையினுல்-என்னுடைய பெருத்த தீவினையினுலே, இன்று—, உன் மைத்துனன்—, தன் புயம் வலியினல் - தன்னுடைய புஜ பலத்தைக்கொண்டு, தழுவ-(என்னை) ஆலிங்கனஞ் செய்து கொள்ளுதற்கு, உன்னினன் - நினைத்தான்; (எ - று.)

புயவலி படைத்திருத்தலால் தான் அக்கிரமச்செயலைச் செய்தாலும் மன்னவன் கண்டிக்கமாட்டா னென்ற கருத்தினுலேயே அந்தக்கீசகன் என்னைத் தழுவநினைத்தது என்று குத்துப்பாடாகத் திரௌபதி எடுத்துக் காட்டுகின்று ளென்க. மைத்துனன் - மனைவியினுடன் பிறந்தவன். (ருஅ)

39. பெருந்தகையன்றிதுபேசலன்றிநீ
யிருந்தனையுனக்காசெங்ஙன்செல்வது
வருந்தினர்வருத்தநீமாற்றலாயெனி
னருந்திறலரசநின்னுணைபொன்றுமே.

(இ - ள்.) நீ—, பேசல் - (கீசகனைக் கண்டித்துக்) கூறுதலை, அன்றி - செய்யாமல், இருந்தனை—: இது பெருந் தகை அன்று - இது (உனக்குப்) பெருமைக்குணமாகாது: உனக்கு - (அநீதிபுரிபவரைக் கண்டிக்கமாட்டாத) நினக்கு, அரசு - அரசத்தன்மை, எங்ஙன் செல்வது - எங்ஙனம் நடக்கும்? அரு திறல் - அருமையான திறமையையுடைய, அரச - அரசனே! வருந்தினர் - வருத்தமடைந்தவரின், வருத்தம் - வருத்தத்தை, நீ—, மாற்றலாய் - மாற்ற வல்லமையற்றவன், எனின் - என்றால், நின் ஆணை பொன்றும் - உன்னுடைய அரசுசெலுத்துந்தன்மை அழிந்துவிடும்; (எ-று.)—ஏ-இரக்கம்.

அரசத்தொழிலென்பது நலிவுபட்டோரைக் காத்தலே யாதலால், அது செய்யமாட்டாத அரசும் அரசோ! என்றவாறு. பெருந்தகை-பண்புத்தொகை.

40.—இங்ஙனம் புலம்பிய திரௌபதி அந்தக்கோலத்தோடு மன்னவன்தேவியிடம் வீழ்ந்து ஏங்குதல்.

எனவிவள்புலம்பிமெய்பேய்ந்தபூழியுங்
கனதனநனைத்திடுங்கண்ணினீருமாய்
மனமிகமறுகிடமன்னன்றேவிபா
லினைவுடனெய்திவீழ்ந்தேங்கிவிம்மினள்.

(இ - ள்.) என - என்று, இவள் - இத்த்திரௌபதி, புலம்பி-அழுது' மெய் - உடம்பிலே, எய்ந்த - படிந்த, பூழி உம் - புழுதியும், கனம் தனம் நனைந்திடும் - பருத்த தனங்கள் நனையப்பெற்ற, கண்ணின் நீர் உம் ஆய் - கண்ணீரையுங் கொண்டவளாய், மனம் - (தன்) நெஞ்சம், மிக மறுகிட - மிகவுங் கலங்க, மன்னன் தேவி பால் விராடமன்னவனுடைய மனைவியாகிய சுதேஷ்ணையினிடம், இனைவுடன் - வருத்தத்துடனே, எய்தி - போய்ச் சேர்ந்து, வீழ்ந்து-கீழ்வீழ்ந்து, ஏங்கி விம்மினள்-ஏக்கமுற்று அழுதாள்; (எ-று.)

ஏங்குதல் - அக்கிரமஞ்செய்தவனையொறுத்துத் தன்னைப்பாது காக்க வேண்டியசெயலை மன்னவன் செய்யாமையால் மனவாட்டங்கொள்ளுதல். ()

41.—மூன்றுகவிகள் - ஒருதொடர்: கங்கனென்று மாறுபேர்பூண்டிருந்த யுதிஷ்டிரன் விராடனுக்கு இடித்து மதிகூறுதலைத் தெரிவிக்கும்.

பூதலமாண்மையாற்புரக்குமன்னவர்
தீதொழில்புரிஞரைத்தெண்டியாரெனி
னீதியுஞ்செல்வமுநிலைபெறுங்கொலோ
வேதிலர்தமரெனவிரண்டுபார்ப்பரோ.

(இ - ள்.) பூதலம் - பூமியை, ஆண்மையால் - (தமது) பராக்கிரமத்தால், புரக்கும் - பாதுகாக்கின்ற, மன்னவர் - அரசர், தீ தொழில் புரிஞரை - கொடுஞ்செயலைச் செய்கின்றவரை, தெண்டியார் எனின் - சிட்சிக்காமற் போவாரேயானால், (அப்போது மன்னவர்க்கு), நீதி உம் - நியாயமென்பதும், செல்வம் உம் - ஐசுவரியமும், நிலைபெறும் கொல் ஓ நிலைத்துநிற்குமோ? (முறை செலுத்தும் மன்னவர் தாம் செலுத்தவேண்டிய நீதிநெறியில்), 'ஏதிலர் - (இவர் நமக்கு) யாதோருரிமையும் இல்லாதவர்: தமர் - (இவர் நமக்குச்) சுற்றத்தார்', என - என்றுசொல்லப்படுகின்ற, அ இரண்டு - அந்த இரண்டையும், பார்ப்பர் ஓ - கருதுவார்களோ? (எ - று.)

அரசர் முறைசெலுத்தும்போது 'தமர் பிறர்' என்று பார்த்தல் தகாதாகையால், தமரிற் சேர்ந்த கீசகன் தீங்கிழைத்தஇப்போது அவனையுந் தண்டித்தலே தகுதி யென்றவாறு. 'தீந்தொழில்' என வரற்பாலது, செய்யுளின்பம் நோக்கி 'தீதொழில்' என இயல்பாயிற்று. பெறுங்கொல் ஓ என்றவிடத்து, கொல் - அசை; கொல் - வினாவெனில், ஓ - அசை. (சுக)

42\. யாருமில்லொருத்திநின்னில்லில்வைகினு
லார்வமுற்றவள்வயினன்புகூர்வது
வீரமோதருமமோவிருப்பமோவிவை
பூரியாலாதவர்புரிதல்போதுமோ.

(இ - ள்.) யார் உம் இல் - வேறொருகதியும் அற்றவளான, ஒருத்தி - ஒரு பெண்பிள்ளை, நின் - உன்னுடைய, இல்லில் - மனையிலே, (உன்னையே கதியாகநம்பி), வைகினால் - தங்கினானால், (ஒருத்தன்), அவள் வயின் - அவளிடத்து, ஆர்வம் உற்று - ஆசைகொண்டு, அன்பு கூர்வது -

காதல்கிருவது,—வீரம்ஓ - வீரச்செயலோ? (அன்றி), தருமம்ஓ - நியாயத் தக்க ஏற்றசெயலோ? விருப்பர்ஓ - காதற்செயலோ? இவை - இவ்வாறுன செயல்களை, பூரியர் அலாதவர் - கீழ்மக்களல்லாதார், புரிதல் - செய்வது, போதும்ஓ - தகுமோ? (எ - று.)

அகதியான ஒருத்திக்கு ஒருதீங்கும் வராதுபார்ப்பது வீரச்செயலும் தருமச்செயலும் ஆகுமன்றி, அவளை வலாத்காரஞ் செய்வது காதற்செயலுக்கும் தகாது: இங்ஙன் காதலிப்பதுபோன்ற செயல் அற்பர்செய்யுஞ் செய்கையே யாமென்றவாறு. (௪௨)

43. கீசகனுயினுங்கேடுசெய்தன
னசைநோய்மன்பதையனைத்தினுக்குமுண்
டேசிதுநினக்குமென்றிருந்தவேந்தொடும்
வாசகம்பலசொனுன்மறைவலானுமே.

(இ - ள்.) கீசகன் ஆயின்உம் - கீசகனுயிருந்தாலும், கேடு செய்தனன் - செய்யத்தகாத காரியத்தைச் செய்தான்: (இதற்குக் காரணம்), ஆசைநோய் - காதல்நோயென்பது, மன்பதை அனைத்தினுக்குஉம் - மனிதவர்க்கத்திற்கெல்லாம், உண்டு-உள்ளதொன்றே(என்பது):(ஆனுல்,மன்னவனுனவன் தீங்குசெய்தாரை ஒறுக்கவேண்டியவன்: அவ்வாறு தீங்குசெய்த கீசகனை நீ ஒறுக்காது வாளாஇருக்கின்ற), இது - இச்செயல், நினக்கு உம் ஏசு - (மன்னவனுன) உனக்கும் குற்றம்விளைப்பதே, என்று - இவ்வாறு, இருந்த - (ராஜசபையிலே) தங்கியிருந்த, வேந்தொடுஉம் - விராடராசனோடும், வாசகம் பல சொனுன் - பலவாசகங்களைச் சொன்னுன்: (யாவனெனில்),— மறைவலான்உம் - வேதங்களில் வல்லவனுன அந்தணவடிவங்கொண்டிருந்த யுதிஷ்டிரனும்: (எ - று.)

இரண்டாவது அடி, முதலடியைச் சமர்த்தித்துநின்றது; வேற்றுப் பொருள்வைப்பணி. கீசகனுயினும் என்ற இடத்துள்ள சிறப்பும்மை-அவன் வலியுடையவனும் மன்னவனுக்கு நெருங்கிய உறவினனும் என்றபொருளைக் காட்டும். நினக்கும் என்ற எச்சஉம்மை - எவ்வாறு கீசகனுக்கு ஏசு உண்டாக்குமோ அதுபோலவே உனக்கும் ஏசினையுண்டாக்கும் என்ற கருத்தினது. (௪௩)

44.—விராடன் மனமழிந்து தன்மனையிற் சேர்தல்.

முன்னுறமுனிவரன்மொழிந்தவாய்மையு
மின்னலோடழுதவளிசைத்தவாய்மையுங்
கன்னமூடுறச்சுடக்கருத்தழிந்துபோய்
பன்னனுந்தன்றிருமனையிலெய்தினுன்.

(இ - ள்.) முன் உற - (தன்) எதிராக, முனிவரன் மொழிந்த - முனிச்சிரேஷ்டனுன கங்கனென்ற யுதிஷ்டிரன் சொன்ன, வாய்மைஉம்-உண்மையான வார்த்தையும், இன்னலோடு - மனவருத்தத்தோடு, அழுது - புலம்பிக்

கொண்டு, அவள் - அந்தத்திரௌபதியாகிய வண்ணமகள், இசைத்த - சொன்ன, மெய்மைஉம் - உண்மைவார்த்தையும், கன்னம் ஊடுஉற-காதைத் தொளைத்துக்கொண்டு சென்றதனால், சுட - (தன்) மனத்தைச் சுடவே, மன்னன்உம்-விராடராசனும், கருத்து அழிந்துபோய் - மனம்அழிந்திட்டு, தன் திருமனையில் - தன் அழகிய வீட்டிலே, எய்தினன் - போய்ச் சேர்ந்தான்; (எ - று.)

'முன்னுற' என்பது-மொழிந்த என்பதனோடு மாத்திர மன்றி, இசைத்த என்பதனோடும் இயையும். 'மன்னனுந் தன் திருமனையி லெய்தினன்' என்ற இடத்து உம்மை, மேற்செய்யுளில் 'வீமன் மடையி லெய்தினன்' எனத் தழுவுதலால், எதிரதுதழுவியஎச்சமாம்: இனி 'மன்னன் தேவிபால் திரௌ பதி யெய்தி'என்றதைத் தழுவுதலால்.இறந்தது தழுவியதுஎனினுமாம்.(சச)

45.—வீமனும் சமையல்செய்யுமிடத்துக்குச் செல்லுதல்.

கண்ணெருப்பெழவிருகைநெருப்பெழ
வுண்ணெருப்பெழத்தனதுடனெருப்பெழ
மண்ணெருப்பெழவெழமடையிலெய்தினன்
றிண்ணெருப்பினுமிகுசினங்கொள்வீமனே.

(இ - ள்.) திண் நெருப்பின்உம் - (எப்படிப்பட்ட பொருளையும் எரிக்கும்) வலிமையுள்ள நெருப்பைக்காட்டிலும், மிகு சினம் கொள் - மிக்க கோபத்தைக்கொண்ட, வீமன்—,—கண் நெருப்பு எழ - (தன்) கண்களிலிருந்து கோபாக்கினியின்பொறி பறக்கவும், (அவ்வாறே), இரு கை நெருப்பு எழ - (மோதிப் பகையழிக்கவல்ல) இரண்டுகைகளினின்றும் நெருப்புத் தோன்றவும், உள் நெருப்பு எழ - மனத்திலும் உக்கிரந் தோன்றவும், தனது உடல் நெருப்பு எழ - (உள்ளிருக்கும் சினத்தீ வெளியேமூள்வதனால்) தன் உடம்பினின்றும் நெருப்புத் தோன்றவும், மண் நெருப்பு எழ எழ - (அந்தச் சினத்தோடு உக்கிரங்கொண்டு நடத்தலால்) நடக்கும் பூமியினின்றுங்கூட நெருப்பு மிகுதியாகத் தோன்றவும், மடையில் - சமையல்செய்யுமிடத்தில், எய்தினன் - போய்ச்சேர்ந்தான்; (எ - று.)

ஒருபொருளையுடைய 'நெருப்பெழ' என்ற தொடர் பன்முறைவந்தது- சொற்பொருட்பின்வருநிலையணி. கைநெருப்பெழ என்றது - அப்போது பகையைமோதி யொறுப்பதற்குக் கை ஒருபால் விரைவுகொண்டிருந்தமையைக் குறிப்பிக்கும். நெருப்பெழவருமடையில் என்றும் பாடம். (சரு)

வேறு.

46.—சூரியாஸ்தமன வருணனை.

பன்னிரு வரினு நாடொறுங் கனக பருப்பதம் வலம்வருந் தேரோன், மின்னிகர் மருங்குல் விரதசாரிணிபால் விளைவுறு துயரமதுணர்ந்து, தன்னொரு மரபிற் றோன்றலை வெறுத்துத் தனிப்பெருந் தேர்குட பொருப்பின், சென்னியி னுருள வுருட்டியத் திசையுஞ் சிவப்புறத் தானுமெய் சிவந்தான்.

(இ - ள்.) பன்னிருவரின் உம் - (ஆதித்தர்) பன்னிருவருள்ளே, நாள் தோறும் - தினந்தோறும், கனகம் பருப்பதம் - பொன்மலையாகிய மேரு மலையை, வலம் வரும் - பிரதட்சிணமாக வருகின்ற, தேரோன் - தேரை யுடைய சூரியன்,—மின் நிகர் மருங்குல் விரதசாரிணிபால் - மின்னலை யொத்து விளக்கத்துடன் துவண்டுதோன்றுகின்ற இடையையுடைய விரத சாரிணி யென்ற மாறுபேர்பூண்ட திரௌபதியினிடத்தில், விளைவுறு - தோன்றிய, துயரம் அது - மனவருத்தத்தை, உணர்ந்து—;—தன் ஒரு மரபில் தோன்றலை - தனது ஒப்பற்ற வம்சத்திற்பிறந்த ஆண்களிற்சிறந்தோ னாகிய விராடமன்னவனை, வெறுத்து—, தனி பெரு தேர் - (தனது) தனித்த பெரிய தேரை, குட பொருப்பின் சென்னியின் உருள உருட்டி - மேற்குமலை யின் [அஸ்தமய பருவதத்தின்] சிகரத்திலே உருண்டுசெல்லுமாறு செலுத்தி விட்டு, அ திசை உம் சிவப்பு உற - அந்தமேற்குத்திக்குஞ் செந்நிறமடைய, தான் உம் மெய்சிவந்தான்-; (எ - று.)

ஆதித்தியர் [சூரியர்] பன்னிருவராவார் - தாதா சக்கரன் அர்யமன் மித்திரன் வருணன் அம்சுமான் ஹிரண்யன் பகவான் விவச்சுவான் பூஷா சவிதா துவட்டா என்பவர்; இன்னும் சிறிதுவேறாகவும் கூறப்படுவர். இந்தப் பன்னிரு பெயரைக்கொண்ட சூரியன் ஒவ்வொருமாதத்தில் ஒவ்வொரு பெயர்பூண்டு மேருவை வலம்வந்து பகலையுண்டாக்குவ னென்ப. இந்தச் சூரியன் விரதசாரிணிக்குத் துன்பம் உண்டாகி அன்னாள் முறையிடவும் அதனைச் செவியேற்று அன்னாள்துயரத்தைப் போக்காது வாளாவிருந்த தன்வமிசத்தவனான விராடனை வெறுத்துத் தான் அங்கிருத்தற்கும் விருப் பற்றுத் தன்தேரை மேற்குமலையான அஸ்தமயமலையில் உருண்டு செல்லச் செலுத்தி அம்மனவேறுபாட்டால் தான்செல்லுந் திசையும் சிவப்புறத் தன் மெய்யுஞ் சிவந்தா னென்பதாம். சிவத்தல் - வெகுளிக்குறி; வெகுளி - நீதி நடத்தாமைபற்றி விராடன்மேற் கொண்டது: சிவத்தல் நாணத்தினு லாகியது மாம்.

இதுமுதல் ஒன்பது கவிகள் - பெரும்பாலும் ஒன்று மூன்று நான்கு ஐந்தாஞ்சீர்கள் விளச்சீர்களும், மற்றைமூன்றும் மாச்சீர்களுமாகிவந்த கழி நெடிலடி நான்குகொண்ட எழுசீராசிரிய விருத்தங்கள். (சசு)

47.—விராடநகரத்தில் யாவரும் ஆதுலமுறுதல்.

குந்திதன்புதல்வரைவருஞ்சோக முதிர்ந்திடவிதயமுங்கொதித் தார், வெந்திறல்வடிவேல்விராடனுந்தனது வேத்தியல்பொன்றலின் வெறுத்தான், செந்திருவனையசுதேட்டிணையென்னுந் தெரிவையுந் தெருமரலுழந்தா, ளந்தமாநகரிலனைவருநைந்தா ரார்கொலோவா குலமுறாதார்.

(இ - ள்.) குந்திதன் புதல்வர் ஐவர் உம் - குந்திபுத்திரர்களான பஞ்ச பாண்டவர்கள், சோகம் முதிர்ந்திட - துயரம் மிக, இதயம் உம் கொதித்தார் - மனமும் அழன்றார்கள்: வெம் திறல் வடி வேல் விராடன் உம் - கொடுந்திறலை யும் கூர்ச்சிபடிக்கப்பட்ட வேற்படையையு முடைய விராடராசனும், தனது -

தன்னுடைய, வேந்துஇயல் - அரசத்தன்மை, பொன்றலின் - அழிந்திட்ட தனால், வெறுத்தான்—: செந் திரு அனைய சுதேட்டிணை என்னும் தெரிவை உம் - அழகிய இலக்குமியையொத்த சுதேட்டிணை யென்னும் பெண்ணும், தெருமரல் உழந்தாள் - மனச்சுழற்சி கொள்ளலானாள்: அந்த மா நகரில் - அந்தப் பெரிய நகரத்திலே, (இங்ஙன்), அனைவர்உம் - யாவரும், நைந்தார் - வருந்தினார்கள்: ஆகுலம் உறுதார் ஆர்கொல்ஓ - (அந்தநகரத்தில்) துன்ப மடையாதார் யாவர்தாமோ? [எவருமில்லை என்றபடி]; (எ - று.)

விராடநகரத்தில் யாவரும் வருந்தினரென்பதை வற்புறுத்த, 'அந்த மாநகரிலார்கொலோ வாகுலமுறுதார்? அனைவரும் நைந்தார்' என்று வினவும் விடையுமாகக் கூறினர். (௪௭)

48.—திரௌபதி நள்ளிரவில் வீமனைக் கிட்டிப் பகையைமுடிக்குமாறு வேண்டுதல்.

அனைவருந்துயின்றுகங்குலும்பாலானபினழுதகண்ணீரோ
டினைவருதையல்கண்கணீர்மல்கவிறைமகன்மடைப்பளியெய்தி
நினைவருசெற்றமுடித்திடவல்லார்நீயலதில்லையிக்கங்குற்
கனைவருகழலாய்புரிவதியாதென்றாள்காளையுங்கனன்றிவைசொல்வான்.

(இ - ள்.) அனைவர் உம் - மக்களெல்லாம், துயின்று - உறங்கி, கங்குல்உம் - இரவும், பால் நாள் - பாதிராத்திரியாக, ஆன பின்—, அழுத கண்ணீரோடு இனைவரு-பெருகுகின்ற கண்ணீரோடு வருந்துகின்ற,தையல்-பெண்ணாகிய திரௌபதி, கண்கள் நீர் மல்க (தன்னிரண்டு) கண்களிலும் நீர் நிரம்பி நிற்க, இறைமகன் - ராஜகுமாரனாகிய வீமசேனனுடைய, மடைப்பளி - சமையல்செய்யுமிடத்தை, எய்தி - போய்ச்சேர்ந்து, 'நினைவரு - எண்ணத்தக்க [பெருத்த], செற்றம் - பகையை, முடித்திட - ஒழித்திடுதற்கு, வல்லார் - வல்லமையுள்ளவர், நீ அலது - நீயல்லாமல், (வேறொருவர்), இல்லை - இலர்: கனைவரு கழலாய் - ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்தவனே! இ கங்குல் - இந்தஇரவில், புரிவது - (நீ) செய்யப்போவது, யாது-எது?' என்றாள் - என்றுவினவினாள்: காளை உம் - இளவெருதுபோன்றவனான வீமனும், கனன்று - மனங்கோபித்து, இவை - இவ்வார்த்தைகளை, சொல்வான் - சொல்பவனானான்; (எ-று.)—வீமன் சொல்வதை, மேலிரண்டு கவிகளிற் காண்க.

கீசகனாற் பரிபவம் நேர்ந்ததுமுதல் கண்ணீர்பெருக வருந்தியவண்ணமிருத்தலால், திரௌபதியை, 'அழுத கண்ணீரோடினைவரு தையல்' என்று குறித்தார். இக்கங்குலிலே தான் புரியக் கருதியதை ஐம்பதாம்பாடலில் வீமன் விவரிப்பன். புரிவதியாதென்றாள் என்றஇடத்துக் குற்றியலிகரம் அலகு பெறவில்லை. இனைவரு, கனைவரு, வா - துணைவினை. (௪௮)

49.—இரண்டுகவிகள் - ஒருதொடர்: வீமசேனன் கூறுவன தெரிவிக்கும்.

பொறையெனப்படுவதாடவர்தமக்குப் பூணெனப்புகலினும் பொருந்தார், முறைபறப்புரிந்தாலக்கணத்தவர்தம் முடித்தலைதுணிப்

பதேமுழுப்பூ, ணறைமலர்க்குழலார்தமக்குமெய்யகலா நாணமே நலஞ்செய்பூணெனினு, நிறையுடைப்பெரும்பூணமளிவாய்நாணநிகழ் வுறுநிகழ்ச்சியேயன்றே.

(இ - ள்.) ஆடவர்தமக்கு—, பொறை எனப்படுவது-பொறுமையென்று சொல்லப்படுவது, பூண் என புகலின் உம்-ஆபரணம்போல் விளக்கந்தருவது என நூல்களிற் கூறப்படினும், பொருந்தார் - பகைவர், முறை அற புரிந்தால் - முறைமைதவறத் தொழில்செய்தால், அ கணத்து - அந்தநொடியில் தானே, அவர் தம்-அப்பகைவருடைய, முடி தலை - கிரீடமணிந்த தலையை, துணிப்பதே—, முழுப்பூண் - பேரணிகலம்போல் விளக்கந்தருவதாம்: நறை மலர் குழலார்தமக்கு - நறுமணமலரையணிந்த கூந்தலையுடைய ஸ்திரீகட்கு, மெய் அகலா நாணமே - அருடம்பைவிட்டு நீங்காத லஜ்ஜையென்பதுவே, நலம் செய்-அழகையுண்டாக்குகின்ற, பூண் ஆபரணமாகும்: எனின் உம்-என்றாலும், அமளிவாய் - (புருஷனோடு கலவிசிகழ்த்தும்) படுக்கையில், நாணம் நிகழ்வுஉறு நிகழ்ச்சிஎ - நாணம் நேர்தலில்லாமையாகிய தன்மையே, நிறை உடை பெரும் பூண் அன்றே-நிரம்பிய பேராபரணமாகு மல்லவோ?

பொறை ஆடவர்க்கு வேண்டுமென்று வற்புறத்துக் கூறப்பட்டிருப் பினும், அப்பொறைக்குஉரிய இடத்து அதனை மேற்கொள்ளுதல் தக்கதே யன்றி,முறையறப் பொருந்தார் புரிந்தபோது அப்பொறையை மேற்கொள் வது தகுதியன் றென்பதாம். இவ்விஷயத்தைவிளக்கப் பின்னிரண்டடிகளை எடுத்துக்காட்டாகப் பேசுகிறார். (சகூ)

50. அரசவைப்புறத்திற்சௌபலன்சூதி லழிந்தநாளினுமெமை யடக்கி, முரசவெங்கொடியோன்றேசழித்தனனு லின்றுமம்முறை மையேமொழிந்தான், புரசைவெங்களிற்றின்மத்தகம்பிளக்கும் போ ருகிர்மடங்கல்போலின்னே, துரிசறப்பொருதுகீசகனுடலந் துணிப் பன்யான்றுணைவரோடென்றான்.

(இ - ள்.) சௌபலன் சூதில் அழிந்த நாளின்உம் - சுபலனது புத்திர னாகிய சகுனியோடு ஆடிய சூதாட்டத்தில் தோற்ற காலத்திலும், அரசு அவைப்புறத்தில் - ராஜசபையிலே, (தீண்டாக்காலத்தில் திரௌபதியாகிய உன்னைத் துரியோதனன் துச்சாதனனைக்கொண்டு கொணர்வித்துத் துகி லுரிகையிலும்),எமை-(தன் தம்பியராகிய)எங்களை, அடக்கி-(வெகுண்டு பகை யழிக்காதபடி) தடுத்து, முரசம் வெம் கொடியோன் - முரசமென்ற வெவ் விய கொடியையுடைய யுதிஷ்டிரன், தேசு அழித்தனன் - (எங்களுடைய) பராக்கிரமத்தை வெளியிடவொட்டாது செய்தான்: இன்றுஉம் - இன்றைக் கும், அ முறைமைஎ - அந்தக்கிரமத்தின்படியே, மொழிந்தான் - (உன்னைப் பரிபவப்படுத்திய கீசகனை அக்கிலையிலேயே யழிக்கவொட்டாது குறிப்பு) மொழியால் தடுத்திட்டான்: புரசை வெம் களிற்றின் மத்தகம் பிளக்கும்போர் உகிர் மடங்கல் போல் கழுத்திடு கயிற்றையுடைய கொடிய மதயானையின் மத் தகங்களைப் பிளக்கும் வல்லமையையுடைய போர்செய்யவல்ல நகாயுதமான

சிங்கத்தைப்போல, இன்னே - இப்போதே, பொருது - போர்செய்து, துரிசு அற - (அன்னான் செய்த) குற்றம் நீங்க, கீசகன் உடலம் - அந்தக்கீசகனுடைய உடம்பை, யான் —, துணைவரோடு - (அவனுடைய) தம்பிமார்களுடனே, துணிப்பன் - பிளந்திடுவேன், என்றான் -; (எ - று)

'இக்கங்குல் புரிவது யாது?' என்று வினவிய திரௌபதிக்கு, வீமன் 'இன்னே கீசகனுடலத்தைத் துணைவரோடு துரிசறத் துணிப்பன்' என்று விடைகூறியவாறு. தேசு-தேஜஸ்: ஒளி: வீரர்கட்குள் மிக்குத்தோன்றுதற்குக் காரணமான பராக்கிரமம். ஆல் - தேற்றம்: ஈற்றசையுமாம். (ருo)

51.—தருமபுத்திரன் தடுத்ததற்குத் திரௌபதி காரணங் கூறுதல்.

மருத்தின்மாமதலைவார்த்தைகேட்டந்தமருச்சகன்மடக்கொடி யுரைப்பா, ளுரைத்தநாளெல்லாஞ்சில்பகலொழியவொழிந்தனவொ ழிவிலாவுரவோ, யருத்தியோடொருவரறிவுறாவண்ணமிருந்தசீரழிவு றுமென்னுங், கருத்துநின்றம்முற்குண்மையிற்றடுத்தான்காலமுந்தே யமுமுணர்வான்.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) மருத்தின் மா மதலை வார்த்தை கேட்டு - வாயுதேவனுடைய சிறந்தபுத்திரனாகிய வீமசேனனுடைய வார்த்தையைக் கேட்டு, அந்த மருச்சகன் மடம் கொடி - அக்கினிதேவனிடத்தினின்று தோன்றியவளான மடமைக்குணமுடைய கொடிபோன்ற அந்தத்திரௌபதி, உரைப்பாள் - (பின் வருமாறு) சொல்பவளானாள்: ஒழிவு இலா உரவோய் - நீங்குதலில்லாத வலிமையுள்ளவனே! உரைத்த நாள் எல்லாம் - (பன்னிரண்டு வருஷம் வனவாசமும் ஒருவருஷம் அஜ்ஞாதவாசமுஞ் செய்யவேண்டுமென்று) சொல்லிய நாட்களெல்லாம், சில் பகல் ஒழிய ஒழிந்தன - சிலதினங்கள்போல் நீங்கப் பெரும்பாலும் கழிந்திட்டன: அருத்தியோடு - (அஜ்ஞாதவாசகாலம் இனிது கழியவேணுமே என்ற) விருப்பத்தோடு, ஒருவர் அறிவுறா வண்ணம் - பிறரெவரும் அறியாதபடி, இருந்த-இருந்திட்ட, சீர்-நிலைமை, அழிவுறும்-குலைந்திடும், என்னும் - என்கின்ற, கருத்து - எண்ணம், நின் தம்முற்கு - உனது தமையனார்க்கு, உண்மையின் - இருத்தலால், காலம் உம் தேயம் உம் உணர்வான் - (எந்தக்காலத்தில் எந்த இடத்தில் அடங்கியிருக்கவேணுமோ, எந்தக்காலத்தில் எந்த இடத்தில் வலிமையை வெளிக்காட்டவேணுமோ அந்தத்) தேசகாலங்களை யறிந்தவனான அந்தத்தருமன், தடுத்தான் - (இராசசபையிலேயே நீ கீசகனை அப்போதே மரத்தினால் மோதி யொழிக்க முயல்வதைத்) தடுத்திட்டான்; (எ - று.)

இதனால், யுதிஷ்டிரன் மானக்கேடுநிகழ்கையிலும் அதற்குப் பதில் செய்யவொட்டாது என்னை யடக்கிச் சிறுமையை விளைக்கின்றானென்று அவன்மீது வீமன் குறைகூறியதற்கு, அவன்செயல் தக்கதே யென்று திரௌபதி காரணத்துடன் சமாதானங் கூறுகின்றாள். பாண்டவர் விராட

நகரத்தில் பத்துமாதங்கடத்தியபின்னரே கீசகன் திரௌபதியைக் காமித்த லாகிய இச்செயல் நிகழ்ந்த தென்றும், கிட்டத்தட்ட வருஷம் முற்றுப்பெறுஞ் சமயத்தில்தான் கீசகவதம் நிகழ்ந்த தென்றும் முதனூலால் அறியப்படும்; அக்கருத்தை யுட்கொண்டே, 'உரைத்த நாளெல்லாஞ் சில்பகலொழிய வொழிந்தன'என்று திரௌபதிகூற்றாகக் கூறியது. மருச்சகன் - மருத்ஸகஃ: காற்றை நண்பனாகவுடையவன் என்ற காரணம்பற்றி அக்கினியைக் காட் டும் வடசொல். முன் - முன்னே பிறந்தவனுக்குக் காலவாகுபெயர். (ருக)

52.—திரௌபதி 'இரண்டொருநாள்கழிந்தபின் கந்தருவர்கொன்றரென்னும் வார்த்தை தோன்றுமாறு கீசகனை இரவிற் கொல்லலாம்' எனல்.

பாயும்வெஞ்சிறகர்க்கலுழன்முன்பட்டபாந்தள்போற்கீசகன்ப தைப்பக், காயுமதிந்தக்கங்குலிற்கடனன்றொருபகலிருபகல்கழிந்தா, லேயமோடின்றுவந்துகந்தருவர்நேர்படமலைந்தனரென்னுந், தூய சொல்விளையப்பொருவதேயுறுதியென்னவத்திரௌபதிசொன்னாள்.

(இ - ள்.) பாயும் வெம் சிறகர் - (வானத்திற்) பாய்ந்து செல்லவல்ல வெவ்விய சிறகுகளையுடைய, கலுழன்முன் - கருடனுக்கு முன்னே, பட்ட- அகப்பட்ட, பாந்தள் போல் - பாம்புபோல, இந்த கங்குலில் - இன்று இர வில் தானே, கீசகன் —, பதைப்ப - உயிர்துடிக்க, (அவனை), காயுமது -வெகு ண்டுகொல்வது, கடன் அன்று - செய்யத்தக்க செயலன்று: ஒருபகல் இரு பகல் கழிந்தால் - இன்னும் இரண்டொருநாள்கள் கடந்திட்டால், 'இன்று - இன்றைத்தினம், நேயமோடு - அன்போடு, வந்து—, கந்தருவர்—, நேர் பட- எதிராகநின்று, மலைந்தனர் - பொருதுகொன்றார்கள்', என்னும்-என்கின்ற, தூய சொல் - பரிசுத்தமான சொல், விளைய - (ஊரில் எங்கும்) பரவுமாறு, பொருவது - போர்செய்து கொல்வதே, உறுதி - செய்யத்தக்க செயலாகும், என்ன—, அ திரௌபதி - அந்தத் திரௌபதி, சொன்னாள்—; (எ - று.)

'இன்னே கீசகனுடலந் துணிப்பேன்' என்று வீமன் கூறியதனால், 'கீசகன் பதைப்பக் காயுமது இந்தக் கங்குலிற் கடனன்று' என்று அவன் கூறியதை மறுத்து, இரண்டொருநாள் பொறுத்தே ஒருவியாஜம்வைத்து அத் தொழிலை நிறைவேற்றவேணுமென்றாள் திரௌபதி யென்க. (ருஉ)

53.—வீமன் அப்பேச்சை அங்கீகரித்து, இனிநிகழ்த்தவேண்டிய செயலை உபாயம் பொருந்தச் சொல்லி அவ்விரவை மெல்லக் கழித்தல்.

ஐயனவிவனுந்தன்னைமுன்பயந்தவாரழலனையகற்புடைய
தையறன்மொழியைத்தானுமுட்கொண்டுதகுசெயல்விரகுடன்சாற்றி
வெய்யதன்சினமுந்தன்புயவலியும்போன்மேலுறமேலுறவளர
நெய்யுறகனலிற்பொங்கிபக்கங்குனீந்தினன்வேந்தனுக்கிளையோன்.

(இ - ள்.) தன்னை முன் பயந்த ஆர் அழல் அனைய கற்புஉடைய-தன்னை முன்னேபெற்ற நிரம்பிய நெருப்புப்போலப் பிறராலணுகவொண்ணாத கற்பையுடைய, தையல்தன் மொழியை - பெண்ணான திரௌபதியின்

பேச்சை, இவன் உம் - இந்தவீமசேனனும், ஐஎன - ஐயென்று சொல்லி, தானும்—, உட்கொண்டு - அங்கீகரித்து, (பிறகு), தகு செயல் - (அந்தத் திரௌபதி சொல்லியவாறு நிகழ்த்தத்) தக்கசெயலை, விரகுடன் - தந்திரமாக, சாற்றி - சொல்லிவிட்டு,—வெய்ய தன் சினம்உம் - கொடிய தன்கோபமும், தன் புயம் வலிபோல் - தன்னுடைய தோள்வலிபோல, மேல்உற மேல்உற வளர - மேலாக மேலாக வளராநிற்க, நெய் உறு கனலின் - நெய்வார்க்கப் பெற்ற அக்கினிபோல, பொங்கி—, வேந்தனுக்கு இளையோன் - தருமனுக்குத் தம்பியாகிய அந்தவீமன், அ கங்குல் நீந்தினன் - அவ்விரவை மெல்லக் கடத்தினன்; (எ - று.)

இக்கங்குலில் வலுவில் கீசகனிருக்கு மிடத்துச்சென்று அவனைக் கொல்லலாகாது: கொன்றால், அஜ்ஞாதவாசகாலம் முடிவதற்குள் நாம் வெளிப்பட்டு விடுவோமாதலால், முன்னைய ஏற்பாட்டின்படி மீண்டும் வனவாசாதிகள் செய்ய நேரிடும்: ஆகவே, அவ்வாறான தொந்தரைக்கு இடமில்லாமல் 'வண்ணமகளின் கணவன்மாரான கந்தருவர் நேரேவந்து மலைந்து கொன்றார்கள்' என்று யாவரும் கருதுமாறு இரண்டொருபகல் கழித்துக் கருதிய தொழிலைச் செய்யவேணுமென்று திரௌபதி கூற, வீமனும் அவ்வாறே செய்யலாமென்று உடன்பட்டு அவள்நினைவுமுற்றுமாறு செய்யப்பட வேண்டிய செயலுக்கு உபாயமுங் கூறிவிட்டு, மாற்றானைப் பற்றி நினைக்குந்தோறும் தன்மனத்துச் சினமும் தோள்வலியும் மிகாநிற்க, அன்றையிரவை அரிதிற் கழித்தன னென்பதாம். ஐ - அங்கீகாரக்குறிப்பு: விரைவுக்குறிப்பு என்பாருமுளர். (ருங)

54.—மற்றைநாளில் பூழிபடிந்தகூந்தலுங் கண்ணீர்கலந்தகொங்கையுமாய் அரண்மனையிலிருந்தும் வண்ணமகளினிலையைக் கீசகன் காணுதல்.

அற்றைநாளிரவிற்றன்பரிதாபமாறியவறிவுடைக்கொடியு
மற்றைநாளந்தச்சுதேட்டிணைகோயின்மன்னவன்மைத்துனன்வரலுங்
கற்றைவார்குழலிற்பூழியுங்கண்ணீர்கலந்தவான்கொங்கையுஞ்சுமந்தாங்
கொற்றைமென்கொடிபோனின்றனளவனுமுளங்கவரவணிலைகண்டான்.

(இ - ள்.) அற்றை நாள் இரவில் - அன்றைத்தினத் திரவில், தன் பரிதாபம் - தன் வருத்தம், ஆறிய - தணியப்பெற்ற, அறிவு உடை - நல்லறிவையுடைய, கொடிஉம் - கொடிபோன்றவளான திரௌபதியும், மற்றை நாள் - மற்றைநாளிலே, அந்த சுதேட்டிணை கோயில் - அந்தச் சுதேஷ்ணையென்ற மன்னவன்தேவி வசிக்கின்ற அரண்மனையிலே, மன்னவன் மைத்துனன் - விராடமன்னவனுடைய மைத்துனனாகிய கீசகன், வரலும் - வந்தவுடனே,— ஆங்கு - அங்கே, கற்றை வார் குழலில் - தொகுதியான நீண்ட கூந்தலிலே படிந்த, பூழிஉம் - புழுதியையும், கண்ணீர் கலந்த வான் கொங்கைஉம் - கண்ணீர் பொருந்திய பெரிய தனங்களையும், சுமந்து - தாங்கிக்கொண்டு, ஒற்றை மெல்கொடி போல் - ஒரு மெல்லியகொடிபோல, நின்றனள்—;

அவன்உம் - அந்தக் கீசகனும், உளம் கவர் - மனத்தைக் கவர்கின்ற அவள்நிலை - அவ்வண்ணமகளின் நிலைமையை, கண்டான்—; (எ - று.)

'பரிதாபமாறிய வறிவுடைக்கொடி மற்றை நாள் குழலிற் பூழியும் கண்ணீர்கலந்த கொங்கையுஞ் சுமந்து நின்றனள்' என்றதனால், அந்தக் கீசகனோடு சம்பாஷித்தற்காகவே அந்நிலைமையைப் பூண்டாளென்பது பெறப்படும். கொடி - ஆகுபெயர். (ருச)

வேறு.

55.—கீசகன் அவளைக் கண்டதும் காதல்விஞ்சிச் சொல்லத்தொடங்குதல்.

கலைமதி கண்ட காந்தக் கல்லென வுருகிச் சிந்தை
தலைமக னல்லான் வஞ்சந் தனக்கொரு வடிவ மானோ
னிலைபெறு கற்பி னாளை நேருற நோக்கிப் பின்னு
முலைவுறு காதன் மிஞ்ச வுரனழிந் துரைக்க லுற்றான்.

(இ - ள்.) தலைமகன் அல்லான் - சிறந்தகுணமுள்ள மகனல்லாதவனும், வஞ்சம் தனக்கு ஒரு வடிவம் ஆனோன் - வஞ்சமென்பதே ஒருவடிவுபடைத்தாற் போன்றவனுமான கீசகன்,—நிலை பெறு கற்பினாளை - நிலைத்துள்ள கற்பையுடைய திரௌபதியை, நேர் உற நோக்கி - நேராகப்பார்த்து,—கலை மதி கண்ட - (பதினாறு) கலைகளைக்கொண்ட சந்திரன் தோன்றக்கண்ட, காந்தம் கல் என - சந்திரகாந்தக்கல்போல, சிந்தை உருகி - மனமுருகி, பின் உம் - மேலும் [முன்னினும் மிகுதியாக], உலைவு உறு காதல் மிஞ்ச - வருந்துதற்குக் காரணமான ஆசைநோய் விஞ்சாநிற்க, உரன் அழிந்து - மன வலிமை குன்றி, உரைக்கல் உற்றான் - சொல்லத் தொடங்கினான்; (எ - று.) —கீசகன் உரைக்கலுற்றதை மேற்கவியிற் காண்க.

'கலைமதிகண்ட' என்று அடைமொழி கொடுத்ததனால், காந்தம் - சந்திரகாந்தம் ஆயிற்று.

இதுமுதற் பதினொருகவிகள் - முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (ருரு)

56.—கீசகன் தன்னை மணக்குமாறு காரணங்காட்டிக் கூறத் திரௌபதி சங்கேதமான இடத்தைக் கூறுதல்.

மன்னவன்வாழ்வுமிந்தவளநகர்வாழ்வுமெல்லா
மென்னதுவலிகொண்டென்பதின்றுனக்கேற்பக்கண்டா
யுன்னைமெய்காக்குந்தேவருறுதியுமுரானுங்கண்டா
யென்னைகொல்லினியுன்னெண்ணென்றிருகரங்கூப்பினானே.

(இ - ள்.) மன்னவன் வாழ்வுஉம் - விராடராசனது நல்வாழ்க்கையும், இந்த வளம் நகர் வாழ்வுஉம் - இந்த வளமுள்ள விராடநகரம் (மேம்பட்டு)

வாழ்ச்சி பெற்றிருப்பதுவும், எல்லாம் - ஆகிய யாவும், என்னது வலி கொண்டு - என்னுடைய வலிமையினலேயே, என்பது - என்கின்ற இவ் விஷயத்தை, இன்று - இக்காலத்து, உனக்குஏற்ப - உன்மனத்திற்குத் தெரிய, கண்டாய் - (நீ) அறிந்துள்ளாய்: உன்னை மெய் காக்கும் - உன் னுடலைக் காக்கின்ற, தேவர் - கந்தருவதேவரின், உறுதிஉம் - (காக்குந் தொழிலிற் கொண்டுள்ள) உறுதியையும், உரன்உம் - வலிமையையும், கண்டாய் - கண்டறிந்துள்ளாய்: இனி—, உன் எண் - உன் கருத்து, என்னை கொல் - யாதோ? என்று—, இரு கரம் - (தன்) இரண்டுகை களையும், கூப்பினன் - குவித்து(த் தன்மீது மனமிரங்குமாறு) வேண்டிக் கொண்டான்; (எ - று.)

'விராடமன்னவன் பகைவென்று மேம்பட்டிருப்பதும், இந்தநகரம் மற்றைநகரினும் பகைத்துன்பம் முதலியன இல்லாமல் இனிதிருப்பதும் எல் லாம் என் வலிமைகொண்டேயென்பது, விராடனிடத்து நீ முறையிடவும் அவன் என்னைக் கேளாமையால் இனிது விளங்கும்: அன்றியும், என்வலி மைக்கு முன்னே அஞ்சியதனல்தான் உன்மெய்காக்குந் தேவரும் உன்னை இப்போது உபேட்சித்திருக்கின்றன ரென்பதும் நீ ஆராய்ந்து தெளியலாம்: இந்நிலையில், இனி உன் எண்ணம் என்னையோ? என்மீது மனமிரக்குவாய் என்று கீசகன் திரௌபதியைக் கைகூப்பித்தொழுதானென்பதாம். எண் = எண்ணம்: கருவிப்பொருள்விகுதி புணர்ந்துகெட்ட பெயர். (ருசு)

57, 58.—இரண்டுகவிகள் - ஒருதொடர்: திரௌபதி கீசகனிடம் முன்னர் மறுத்ததற்குக் காரணங்கூறி இணங்கினள்போன்றிருத்தலைத் தெரிக்கும்.

கருத்தினிமுடியுமென்றுகடுங்கனன்முகத்திற்றோன்றுந்
திருத்தகுபாவையந்தத்தீயவன்றன்னைநோக்கி
வருத்தநீயுறவுமுன்னர்மறுத்தனன்மரபினுலுஞ்
சரித்திரத்தாலுங்கொண்டதவவிரதத்தினுலும்.

கந்தருவருமற்றென்னைக்காப்பதுமறந்தார்போலு
மிந்திரனெனினுமாதரெளிமையினெருப்பட்டெய்தார்
புந்தியிலொன்றுங்கொள்ளேலாரிருட்பொழுதிலின்று
சந்தணிகுவவுத்தோளாய்தனித்துநீவருதியென்றாள்.

(இ - ள்.) (57) கடுங் கனல் முகத்தில் தோன்றும் - கொடிய அக்கினி யின் முகத்திலிருந்து தோன்றிய, திரு தகு பாவை - அழகு தக்கிருக்கப் பெற்ற பதுமைபோன்றவளான திரௌபதி, இனி கருத்து முடியும் என்று- 'இனி (தான் எண்ணிய) எண்ணம் [கீசகவதை] (இனிது) நிறைவேறும்' என்று நினைத்து, அந்த தீயவன் தன்னை நோக்கி-(பிறன்தாரத்தை நச்சுதலா கிய) தீயகுணத்தையுடையவனான அந்தக்கீசகனைப் பார்த்து,—நீ—, வருத் தம் உற உம் - (என்னைப் பெறும்பொருட்டு) வருத்தமடையாநிற்கவும், மர பினல்உம் (நான்) பிறந்த குலத்தினலும், சரித்திரத்தால்உம்-(மேற்கொண்ட)

நல்லொழுக்கத்தினாலும், கொண்ட தவவிரதத்தினல்உம் - மேற்பூண்ட தவ வொழுக்கத்தினாலும், முன்னர் - முன்பு, மறுத்தனன் - (உன்கருத்திற்கு இசையாது) மறுத்தேன்: (58) கந்தருவர்உம் - (என்னைக் காவல்புரியும்) கந்தருவர்களும், என்னை—, காப்பது - காத்தற்றொழிலை, மறந்தார்போலும்—: (மேலும்), இந்திரன் எனின்உம் - (தம்மைக் காதலிப்பவன்) தேவேந்திரனே யானாலும், மாதர் - மகளிர், எளிமையின் - இலேசில், ஒருப்பட்டு எய்தார் - இசைந்து வந்துவிடமாட்டார்கள்: (நான் முன்பு மறுத்து உன்னை உபேட்சித்துச் சொன்னதுகுறித்து), புந்தியில் - (உன்) கருத்திலே, ஒன்றுஉம் கொள்ளேல் - ஒன்றும் வைத்துக்கொள்ளாதே: சந்து அணி குவவு தோளாய் - சந்தனக்குழம்பை யணிந்த திரண்ட தோள்களை யுடையவனே! இன்று - இன்றைத்தினம், ஆர் இருள் பொழுதில் - நிரம்பிய இருளைக்கொண்ட இரவிலே, நீ—, தனித்து—, வருதி - வருவாய்,' என்றாள் - என்று கூறினாள்.

57 - ஆம் பாடலில் முதலில் மறுத்ததற்குத் திரௌபதி காரணங்கூறி, 58 - ஆம் பாடலில் தான் உடம்பட்டிருப்பதைத் தெரிவிக்கின்றாளென்க. தனித்து வருதியென்று கூறியவள் இன்னவிடத்துவருக என்று குறியிடத்தை மேற்செய்யுளிற் கூறுவள். மற்றென்னை, மற்று - வினையாற்று. சரித்திரம் - கற்புநெறிவழுவாது நடக்கை. (ருஅ)

59.—திரௌபதி கீசகனுக்குக் குறியிடங் கூறுதல்.

அக்கொடியுரைத்தமாற்றமவன்செவிக்கமுதமாகிப்
புக்குயிர்நிறுத்திமெய்யும்புளகெழவிளகிநெஞ்ச
மிக்கதோர்வேட்கைகூரவிடுத்தலின்வேந்தன்கோயிற்
கொக்கின்மேற்குயில்கள்கூவுங்குளிர்பொழிற்குறியுஞ்சொன்னாள்.

(இ - ள்.) அ கொடி உரைத்த மாற்றம் - கொடிபோன்றவளான அந்தத் திரௌபதி கூறிய சொல், அவன் செவிக்கு - அந்தக்கீசகனுடைய காதுக்கு, அமுதம் ஆகி புக்கு - அமுதமயமாய் (ச் செவிவழியாக உள்ளே) புகுந்து, உயிர் நிறுத்தி - (தவித்துக்கொண்டிருந்த அவனுடைய) பிராணனை நிலைநிறுக்கச்செய்து, (அதனால்), மெய் புளகு எழஉம் - அவனுடம்பு மயிர்க்கூச்சு எறியவும், நெஞ்சம் இளகி மிக்கது ஓர் வேட்கை கூர(உம்) - மனங்குழைந்து மிகுந்ததான ஒப்பற்ற ஆசை விஞ்சவும், விடுத்தலின் - செய்ததனால்,—(அப்போது வண்ணமகளாகிய திரௌபதி), வேந்தன் கோயில் - அரசனுடைய அரண்மனையைச் சார்ந்துள்ள, கொக்கின்மேல் குயில்கள் கூவும் குளிர் பொழில் - மாமரத்தின்மீது குயில்கள் கூவாநிற்கும் குளிர்ந்த சோலையாகிய, குறிஉம் - குறியிடத்தையும், சொன்னாள்—; (எ - று.)

நர்த்தனசாலையைக் குறியிடமாகக்கூறினாளென்று முதனூலிலுள்ளது: பொழிலிடத்துக் கூடுவரென்று தமிழ்நூல்களிற் பயிலுவதால், நூலாசிரியர் குளிர்பொழிற் குறியுஞ்சொன்னாளென்று முதலிற்கூறி, மேற்செய்யுளில்

இன்பமண்டபத்து வம்மின் என்றனளென்பர். 'மாமரத்தைக் கொக்கு என்பது திஞ' என்றனர், நச்சினார்க்கினியர். விடுத்தலின் - தங்குதலால் என்பாருமுளர். (௫௯)

60.—குறியிடமாகிய பொழிலிலுள்ள மண்டபத்தில் வருமாறு கூற, கீசகனும் ஒருப்படுதல்.

குருட்டியன்மதியினானைக்கோதிலாவறிவின்மிக்காண்
மருட்டினளாகியந்தவளர்தடம்பொழிலினோர்சா
ரிருட்டிடைநிலவுகாட்டுமின்பமண்டபத்தில்வம்மி
னுருட்டடந்தேரோயென்றாளவனுமஃதொருப்பட்டானே.

(இ - ள்.) கோது இலா அறிவில் மிக்காள் - குற்றமற்ற அறிவினால் மேம்பட்டவளான திரௌபதி,—குருடு இயல் மதியினானை-குருட்டுத்தன்மை பொருந்திய புத்தியையுடையவனான அந்தக்கீசகனை, மருட்டினள் ஆகி - மதிமயக்கச்செய்தவளாய்,—'அந்த வளர் தடம் பொழிலின் ஓர் சார் - (நான் குறித்த) அந்தவளர்ந்த பெருஞ்சோலையின் ஒருபுறத்திலுள்ள, இருட்டிடை நிலவு காட்டும் - மிக்கஇருட்டிலும் நிலாவெளிச்சம்போன்று பளிச்சென்று தோன்றுவதாகிய, இன்பம் மண்டபத்தில் - இனிதான மண்டபத்தில், உருள் தடம் தேரோய் - (இனிது உருண்டுசெல்லுகின்ற) உருளைகளையுடைய பெருந் தேரையுடையவனே! வம்மின் - வாருங்கள்,' என்றாள் - என்று (கூடுதற்கு உரிய இடத்தைக்) கூறினாள்: அவனும் - அந்தக்கீசகனும், அஃது - அந்த வண்ணமகளின் பேச்சுக்கு, ஒருப்பட்டான் - சம்மதித்தான்; (எ - று.)

'முன்பு தன்னை வேண்டாமையை அத்துணைகாட்டியவள் இப்போது இசைந்து, இருட்பொழுதில் தனித்துவருதி என்கிறாளே? இவள் நம்மைக் கொல்ல விரகுதேடியிருந்தால் என்செய்வது?' என்று ஆராய்ச்சி சிறிது மின்றி இசைந்தகனால், கீசகனை 'குருட்டியன் மதியினான்' என்கின்றார். தேரோய் வம்மின் - ஒருமைப் பன்மைமயக்கம். உருள் என்பது தடந்தே ரோய் என்ற விளியோடு இயைந்து, அமங்கலப்பொருளைக் காட்டுவதாதலை யும் அறிக. வம்மோ என்ற பாடத்துக்கு, வம் - வாரும் என்பதன் மரூஉ: ஓ - அசை: மோ - அசையுமாம். (௬௦)

61.—திரௌபதி அச்செய்தியை வீமனிடத்துச்சொல்லிவிட்டு அப்பகலைப் போக்கியமை.

குறியவன்றனக்குநேர்ந்தகொடியவெங்கொலைவேற்கண்ணா
டறிபொருகளிற்றினன்னசமீரணன்மகனையெய்திச்
செறிவொடக்காளையோடுசெப்பியயாவுஞ்செப்பிப்
பிறிதொருகருத்துமின்றிப்பெரும்பகல்போக்கினாளே.

(இ - ள்.) அவன்தனக்கு குறி நேர்ந்த - அந்தக்கீசகனுக்குக் கூடு மிடத்தை உடன்பட்டுக்கூறிய, கொடிய வெம் கொலை வேல் கண்ணாள் -

மிகக்கொடிய கொலைசெய்பவல்ல வேற்படைபோன்ற கண்களையுடையவளான அந்தத்திரௌபதி, தறி பொரு களிற்றின் - கட்டுத்தறியை மோதிமுறிக்கின்ற மதயானையையொத்த, அன்ன சமீரணன் மகனை - அந்தவாயுவின்புத்திரனான வீமசேனனை. எய்தி - அடைந்து,— செறிவொடு - மனநெருக்கத்தோடு, அ காளையோடு செப்பிய - இளவெருதுபோன்ற அந்தக்கீசகனோடு சொல்லிய, யாஉம் - எல்லாவற்றையும், செப்பி - சொல்லி, பிறிது ஒரு கருத்துஉம் இன்றி - (கீசகன் இறப்பதை எப்போது காணப்போகிறோம் என்ற எண்ணத்தைத் தவிர்த்து) வேறோரெண்ணமுமில்லாமல், பெரும் பகல் - நெடிதாகத்தோன்றும் அந்தப்பகற்காலத்தை, போக்கினாள் - அரிதிற்கழித்தாள்; (எ - று.) (சுக)

62.—சூரியன்அஸ்தமித்து எங்கும் இருள்சூழ, கீசகன் குறியெல்லையை நோக்கிச் செல்லுதல்.

எல்லையெண்டிசையும்போனவிருளெலாமீண்டுதுன்ற
வெல்லையின்றலைவனானவிரவியுங்குடவெற்பெய்த
வெல்லையில்காதலோனுமிடையிருளிடையேயந்த
வெல்லைபைநோக்கிச்சென்றான்யமன்றிசையென்னமன்னோ.

(இ - ள்.) எண் திசை எல்லைஉம் போன - எட்டுத்திக்கினெல்லைவரையிலும் ஒதுங்கிச்சென்ற, இருள் எலாம் - இருட்டுமுழுவதும், மீண்டு துன்ற - மீண்டு வந்துநெருங்கவும், எல்லையின் தலைவன் ஆன இரவி - பகற்போதுக்குத் தலைவனான சூரியன், குட வெற்பு எய்தஉம் - மேற்குமலையாகிய அத்தமனபருவதத்திலே போய்ச்சேரவும், எல்லை இல் காதலோன் உம் - (இவ்வளவென்று) அளவிடமுடியாத காதலையுடையவனான அந்தக்கீசகனும், இடை யிருளிடைஏ - அந்தநள்ளிரவிலே, யமன் திசை என்ன - யமனிருக்குமிடம் (நாடிச்செல்வது) போல, அந்த எல்லைபை நோக்கி - (வண்ணமகள் கூறிய) அந்தஇடத்தை நோக்கி, சென்றான் —; (எ - று.)—மன் ஓ - ஈற்றசை.

கீசகன் இப்போது செல்லும் பயணம் அவன்மரணத்துக்கே ஏதுவாதலால், 'எல்லையைநோக்கிச் சென்றான் யமன்திசையென்ன' என்றார். இரண்டாமடியில், எல்லைஎன்பதில், ஐ - சாரியை. திரிபுஎன்னுஞ்சொல்லணி இதிற்காண்க. இருள் - இரவுக்கு இலக்கணை. இடையிருள் - இருளிடை யென்பது முன்பின்னாகமாறிவந்தது: இலக்கணப்போலி. (சுஉ)

63.—வீமன் பெண்கோலங் கொள்ளுதல்.

வடுவறத்தெவ்வர்போருமன்னவனுணவுங்கையா
லடுதொழிற்குரியசெம்பொன்வரையிரண்டனையதோளா
னுடுமுகத்தின்மைவானமொளிபறவிருண்டகங்கு
னடுவுறப்பொழுதிற்செவ்விசுவ்விபர்கோலங்கொண்டான்.

(இ - ள்.) வடு அற - குற்றம் நீங்க, தெவ்வர் போர்உம் - பகைவர் போரையும், மன்னவன் உணவுஉம் - அரசனுணவையும், கையால் - கைவி

ஞல், அடு - அடுகின்ற, தொழிற்கு - செய்கையில், உரிய - உரிமைபூண்ட, செம்பொன் வரை இரண்டு அனைய தோளான் - செம்பொன்மயமான மேரு மலை இரண்டையொத்த தோளையுடையனுன வீமன்,—உடு முகத்தின் - நட்சத்திரங்களைத் தன்னிடத்திலே யுடைய, மை வானம் - கருநிறமாகத் தோன்றுகின்ற ஆகாயம், ஒளி அற இருண்ட - ஒளியற்று இருண்டுகிடக்கிற, கங்குல் - இராப்போதானது, நடுஉறு - நடுப்போதான [அர்த்தராத்திரியாய் விட்ட], அ பொழுதில் - அந்த வேளையிலே, செவ்வி நவ்வியர் - அழகிய மான்போன்றகண்களையுடையரான பெண்டிரின், கோலம் - அலங்காரத்தை, [பெண் வேடத்தை], கொண்டான் - மேற்கொண்டான்; (எ - று.)

அடுதொழில் என்பது - இரட்டுறமொழிதலால், சமைத்தல் கொல்லுதல் என்ற இருபொருளைத் தந்தது. உடுமுகத்து இன்மை - நட்சத்திரங்கள் தம்மிடத்து இல்லாமையால் என்று கூறினரு முளர்: இது எவ்வாறு பொருந்து மென்பது புலப்பட வில்லை. உடுமுகத்தின் என்று வானத்திற்கு அடைமொழி கொடுத்தமையால், ஒளியையுண்டாக்கும் சந்திரனைப் பெற்றிருக்கவில்லை அக்கங்குற்போது என்பது பெறப்படும். மை, வானத்திற்கு இயற்கை யடைமொழி. நடுவுற பொழுதில் என்றுபிரித்தலும் உண்டு. (கூ௩)

64.—குறித்த பொழிலிடையே திரௌபதியுடன் வீமன் பெண்கோலத்தோடுசென்று கீசகன்வருகையை நோக்கியிருத்தல்.

அங்கியிற்றோன்றுநாளாயணியுடனள்ளிக்கொள்ளப்
பொங்கியவிருளின்முன்னம்புகன்றவப்பொங்கருடு
தங்கியதவளமாடந்தன்னிடைப்புகுந்துசான்ற
விங்கிதத்துடனேநோக்கியிருந்தனனிமைப்பிலாதான்.

(இ - ள்.) (அங்ஙனம் மாதரார்கோலம் பூண்ட வீமன்),—அங்கியில் தோன்றும் நாளாயணியுடன் - நெருப்பினின்று தோன்றிய நாளாயணியென்பாளுடனே, அள்ளிக்கொள்ள பொங்கிய இருளின் - அள்ளிக்கொள்ளலாம் போன்று மிகச்செறிந்த இருட்டிலே, முன்னம் புகன்ற அ பொங்கருடு - முன்பு கூறிய அந்தச் சோலையிலே, தங்கிய - பொருந்திய, தவளம் மாடந் தன்னிடை - வெண்ணிற மாடத்திலே, புகுந்து - போய்ச்சேர்ந்து, சான்ற இங்கிதத்துடன் - மிக்ககவனத்தோடு, இமைப்பு இலாதான் - கண்கொட்டாதவனாய், நோக்கி இருந்தனன் - (கீசகன்வருகையை) எதிர்பார்த்திருந்தான்.

நாளாயணியென்பது - மௌத்கல்யமுனிவரின் பார்யையான இந்திரசேனையின் பெயர்: இவளே பிறகு திரௌபதியாகப் பிறந்தாள். அள்ளிக்கொள்ளப் பொங்கிய விருள் - தன்மைநவிற்சிப்பேற்றம். இங்கிதம் - (பிறன்கருதுகின்ற) குறிப்பு: மிக்க கவனம் என்றபொருளை இங்கு இலக்கணையால் தந்தது. தங்கிய கனகமாடந்தன்னிடை யென்று பிரதிபேதம். (கூ௪)

**65.—திரௌபதியை ஒருபுறத்தில் மறைத்துவைத்திட்டு வீமசேனன்இருக்க, கீசகன் அப்பொழிலூடு சேர்தல்.**

அணங்கனசாயலாளையப்புறங்கரந்துவைத்து
மணங்கமலழங்கன்மார்பன்மண்டபத்திருந்தகாலைப்
பிணங்கலனணிந்ததன்னபேரெழிற்பெற்றியானெஞ்
சுணங்கநாப்புலரவந்தவ்வுயர்பொழிலூடுசேர்ந்தான்.

(இ - ள்.) அணங்கு அன-தெய்வப்பெண்போன்ற, சாயலாளை-மென்மையான அழகையுடைய திரௌபதியை, அப்புறம் - அங்கு ஒருபுறமாக, கரந்து வைத்து-மறைந்திருக்குமாறு வைத்திட்டு,—மணம் கமழ் அலங்கல் மார்பன் - நறுமணம் வீசுகின்ற மலர்மாலையை யணிந்த மார்பையுடையனான (பெண் வேடம்பூண்டிருந்த)வீமன், மண்டபத்து இருந்த காலை - மண்டபத்தி லிருந்த போது,—பிணம் கலன் அணிந்தது அன்ன பேர் எழில் பெற்றியான் - பிணத்துக்கு அணிகல னணிந்தாற்போன்று அலங்காரத்தாற் பேரெழில் படைத்த தன்மையுடையனான அந்தக்கீசகன், (காமதாபத்தால்), நெஞ்சு உணங்க - இதயம் வாடவும், நா புலர - நாக்குவரளவும், வந்து—, அ உயர் பொழிலூடு - ஓங்கிய மரங்களைக்கொண்ட அந்தச்சோலையிலே, சேர்ந்தான்—.

வேறு.

**66.—அம்மாளிகையிற் பொற்றூணைச்சேர்ந்திருந்த பெண்ணுருவைக் கண்ட கீசகன் ஆர்வங்கொண்டு கூறலுறுதல்.**

சாந்தினான் மெழுகிய தவள மாளிகை
யேய்ந்தபொற் றாணிடை யிலங்கு மின்னெனச்
சேர்ந்துறை பெண்ணுருக் கண்டு சிந்தையிற்
கூர்ந்தபே ரார்வமோ டிறைஞ்சிக் கூறுவான்.

(இ - ள்.) சாந்தினால்-(அரைத்த) சுண்ணாம்பினால், மெழுகிய-பூசப்பெற்றுள்ள, தவளம் மாளிகை-வெண்ணிறமுள்ள மாளிகையிலே, ஏய்ந்த-பொருந்திய, பொன் தூண் இடை - பொற்கம்பத்தினிடத்தை, இலங்கும் மின் என சேர்ந்து-விளங்குகின்ற மின்னல்போலச் சார்ந்து, உறை-வசிக்கின்ற, பெண் உரு-ஸ்த்ரீவடிவத்தை, கண்டு பார்த்து, (கீசகன்), சிந்தையில் கூர்ந்த பேர் ஆர்வமோடு - மனத்திலே மிகுந்த காதலோடு, இறைஞ்சி - வணங்கி, கூறுவான் - (பின்வருமாறு) சொல்லலானான்; (எ - று.)—கீசகன் ஆர்வமோடு கூறுவதை மேற்கவியிற் காண்க.

பெண்ணுருஎன்றதனால் - இயற்கையிற் பெண்ணல்ல: பெண்ணுருக் கொண்ட ஆடவனான வீமன் எனக் காட்டியவாறு.

இதுமுதல் இருபத்தொருகவிகள் - மூன்றுஞ்சீரொன்று மாச்சீரும், மற்றவை விளச்சீர்களுமாகிவந்த அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள்.

67.—ஆதரத்தாற் சிலகூறிக்
சீசகன் பெண்ணுருவின் தாளிற்பணிந்து வேண்டுதல்.

என்பெருந்தவப்பயனென்றறிந்திலேன்
மின்புரைமருங்குலாய்வேட்கைவிஞ்சலாற்
புன்பிழைசெய்தனன்பொறுத்தியேயென
வன்புடன்சிலம்பணியடியில்வீழ்ந்துமேல்.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) 'மின் புரை மருங்குலாய் - மின்னலையொத்த இடையை யுடையவளே! என் பெருந் தவம் பயன் என்று - என்னுடைய (முற்பிறவியிற் செய்த) பெருத்த நல்வினைப்பயனாகத் தோன்றியுள்ளாய் நீ என்பதை, அறிந்திலேன் - (முன்னர்) அறியாதவனாய்விட்டேன்: (அதனால்), வேட்கை விஞ்சலால் - காதல் விஞ்சியதனால், புல் பிழை செய்தனன் - (உன்திறத்தில்) சிறிய பிழையைச் செய்திட்டேன்: நீ பொறுத்தி - (யான் உன்திறத்துச் செய்த) சிறுபிழையைப் பொறுப்பாயாக,' என - என்று, அன்புடன் - காதலோடு, சிலம்பு அணி அடியில் - நூபுரமணிந்த பாதத்தில், வீழ்ந்து - விழுந்து பணிந்து, மேல் - பிறகு,—(எ - று.)—"என மொழிபல கூறினான்" என்று எழுபதாங்கவியில் தொடர்ந்து முடியும். (சுஎ)

68.—மூன்றுகவிகள் - பின்னும் காதல்விஞ்சக்கீசகன் பலமொழி கூறினமை தெரிக்கும்.

பைங்குலைக்குரும்பையைப்பழித்தகொங்கையாய்
மங்குலைப்புழுகளைவைத்தகூந்தலாய்
கங்குலிற்கால்வழிகாட்டவந்ததின்
றிங்குலப்புறுமெனதாவியீயவோ.

(இ - ள்.) பைங் குலை குரும்பையை பழித்த கொங்கையாய் - பசுமையாய்க் குலைகுலையாகவுள்ள குரும்பையை ('இவை எமக்குஒப்பாகா என்று') ஏளனஞ்செய்த கொங்கையையுடையாய்! மங்குலை புழுகு அளை வைத்த கூந்தலாய் - இரவைக் கஸ்தூரிப்புழுகெண்ணெய்கொண்டு தடவிவைத்தாற் போன்றுள்ள கூந்தலையுடையவளே! கங்குலில் - இந்தநள்ளிரவில், கால் வழி காட்ட - பாதமே(நடந்துசெல்லும்)வழியைக் காட்டாநிற்க, இன்று இங்கு வந்தது - இன்றைக்கு இவ்விடத்துக்கு வந்தது, உலப்புஉறும் - அழியும் நிலைமையை யடைந்த, எனது ஆவி - என்னுயிரை, ஈயவோ - கொடுத்தற்குத் தானோ? (எ - று.)

நிலா தீபம் என்றாற்போன்ற ஒளியைத் தருவது யாதொன்றும் இல்லாமையால், செறிந்தஇருளில் கண்ணால் வழியைக் கவனிக்கமுடியாமல் காலாலேயே தடவித்தடவி அன்னாள் வந்தாளென்று குறிக்க 'கால்வழி காட்ட வந்தது' என்கின்றான். கால்வழிகாண என்று பிரதிபேதம். (சுஅ)

69. கிஞ்சுகமலர்ந்துநின்கிள்ளைவாய்மையா
லஞ்சலென்றோருரையளித்தல்காண்கிலே
னஞ்சனவிழிக்கடைநயந்தபார்வைகொண்
டெஞ்சுமென்னுயிரினையெடுப்பதென்றுநீ.

(இ - ள்.) கிஞ்சுகம் மலர்ந்து - பலாசமலர்போன்ற (உன்) வாயைத் திறந்து, நின் கிள்ளை வாய்மையால் - உனது கிளிபோன்ற வாய்வார்த்தை

யால், அஞ்சல் என்று - (காயதேவனுக்குப்) பயப்படாதே என்று, ஓர் உரை - ஒருபேச்சை, அளிகுதல் - அன்போடுகூற. காண்கிலேன் - பார்க்கின்றிலேன் [கேட்கிலேன் என்றபடி]: அஞ்சனம் - மைதீட்டிய, விழிக்கடை - கடைக்கண்ணால், நயந்த - விரும்பிக் காணுகின்ற. பார்வைகொண்டு - பார்வையினால், எஞ்சும் - ஒடுங்குகின்ற. என் உயிரினை —, நீ—, எடுப்பது - பாதுகாப்பது, என்று - எப்போது? (எ - று.)

உயிரினையெடுப்பது-உயிரையடியோடு போக்குவது என்ற ஒருவிபரீதப் பொருளுந் தோன்றும். விழிப்பது - விழியெனக் கண்ணுக்குக் காரணக்குறி. பார்வைகொண்டு, கொண்டு - மூன்றாம்வேற்றுமைச்சொல்லுருபு. (சுகூ)

70\. வழிபடுதெய்வமுமற்றுமுற்றுநீ
யிழிபடுபிறர்முகமென்றுநோக்கலேன்
கழிபடருற்றதென்காமநோயெனு
மொழிபலகூறினன்முகம்புகுந்துளான்.

(இ - ள்.) வழிபடு தெய்வம்உம்-(நாடோறும் நான்) கும்பிடுங் கடவுளும், மற்றும் முற்றுஉம் - மற்றுமுள்ள எல்லாமும், நீ - நீயே; (இனி), இழிபடு - (உன்கட்டழகுக்கு முன்னே) இழிவாகத்தோன்றுகிற, பிறர் முகம் - அயல் மாதராரின் முகத்தை, என்றுஉம் - எப்போதும், நோக்கலேன் - பார்க்கவேமாட்டேன்: என் காமம் நோய் - என்னுடைய காதல்நோயானது, கழி படர் உற்றது - மிகப்பரவுதலைப் பொருந்தியிட்டது, எனு-என்று, முகம் புகுந்து உளான் - அவ்விடத்துவந்து பொருந்தியவனான கீசகன், பல மொழி கூறினன் - பலவார்த்தைகளைப் பேசினான்; (எ - று.)

மாறுவேடம்பூண்டு. வீமன் வந்து எதிரில் தூணத்தில் ஒதுங்கி நிற்கின்றானென்பதைக் கீசகன் அறியாமல் திரௌபதிதான் வந்துள்ளாளென்று கருதியதனால், இவ்வாறெல்லாம் கூறலானானென்க. கழிபடருற்றது - மிக்கதுன்பத்திற்குக் காரணமாகப் பொருந்தியது எனினுமாம். எதிர் புகுதல் - நோக்கிற் கெதிர்சென்று புகுதல்என்றனர் ஐங்குறுநூற்றுரைகாரர்.

71\.—இரண்டுகவிகள் - ஒருதொடர்: பெண்ணுருக்கொண்டவீமன் கீசகனை நகைத்துநோக்கி இருகைகளாற் பற்றியமை கூறும்.

கீசகனிம்முறைகிளந்தபற்பல
வாசகங்கேட்டலுமலங்கொணெஞ்சுடைப்
பூசகர்பூசைகொள்ளாதபுன்பவ
நாசகக்கடவுள்போனகைத்துநோக்கியே.

(இ - ள்.) கீசகன்—, இ முறை - இப்படியாக, கிளந்த - கூறிய, பல்பல வாசகம் - மிகப்பலவான காதற்குறிப்புள்ள வார்த்தைகளை, கேட்டலும்-கேட்டவுடனே,— மலம் கொள் நெஞ்சுஉடை பூசகர் பூசை கொள்ளாத புல் பவம் நாசகம் கடவுள் போல் - அபரிசுத்தியைக்கொண்ட நெஞ்சத்தையுடைய பூசகரின் பூசையை யேற்றுக்கொள்ளாத புல்லியபிறவியை(த் தன்னையடைந்தார்க்கு)ப் போக்கவல்ல கடவுளைப்போல, நகைத்து நோக்கி - சிரித்து (அந்தக்கீசகனைப்) பார்த்து,—(எ - று.)—"பெற்ற மாமகன் பொறிவுத்திட இருகை பற்றினான்" என்று மேற்கவியில் முடியும்.

திரிபுரசங்காரகாலத்திற் சிரித்து எதிரிகளை யழித்த கடவுள் சிவபிரானே யாதலால், புன்பவநாசகக் கடவுள் என்பது அக்கடவுளையே காட்

டும். நகைத்துநோக்கி என்பதற்கு, மேற்செய்யுளில்வரும் பெற்றமாமகன் என்பது எழுவாய். மலம்-ஆணவம் மாயை கன்மம்என்னும் மும்மலமுமாம். ()

72. பெண்ணுடையுருக்கொளும்பெற்றமாமகன்
சண்ணுடைப்பொறியெழுங்கனலின்வந்திட
மண்ணுடைக்காவலன்மைத்துனன்றனை
யெண்ணுடைக்கைகளாலிருகைபற்றினன்.

(இ - ள்.) பெண்உடை உரு கொளும் - ஸ்திரீயினுடைய உருவத்தைக் கொண்ட, பெற்றம் மாமகன் - வாயுவின் சிறந்த குமாரனான வீமன், கண் உடை - இருகண்களும் கொண்டுள்ள, பொறி - (கோபாக்கினியின்) பொறிகள், எழும் கனலின் வந்திட - கொழுந்துவிட்டெரியும் அக்கினியினின்று புறப்படுவனபோல வெளிப்படாநிற்க,— மண் உடை - மச்சநாட்டிற்குஉரிய, காவலன் - அரசனான விராடனுடைய, மைத்துனன்தனை - மனைவியின் உடன்பிறந்தவனான கீசகனை, எண்உடை கைகளால் - (வலிமையினால்) மதிப்பையமைந்த இரண்டு கைகளால், இரு கை பற்றினன் - (கீசகனுடைய) இரண்டுகைகளையும் பிடித்துக்கொண்டான்; (எ - று.)

ஒருபெண் தன்னைக் கைப்பற்றுகின்றாளென்று அந்தக்கீசகன் குதூகலமாக இருக்க, ஒருகையாற் பற்றுதற்குப்பதில் இருகைகளாலும் இறுகப்பற்றினன் வீமனென்பதாம். எண் - எண் என்பதன் விகாரமெனின், வலிமையென்று பொருளாம். (எஉ)

73.—வீமன் கீசகன்திறத்துக் கருதிய செயலை முடிக்கத் தொடங்குதல்.

பற்றினன்பற்றியபாணியாலெழச்
சுற்றினன்கறங்கெனத்தூணமொன்றினோ
டெற்றினன்சென்னியையெடுத்ததன்வினை
முற்றினனெடும்பெருமூச்சனாகியே.

(இ - ள்.) பற்றினன் - (அந்தக்கீசகனைத் தன்னிருகைகளாலும் வலியப்) பிடித்தான்: பற்றிய பாணியால் - (தான்) பிடித்த கைகளினால், கறங்கு என எழ சுற்றினன் - காற்றாடிபோல (வானத்தின் மீதே) எழ (அந்தக்கீசகனைக்) கறகறவென்று சுழற்றினன்: தூணம் ஒன்றினோடு சென்னியை எற்றினன் - (ஆங்கிருந்ததொரு) கம்பத்தில் அவன் தலையை மோதினான்: நெடும் பெரு மூச்சன் ஆகி - மிகப்பெருமூச்சுடையனாய், (அவ் வீமன்), எடுத்த தன் வினை முற்றினன் - மேற்கொண்ட தன் செயலை நிறைவேற்றலானான்; (எ - று.)

மேற்கொண்டசெயல் - கீசகவதம். இச்செய்யுளிற் பற்றினனென்றது - கீழ்ச்செய்யுளின் அனுவாதம். (எங)

74.—வீமனைக் கீசகன் மாறிமோத வீமன் கீசகனைத் தள்ளிவீழ்த்துதல்.

வீமனைப்பிடித்தகைவிலக்கிமற்றவன்
மாமுகத்திருகையுமாறிமோதினன்
நீமுகத்தவனையச்செம்மன்மீளவுஞ்
சாமுகத்தவனெனத்தள்ளிவீழ்த்தினன்.

(இ - ள்.) வீமனை—, பிடித்த கை விலக்கி - (தன்னைப்) பற்றியுள்ள கைகளை விலக்கிவிட்டு, மற்று-பின்பு, அவன் - அந்தக்கீசகன், மா முகத்து - பெரிய (வீமனுடைய) முகத்திலே, இரு கையும் - (தன்னுடைய) இரண்டு

கைகளையும், மாறி - (முன்னையநிலை) மாறி, மோதினன் - தாக்கினன்: அ செம்மல்-செம்மைக் குணமுடையனாகிய அந்த வீமசேனன், தீ முகத்தவனை-தீமைக்கு இருப்பிடமான அந்தக்கீசகனை, மீளஉம் - மறுபடியும், சா முகத்தவன் என - (கண்டவர் யாவரும்) சாமூஞ்சிபட்டவன் (இவன்) என்று கருதுமாறு, தள்ளி—, வீழ்த்தினன் - விழச்செய்தான்; (எ - று.)

மற்றவன் என்பது வீமனைக்காட்டு மென்று கொண்டு, கீசகன் என்பதை வருவித்தலுமாம். (எச)

75.—ஐந்து கவிகள் - வீம கீசக யுத்தம் கூறும்.

ஓரொருகுத்தொருவுருமுவீழ்ந்தென
மேருவோடொத்ததோள்வீமன்குத்தலு
மீரிடத்தினும்விலாவெலும்புநெக்கன
கூருகிர்த்தலங்களாற்குருதிகக்கவே.

(இ - ள்.) கூர் உகிர் தலங்களால் - கூரிய நகத்தோடு கைத்தலங்கள் பட்டதனால், குருதி கக்க - இரத்தத்தை வெளிப்படுத்துமாறு, ஓர் ஒரு குத்து-ஒவ்வொருகுத்தும், ஒரு உருமு வீழ்ந்தென - ஒருஇடி விழுந்தாற்போல வீழ, மேருவோடு ஒத்த தோள் - மேருவோடொத்த தோள்களையுடைய, வீமன்—, குத்தலும் - குத்தவே,—(கீசகனுக்கு), ஈர் இடத்தின்உம் - இரண்டுபுறத்தும், விலாஎலும்பு - விலாப்புறமுள்ள எலும்புகள், நெக்கன - பிளந்து விண்டன; (எ - று.)—குத்தெரியுருமு என்றும் கூருகிர்த்தலைகளால் என்றும் பிரதிபேதம். (எரு)

76. கேளொடுகெடுதருகீசகன்கழற்
றாளொடுதாளுறத்தாக்கிமற்கெழு
தோளொடுதோளுறத்தோய்ந்துகன்னல்வில்
வேளொடுவருநலம்விஞ்சமேவினன்.

(இ - ள்.) கேளொடு - சுற்றத்தாருடனே, கெடுதரு - அழியப்போகின்ற, கீசகன் - கீசகனனவன்,—கழல் தாளொடு-வீரக்கழலை யணிந்த (வீமன்) பாதங்களுடனே, தாள் உற - (தன்) தாள்கள் பொருந்த, தாக்கி - மோதியும், மல் கெழு - வலிமை விளங்குகின்ற, தோளொடு - (தன்) தோளுடனே, தோள் - (வீமன்) தோள்கள், உற - பொருந்த, தோய்ந்து - படிந்தும், கன்னல் வில் வேளொடு வரு நலம் விஞ்ச-கரும்புவில்லையேந்திய மன்மதனால் வருகிற இன்பநலமும் விஞ்சும்படி, மேவினன் - (மற்போரில்) தழுவினன்; (எ - று.)

காமவின்பம் நுகர்கையில் தாளொடு தாளும் தோளொடு தோளும் தாக்கிப்பொருந்தல் நிகழு மாதலாலும் இந்த மற்போரிலும் அச்செயல் மிக நிகழ்தலாலும்,'வேளொடுவருநலம் விஞ்ச மேவினன்'என்றார்:இச்செய்யுளில் 'வேளொடு வருநலம் விஞ்சமேவினன்' என்றது, வீமன் செயலை யென்றலும் ஒன்று. (எசு)

77. தாழ்வரைத்தடக்கையாற்றையலாளெதிர்
காழ்வரப்பொருநிறற்காளைதன்னையுஞ்
சூழ்வரச்சுழற்றிச்சுற்றிப்பார்மிசை
வீழ்வரப்புடைத்தனன்மிடலில்விஞ்சினன்.

(இ-ள்.) மிடலில் விஞ்சினன்-வலிமையில் விஞ்சினவனாகிய வீமன்,—வரை தாழ் தட கையால் - வரைபோன்றனவும் தொங்குவனவுமான பெரிய

கைகளால், தையலாள் எதிர் - திரௌபதியின் எதிரிலே, காழ் வர - உறுதி பொருந்த, பொரு - போர்செய்கின்ற, திறல்-வல்லமையை யுடைய, காளை தன்னை உம் - இளவெருது போன்றவனான வீமனையும், சூறையின் - சுழல் காற்றிலகப்பட்டாற்போல, சூழ்வர சுற்றி - மண்டலமாகப் பொருந்தச் சுற்றி, பார்மிசை வீழ்வர - பூமியில் விழுமாறு, புடைத்தனன் - மோதினான்;(எ-று.)

காளைதன்னையும், உம்மை - உயர்வுசிறப்பு. இனி, காளை - வீமன், தன்னையும் சூறையிற் சூழ்வருமாறு சுற்றி, மிடலில் விஞ்சினனாகிய கீசகன் பார்மிசை வீழ்வரப் புடைத்தனன் என்றலுமாம். (௭௭)

78. விழுந்தவன்மீளவும்வெய்துயிர்த்தன
னெழுந்துதன்பகைவனதிருண்டகுஞ்சியை
யழுந்தவல்விரல்களாற்சுற்றியாய்மரக்
கழுந்தெனப்புடைத்தனன்கைகள்சேப்பவே.

(இ - ள்) விழுந்தவன் - விழுந்த வீமன், வெய்து உயிர்த்தனன் - வெம்மையாகப் பெருமூச்சு விட்டவனாய், மீளவும் எழுந்து—, தன் பகைவனது - தன் பகைவனான கீசகனுடைய, இருண்ட குஞ்சியை - கருநிறமுள்ள கூந்தலை, அழுந்த - உறுதியாக, வல் விரல்களால் சுற்றி—, ஆய்மரம் கழுந்து என - ஆராயப்பெற்ற மரத்தின் கழுந்தைப் புடைப்பதுபோல, கைகள் சேப்ப - (அவன் கூந்தலைப் பிடித்த தன்) கைகள் செந்நிறத்தை யடையாநிற்க, புடைத்தனன்—; (எ - று.)

கழுந்து - மரக்கட்டை. (௭அ)

79. புடைத்தனனிவனவன்புடைத்தகைகளை
விடைத்தனனகற்றிமெய்ம்மேவுபூதியுந்
துடைத்தனனாகியத்தோன்றல்வாயினை
யுடைத்தனனொருகையாலொருகைபற்றியே.

(இ - ள்.) புடைத்தனன் இவன் - புடைக்கப் பட்டவனாகிய இவன், புடைத்த அவன் கைகளை - புடைத்த அந்தவீமன் கைகளை, விடைத்தனன் - கோபித்தவனாய், அகற்றி - நீக்கி, மெய் மேவு பூதிஉம் துடைத்தனன் ஆகி - (பார்மிசைப் புடைத்ததனால் தனது) உடம்பிற்பட்ட புழுதியையும் துடைத்தவனாகி, ஒரு கை பற்றி - ஒருகையால் (அவனைப்) பிடித்துக்கொண்டு, ஒரு கையால் - மற்றொருகையினால், அ தோன்றல் வாயினை - அந்தவீரனது வாயை, உடைத்தனன்—; (எ - று.)

இது, கீசகன் செயலைக் கூறியது. விடைத்தனன் என்பதற்கு - விரைந்தவனாய் என்றும், விடுத்தவனாய் என்றும் தடுத்து என்றுங் கூறுவாருமுளர்.

80.—இருவரும் ஒத்துப்போர, இரவில் வேதநேரங் கழிதல்.

வீரமும்வலிமையும்விரகுமொத்தவர்
நீரமுந்தெளிவுநாஞ்செப்பற்பாலவோ
நேரமுஞ்சென்றதுநிசையெனுமிகு
சூரமுஞ்செற்றமுமுடையதோன்றலே.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) வீரம் உம் - வீரத்திலும், வலிமை உம் - தேகவலிமையிலும், விரகு உம் - (போர்செய்யுந்) திறத்திலும், ஒத்தவர் - ஒத்தவர்களான அந்தக்

கீசகவீமர்களின், தீரம்உம் - மனோதைரியமும், தெளிவுஉம் - (போரிலுள்ள) உத்ஸாஹமும், நாம் செப்பற்பால ஓ - நம்மாற் சொல்லுந் தரத்தவோ? மிகு சூரம்உம் - மிக்க சூரத்தனமும், செற்றம் உம் - பகைமையும், உடைய—, தோன்றல் - வீரனான வீமன், 'நிசைநேரம்உம் சென்றது - இரவின்நேரமும் வெகுவாகக் கழிந்திட்டது,' என - என்று கருதி,—(எ - று.)—"மன்னவன் மைத்துனன் மார்பொடிந்திட, ஒன்றிட, தாக்கி, சுருக்கினான்" என மேலிற் கவியில் முடியும்.

தெளிவு - போரிலுள்ள தெளிவான ஞானமுமாம். நிசை=நிஶா: வடசொல். அரோ - ஈற்றசை. (அ0)

81. — இரண்டுகவிகள் - கீசகனுடலைத் தசையின்மலையெனத் தோன்றச்சுருக்கி வீமன் அவனுவியைப் போக்கினமை கூறும்.

மன்னவன்மைத்துனன்மார்பொடிந்திடச்
சென்னியுந்தாள்களுஞ்சேரவொன்றிடத்
தன்னிருசெங்கையாற்றாக்கிவான்றசை
துன்னியமலையெனச்சுருக்கினானரோ.

(இ - ள்.) மன்னவன் மைத்துனன் - விராடமன்னவனுடைய மைத்துனனாகிய கீசகனுடைய, மார்பு—, ஒடிந்திட-ஒடியவும், சென்னி உம் தாள்கள் உம் சேர ஒன்றிட - சிரசும் பாதங்களும் ஒன்றுபடச் சேர்ந்திடவும், (வீமன்), தன் இரு செம் கையால் தாக்கி - தன்னுடைய இரண்டு செவ்விய கைகளாலும் மோதி, வான் தசை துன்னிய மலை என - மிக்கசதை நெருங்கிய குன்று என்று (கண்டவர்) சொல்லும்படி, சுருக்கினான் - (பரவியிருந்த அவனுடலைச்)சுருங்குமாறு பிடித்து வைத்தான்; (எ - று.)

கை கால் சென்னி முதலியவை ஒன்றுந் தெரியாது மாமிசபருவதமென்று ஒன்றுதான் தோன்றும்படி கீசகனுடைய உடலத்தை அடக்கியதனால், சுருக்கினானென்றார். சென்னிதாள்களைக் கூறியது, கைக்கும் உபலட்சணம்: 84 - ஆங் கவியைக் காண்க. அரோ - ஈற்றசை. (அக)

82. மாற்றினானவன்பெருமையலாவியைக்
கூற்றினார்கைக்கொளக்கொடுத்துத்தன்சின
மாற்றினானத்திறலார்கொல்வல்லவர்
காற்றினால்வருதிறற்காளையல்லதே.

(இ - ள்.) அவன் - அந்தக் கீசகனுடைய, பெரு மையல் ஆவியை - மிக்க காமமோகங்கொண்ட உயிரை, மாற்றினான் - (உடம்பினின்று) வேறுபடுத்தினவனாய், கூற்றினார் கைக்கொள கொடுத்து - யமன் கையினாற் பெற்றுக் கொள்ளும்படி கொடுத்து, (வீமன்), தன் சினம் மாற்றினான் - தன் கோபத்தைப் போக்கினான்: காற்றினால் வரு திறல் காளை அல்லது - வாயுதேவனாலுண்டாக்கப்பட்டுத் தோன்றிய வலிமையுள்ள இளவெருதுபோன்ற வீமசேனனை யல்லாமல், அ திறல் யார் கொல் வல்லவர்-அந்தப்பராக்கிரமச் செயலைச் செய்யவல்லவர் வேறுயாவருளர்? (எ - று.)—மூன்றாமடியில் ஆற்றினான் என்றும் பிரிக்கலாம். (அ௨)

83.—கீசகனை வீமன் வதைத்ததைப் பற்றிய கவிக்கூற்று.

பண்ணியவினைகளின்பயனலாதுதா
மெண்ணியகருமமுற்றியாவரெய்தினார்

திண்ணியகீசகன்செய்ததீங்கிவன்
புண்ணியமானதாற்புகல்வதென்கொலாம்.

(இ - ள்.) பண்ணிய - (அவரவர்)செய்த, வினைகளின் - புண்ணியபாவரூபமான செய்கைகளின், பயன் அலாது - பயனை அடைவதல்லாமல், தாம் எண்ணிய கருமம் - தாம் நினைத்த செயலை, மற்று - வினைப்பயனுக்கு மாறாக, எய்தினர் யாவர் - (தாம் நினைத்தபடி) அடைந்தவர் யாவர்? திண்ணிய கீசகன் - வலிமையுள்ள கீசகன், செய்த—, தீங்கு - தீச்செயல், இவன் - இந்த வீமசேனனுக்கு, புண்ணியம் ஆனது - நல்வினைப்பயனைத் தருவதாக ஆயிற்று: புகல்வது என்கொல் - (இதுபற்றி நாம் வேறு) சொல்லத்தக்கது யாது? (எ - று.)

கீசகன் திரௌபதியைச் சேரக்கருதிவந்தது தீச்செயலாதலால் அத்தீவினைப்பயன் அவனை யழிக்க, அதுவே வீமனுக்கு வெற்றியைத்தரும் புண்ணியப்பயனாக இருந்ததென்று, கவி, உலகோருக்கு ஒருநீதியை இதனாற் கற்பிக்கின்றன ரென்க. ஆல் - தேற்றம். ஆம் - அசை. (அங)

84.—கீசகனுடலைக் கால் தலை என்று தெரியாதபடி சுருக்கினபின்பு திரௌபதியை வீமசேனன் அழைத்தல்.

செங்கைகாலுடலொடுசென்னிதுன்றிட
வங்கையாலடக்கிநின்றநேகமாயிரம்
வெங்கையானையின்மிடல்வீமன்வெற்பன
கொங்கையாடன்னையுங்கூவினானரோ.

(இ - ள்.) செம் கை - செந்நிறமுள்ள கை, கால்—, உடலொடு - உடல், சென்னி - தலை என்ற இவைகள் யாவும், துன்றிட - ஒன்றுபட்டுச் சேர, வெம் கை அனேகம் ஆயிரம் யானையின் மிடல் வீமன் - விரும்பத்தக்க துதிக்கையையுடைய அனேகவாயிரம் யானைகளின் வலிமையைப்படைத்த வீமசேனன், அம் கையால் அடக்கிநின்று - (தன்னுடைய) அழகிய கையாற் சுருக்கி, வெற்புஅன கொங்கையாள் தன்னைஉம் - மலையையொத்த தனங்களையுடையளான திரௌபதியையும், (அதனைக்காட்டும்பொருட்டு), கூவினான் - அழைத்தான்; (எ - று.)—அரோ - ஈற்றசை. (அச)

85.—வீமன் அந்தக் கீசகனுடலைத் திரௌபதியின் பாததலத்தில் வைத்தல்.

பூங்கொடியனையவள்புறவடிப்புறத்
தோங்கியகீசகனுடற்பிழம்பினை
நீங்கியவாய்மைகணிகழ்ந்ததென்னவே
பாங்கினில்வைத்தடற்பவனன்மைந்தனே.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) பூங் கொடி அனையவள் - பூங்கொடி போன்றவளான அந்தத் திரௌபதியின், புறம் அடிப்புறத்து - புறவடியினிடத்து, ஓங்கிய கீசகன் உடல் பிழம்பினை - (குன்றுபோல) உயர்ந்திருந்த கீசகனுடற் பிண்டத்தை, அடல் பவனன் மைந்தன் - வலிமையுடைய வாயுகுமாரனான வீமன், நீங்கிய வாய்மைகள் நிகழ்ந்தது என்ன - ஒழுக்கந்தவறிய வாய்வார்த்தையால் நேர்ந்ததாகும் (இத்தன்மை) என்று (கண்டார்) சொல்லும்படி, பாங்கினில் வைத்து - இனிதாகவைத்து,—(எ - று.)— "துயரநீங்க, சுவாலைசெய்தனன்" என மேலிற் கவியில் முடியும்.

அவன் சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொல்லியதும் நேர்மையற்ற வழியில் ஒழுகியதுமே அர்த்தகீசகன் மாண்டதற்குக் காரணமாதலால், அவற்றை யுணர்ந்தவர்கள் கீசகனுடைற் பிழம்பினைக் காண, நீங்கிய வாய்மைகளால் இது நிகழ்ந்ததென்பரென்க. நீங்கிய வாய்மைகள் - தவறிய நேரிய வழிகள் என்றுமாம். (அரு)

86.—வீமன் ஒருமரத்தைப் பிடுங்கிக் கைகளாற் பிசைந்து தீயெழச்சுவாலைசெய்து கீசகனுடலைத் திரௌபதிக்குக் காட்டுதல்.

விடுங்குழைமராமரமொன்றுவேருடன்
பிடுங்கினன்கைகளாற்பிசைந்துதீயெழச்
சுடுங்கொலென்றஞ்சிலன்சுவாலைசெய்தன
னெடுங்கணாள்கண்டுதன்றுயரநீங்கவே.

(இ - ள்.) விடும்-மேன்மேல் தோன்றுகின்ற, குழை-தளிர்களையுடைய, மராமரம் ஒன்று - ஒருமராமரத்தை, வேருடன் பிடுங்கினன் - வேரோடு பிடுங்கி, கைகளால் பிசைந்து - (தன்) கைகளால் (நெருப்புத்தோன்றுமாறு அந்தமரத்தைப்) பிசைந்து, தீ எழ சுடும் கொல் என்று அஞ்சிலன்-(அங்ஙன் பிசைந்தபோது அதினின்று) அக்கினிதோன்றவும் சுடுமோ என்று சிறிதும் அஞ்சாதவனாய், நெடுங் கணாள் கண்டு தன் துயரம் நீங்க - நீண்ட கண்களையுடையவளான திரௌபதி கண்டு தன் துயரம் நீங்குமாறு, சுவாலை செய்தனன்-(தோன்றிய நெருப்பைக்) கொழுந்துவிட்டெரியச் செய்தான்; (எ-று.)

பிடுங்கினன், அஞ்சிலன் - முற்றெச்சங்கள். (அசு)

வேறு.

87.—வீமன் உன்னைக்காதலித்தோர் இவனைப்போலவே யாவரென்று சொல்லித் திரௌபதியை யனுப்பிவிட்டுத் தானுஞ் செல்லல்.

வாச மென்குழன் மாது நல்லாயுனை
யாசை கொண்டவ ரிப்படி யாவர்கா
ணேசின் மங்கைநல் லாயினி யேகெனு
மாசி லானு மடைப்பளி யெய்தினன்.

(இ - ள்.) 'வாசம் மெல் குழல் மாது நல்லாய்-நறுமணமுள்ள மெல்லிய கூந்தலையுடைய அழகிய பெண்ணே! உனை ஆசை கொண்டவர் - உன்னை விரும்பியவர், இப்படி ஆவர்காண் - இந்தக்கீசகன் போலவே யாவர்கண்டாய்: ஏசு இல் மங்கை நல்லாய் - குற்றமற்ற மங்கைப் பருவமுள்ள பெண்ணே! இனி ஏகு - இனிச் செல்வாய்,' எனு - என்றுசொல்லி(த் திரௌபதியை) யனுப்பிவிட்டு,—மாசு இலான் உம்-மனம்மாசுநீங்கிய அந்த வீமனும், மடைப் பளி எய்தினன் - (தனக்கு உரிய இடமாகிய) சமையலிடத்தை யடைந்தான்.

இதுமுதல் இந்தச்சருக்கம் முடியுமளவும் இருபத்தொருகவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் மூன்றாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றையவை விளச்சீருமாகிவந்த அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள். (அஎ)

88.—அப்போதுதோன்றிய பலவகையோசையால் கீசகன் தம்பியார் துயிலுணர்தல்.

தோட்டுமென்மலர்ச்சோலையினேனையு
மோட்டுவன்காமுட்டியினேனையு

மாட்டுவண்சுதைமண்டபத்தோதையுங்
கேட்டுணர்ந்தனர்கீசகன்றம்பிமார்.

(இ - ள்.) தோடு - அகவிதழ்களையுடைய, மெல் மலர் - மெல்லிய புஷ்பங்களையுடைய, சோலையின் - சோலையிலே, ஓதைஉம் - (மானுடரின் சஞ்சாரத்தால் தோன்றிய) ஓசையையும், மோடு வல் கரம் முட்டியின் ஓதைஉம் - பருத்த வலிய கைம்முட்டிகளால் மோதியதனுலான ஓசையும், மாடு வள் சுதை மண்டபத்து ஓதைஉம்-(அச்சோலைக்குப்) பக்கத்திலேயுள்ள வளவிய சுண்ணும்புபூசிய மண்டபத்தினின்றுதோன்றிய ஓசையும், கேட்டு - செவியிற்படவே, கீசகன் தம்பிமார் - உபகீசகர்யாவரும், உணர்ந்தனர் - துயிலுணர்ந்தார்கள்; (எ - று.) (அஅ)

89.—மூன்றுகவிகள் - ஒருதொடர்:
உபகீசகர் தம்மனத்திற் கருதியதைக் கூறும்.

தொய்யிலாதிசுதேட்டிணைக்கொப்பனை
கையிலாரழகேறக்கவின்செயுந்
தையலாள்பொருட்டாகத்தனக்குறு
மையலான்மிகவாடிவருந்தினன்.

(இ - ள்.) சுதேட்டிணைக்கு - விராடன்மனைவியான சுதேஷ்ணையென் பவளுக்கு, தொய்யில் ஆதி - தொய்யில்முதலிய, ஒப்பனை - அலங்காரங்களை, கையில் - (தன்) கையினுல், ஆர் அழகு ஏற - நிரம்பிய அழகு பொருந்த, கவின் செயும் - அலங்கரிக்கவல்ல, தையலாள்பொருட்டாக - பெண்ணின்நிமித்தம், (நமது அண்ணனுகிய கீசகன்), தனக்கு உறு மையலால் - தனக்குப் பொருந்திய காமமயக்கத்தால், மிக வாடி—,வருந்தினன் - வருத்தமுற்றிருந்தான்; (எ - று.)

தொய்யில் - மகளிரின் தோள்களிலும் தனங்களிலும் சந்தனக்குழம்பால் எழுதுங் கோலம். (அகூ)

90. வண்டறுதமலர்க்குழல்வல்லியைக்
கண்டகாவிலிக்கங்குற்பொழுதிடைச்
சண்டவேகக்களிறன்னதன்மையான்
கொண்டமாலிற்குறுகினன்போலுமால்.

(இ - ள்.) (ஆகையால்), வண்டு அறுத மலர் குழல் வல்லியை - வண்டுகள் நீங்காத மலர்களையணிந்த கூந்தலையுடைய கொடிபோன்ற பெண்ணுகிய அந்தவண்ணமகளை, கண்ட - பார்த்த, காவில் - சோலையிலே, இ கங்குல் பொழுதிடை - இந்தஇராத்திரியிலே, சண்டம் வேகம் களிறு அன்ன தன்மையான் - கொடிய வேகத்தையுடைய மதயானைபோன்ற தன்மையையுடையனுன (நம்மண்ணனுன) கீசகன், கொண்ட - (தான்) அடைந்துள்ள, மாலின் - காமமோகத்தினுல், குறுகினன்போலும் - நெருங்கினுன்போலும்,

போலும் என்பது - அந்தஉபகீசகர்கள் தம்ஊகத்தைப்பேசுகின்றுரென்பதைப் புலப்படுத்தும். ஆல் - ஈற்றசை. (கூ0)

91. தூவிவாசந்துளிமதுச்சோலையி
லேவலாலியற்றும்மெழிற்பாவைமெய்க்
காவலாகியகந்தருவப்பெயர்த்
தேவரால்வெஞ்செருவுளதானதோ.

(இ - ள்.) வாசம் தூவி - நறுமணத்தைச் சிதறவிட்டுக்கொண்டு, மது துளி - தேனைச் சொட்டுகின்ற, சோலையில் - அந்தச்சோலையிலே, ஏவலால் - (அரசன்தேவியின்) கட்டளைப்படியே, இயற்றும் - பணிசெய்கின்ற, எழில் - அழகிய, பாவை - பிரதிமை போன்றவளான அந்த வண்ணமகளின், மெய் - உடலுக்கு, காவல்ஆகிய—, கந்தருவப்பெயர் தேவரால் - கந்தருவரென்று பேர்பூண்ட தேவசாதியரோடு, வெம் செரு - கொடியபோர், உளது ஆனதோ - நேரிட்டதோ? (எ - று.)—அதனால் தான் இவ்வாறான ஓசைகள் தோன்றியிருக்க வேண்டுமென, உணர்ந்த உபகீசகர் எண்ணினார் என்று வருவித்து முடிக்க. (கக)

92.—அங்ஙன் கருதிய உபகீசகர் சோலையைநோக்கிச் சினத்தோடு ஓடுதல்.

அழிந்தகீசகனன்றிமற்றுண்டென
மொழிந்ததம்பியர் நூற்றொருமூவருங்
கழிந்ததீயுமிழ்கண்ணினராயுயி
ரொழிந்துபோதுமென்றுன்னினரோடினார்.

(இ - ள்.) அழிந்த - உயிரொழிந்த, கீசகன் அன்றி - கீசகனல்லாமல், மற்று - பின்னும், உண்டு என மொழிந்த - உள்ளாரென்று கூறப்பட்ட, தம்பியர் நூற்றொருமூவர்உம் - (அந்தக்கீசகனுடைய) தம்பிமாரான நூற்றொரு மூன்றுபேர்களும்,—கழிந்த - மிக்க, தீ - நெருப்பை, (பெருஞ்சினத்தால்), உமிழ் - வெளிச்சொரிகிற, கண்ணினர் ஆய் - கண்களையுடையவராய், உயிர் ஒழிந்துபோதும் என்று - நம்முயிர் ஒழியப்பெற்றாலும் போகிறோமென்று, உன்னினர் - எண்ணினவராய், ஓடினார் - (அந்தச்சோலையைக் குறித்து) ஓடிச்சென்றார்; (எ - று.)

'கந்தருவரோடு செருவிளைந்து அதனால் நம்மண்ணனுக்கு ஒருகால் மரணம் நேரிட்டிருப்பின் நாம் சென்றாலும் நமக்கும் அந்நிலை நேரக்கூடும்: ஆயினும் ஒருகை பார்த்தேதீரவேண்டும்' என்ற கருத்துடனே அந்தஉபகீசகர் சோலையை நோக்கி விரைந்துசென்றன ரென்பதாம். முதனூலுக்குஏற்ப 'நூற்றொ டொருவரும்' என்று பாடமிருப்பின் நலம். (கஉ)

93.—பன்னூறு தீபங்களோடு அந்தச்சோலையிலே சென்று உபகீசகர் தேடிப்பார்த்தல்.

நகரியெங்குஞ்வெருவரநள்ளிரு
ளுகருமாறுபன்னூறொளித்தீபமோ
டகருநாறுதண்காவிலரும்பக
னிகருமென்னநெருங்கினர்நேடினார்.

(இ - ள்.) நகரி எங்குஉம் - (அந்தஉபகீசகர் செய்த ஆர்ப்பாட்டத்தினால்) அந்தவிராடநகரில் எவ்விடத்திலுள்ளாரும், வெருவர-அச்சமடையாநிற்க,— அரும் பகல் நிகரும் என்ன - (அவ்விரவு) அருமையான பகற்பொழுதை யொத்திருக்குமென்று கருதும்படி, நள் இருள் நுகரும் ஆறு - செறிந்த இருளைப் போக்குமாறு, பல் நூறு ஒளி தீபமோடு - பல நூற்றுக்கணக்கான ஒளியைக்கொண்ட தீபத்தோடு, அகரு நாறு தண் காவில் - அகருவின் மணம் வீசுகின்ற குளிர்ந்த அச்சோலையில், (அந்தஉபகீசகர்கள்), நெருங்கினர் - நெருங்கிப்போய், நேடினார் - (நிகழ்ந்ததையுணருமாறு) தேடிப் பார்த்தார்கள்; (எ - று.) (கங)

94.—உபகீசகர் மண்டபத்திடையிலே வீமனுற் சிதைவுண்ட கீசகன்வடிவைக் காணுதல்.

சுதைநிலாவொளிசூழ்மண்டபத்திடைச்
சிதையுமெய்யொடுஞ்செம்பொற்சிலம்பெனக்
கதைவலான்வெங்கடுங்கொடுங்கைகளால்
வதைசெய்தம்முன்வடிவுகண்டார்களே.

(இ - ள்.) சுதை நிலா ஒளி சூழ் - சுண்ணச்சாந்தின் வெண்ணிறவொளி சூழப்பெற்ற, மண்டபத்திடை - மண்டபத்திலே, சிதையும் மெய்யொடுஉம் - (உறுப்புக்கள் தெரியாது) சிதைந்துள்ள உடம்புடனேகூடிய, கதை வலான் வெம் கடுங் கொடுங் கைகளால் வதை செய் - கதாயுதத்தில்வல்லவனுன வீமசேனனுடைய வெவ்விய மிகக்கொடிய கைகளாற் கொல்லப்பட்ட, தம்முன் வடிவு - தமது அண்ணனுடைய வடிவத்தை, (அந்த உபகீசகர்கள்), செம் பொன் சிலம்பு என-மேருமலைபோல(த்தோன்ற), கண்டார்கள்—. ()

95.—சுதேஷ்ணைக்குக் கீசகன் மாண்ட செய்தியைக் கூறிப் புலம்பிவிட்டு, உபகீசகர் அயலறியாமல் அவனுடலைச் சுட்டெரிக்க எண்ணுதல்.

பழுதுடைப்பெரும்பாதகன்மாண்டமை
தொழுதுரைத்துச்சுதேட்டிணைதன்னொடு
மழுதரற்றியயலறியாவகை
யெழுதழற்கணிடுவதற்கெண்ணினர்.

(இ - ள்.) பழுது உடை - குற்றமுள்ள, பெரும் பாதகன்-(பரதாரத்தை விரும்புதலாகிய) பெரும்பாதகத்தைச் செய்தவனுகிய கீசகன், மாண்டமை - இறந்துவிட்டதை, சுதேட்டிணைதன்னொடுஉம் - சுதேஷ்ணையினிடத்து, தொழுது உரைத்து - வணங்கிச் சொல்லி, (அந்த உபகீசகர்கள்), அழுது அரற்றி - புலம்பி வாய்விட்டுக்கதறி, (பிறகு), அயல் அறியா வகை - பிறர்க்குத் தெரியாதபடி, எழு தழற்கண் - பற்றியெரிகின்ற நெருப்பிலே, இடுவதற்கு - (அவ்வுடலை) இட்டுச் சுட்டெரிப்பதற்கு, எண்ணினர் - நினைத்தார்.

96.—உபகீசகர் தம்மண்ணனுடலுடன் அவனது மரணத்திற்கு ஏதுவான வண்ணமகளையும் உடனிட்டெரிக்க நிச்சயித்தல்.

எண்ணிலாமனத்தெம்முனையெண்ணுடை
விண்ணுளார்சிலர்வீத்ததற்கேதுவாம்
வண்ணமாபகடன்னையும்வன்னியா
லண்ணலோடுமடுதுமென்றார்களே.

(இ - ள்.) 'எண் இலா மனத்து-(பிறவீரரை)மதித்தலில்லாத மனத்தையுடைய, எம்முனை - எமக்கு முன்பிறந்தவனுன [அண்ணனுன] கீசகனை, எண் உடை விண் உளார் சிலர்-மதிப்புள்ள தேவவருக்கத்தைச் சேர்ந்த சிலர், வீத்ததற்கு - கொல்லுதற்கு, ஏது ஆம் - காரணமாக விருந்த, வண்ண மா மகள் தன்னை உம் - வண்ணமகளாகத் தொழில்புரிபவளையும், அண்ணலோடு உம் - பெருமைவாய்ந்த அண்ணனுடனே, வன்னியால் - ஈமவெரியாலேயே, அடுதும் - எரித்திடுவோம்,' என்றார்கள் - என்று (அந்த உபகீசகர்) தீர்மானித்திட்டார்; (எ - று.)

எண்ணிலாமனத் தெண்ணுடை - தொடைமுரண். வண்ணமகளையும் ஈமவெரியாலடுமாறு உபகீசகர் வெகுளியால் தீர்மானித்தன ரென்க. எண்

நிலா மனத்து என்று பிரித்து - வலி நிலாவுகின்ற மனத்தையுடைய என்று பொருள் கூறவாருமுளர்: இப்பொருளில் எண் - ஏண் என்பதன் விகாரம். விண்ணுளா ரென்றது, கந்தருவரை. (கசு)

97.—இரண்டு கவிகள் - ஒரு தொடர்: வண்ணமகளை ஈமவெரியிலிடுமாறு உபகீசகர் வந்து பற்றுதலும் அவள் தன் மெய்காக்குங் கடவுளரைக் குறித்து அரற்றுதல்.

சொல்லுமாடவர்சொல்லினராயினுங்
கொல்லுமோகனறுன்பெற்றகோதையை
மல்லன்மாலையினார்வந்துபற்றலு
மல்லல்கூரவரற்றினளாலவள்.

(இ - ள்.) சொல்லும்-(இவ்வாறு வண்ணமகளை ஈமவெரியிலிட்டெரிக்குமாறு தீர்மானித்துச்) சொல்லிய, ஆடவர்—, சொல்லினர் ஆயினும்—, கனல் - அக்கினி, தான் பெற்ற கோதையை - தான் பெற்ற பெண்ணை, கொல்லும்ஓ-உயிர்நீங்கச் சுட்டெரிக்குமோ? [எரியாதன்றோ?] (இதுநிற்க): மல்லல் மாலையினர் - வளப்பமுள்ள மலர்மாலையை யணிந்தவரான உபகீசகர்கள், வந்து—, பற்றலும் - (அந்தவண்ணமகளைப்) பிடித்துக்கொள்ளுதலும், அவள்,— அல்லல் கூர-துன்பம்மிக, அரற்றினள் - கதறலானாள்; (எ - று.)

அந்தவண்ணமகள் அரற்றினவகை மேற்கவியிற் பெறப்படும். முதலிரண்டடிகள் - உபகீசகரெண்ணம் பலிக்காதென்பதைப் பற்றிய கவிக்கூற்று: ஒருகால் உபகீசகர்கள் அந்தத்திரௌபதியை ஈமவெரியிலிட்டாலும், எரியினின்றுபிறந்தவளான அவளை அந்தஎரி எரிக்காதென்றவாறு. கோதை - மயிர்முடி: உடையாளுக்கு ஆகுபெயர்: இனி, கோதை - மாலை: அதுபோல் மெல்லியாளுக்கு உவமவாகு பெயருமாம். (கஎ)

98. வெருவருங்கருங்கங்குலில்வெங்கொலை
நிருபரென்னைநெருப்பிடைவீழ்த்துவான்
கருதினார்கண்மெய்காக்குங்கடவுள்காள்
வருதிரென்றுகண்வார்புனல்சோரவே.

(இ - ள்.) 'வெருவரும் - அஞ்சத்தக்க, கருங் கங்குலில்-கரியஇரவிலே, வெங் கொலை நிருபர் - கொடிய கொலைப்பாதகத்தைச் செய்யக்கருதிய சில மன்னவர், என்னை—, நெருப்பிடை—, வீழ்த்துவான் - தள்ளும்பொருட்டு, கருதினார்கள் - எண்ணியுள்ளார்கள்: மெய் காக்கும் கடவுள்காள் - என்னுடலைப் பாதுகாக்கின்ற தெய்வங்களே! வருதிர் - (என்னைப் பாதுகாக்க)வாருங்கள்,' என்று - என்றுசொல்லிக்கொண்டே,— கண் வார் புனல் சோர - கண்களினின்று மிக்க நீர் பெருக,—(எ - று.)—'அல்லல்கூரவரற்றினள்' என்று கீழ்க் கவியில் முடியும். (கஅ)

99.—அதுகேட்டுப் பெருப் போர்புரிய வீமன் அங்கு விரைந்துஓடுதல்.

மடைப்பெரும்பள்ளியெய்தியமாருதி
கிடைப்பதன்றிக்கிளர்பெரும்போனாறுத்
தொடைப்பெரும்பவனத்தனல்சோர்தரப்
புடைப்பவோடினன்போர்மதமாவனான்.

(இ - ள்.) போர் மதம் மா அனான் - போர்செய்யவல்ல மதக்களிறு போன்றவனான, பெரு மடைப்பள்ளி எய்திய மாருதி - பெரியமடைப்பள்ளி

யைச் சேர்ந்திருந்த வீமன், 'இ கிளர் பெரும் போர் கிடைப்பது அன்று - இந்த உற்சாகத்துடன்செய்யத்தக்க பெரும்போரானது (எப்போதும்) கிடைக்கக்கூடியது அன்று,' எனா - என்று (போரைக் குறித்து) மகிழ்ச்சி கொண்டு, தொடை பெரும் பவனத்து - (விரைந்து செல்வதால்) தொடையி னின்று வெளிப்படுகின்ற பெருங்காற்றிலே, அனல் சோர்தர புடைப்ப - நெருப்புத்தோன்றுமாறு (ஒருதுடையோடு மற்றொருதுடை) மோத, ஓடினன் —; (எ - று.)

துடைகள் ஒன்றோடொன்று மோதிப் பெருங்காற்றை வெளிப்படுத்து வதால் அந்த அதிர்ச்சியில் நெருப்புத்தோன்றி மூளுவதாயிற் றென்க. துடைப்பரும்பவனத்துஎன்ற பாடத்துக்கு - அழித்தற்குஅரிய வீட்டினின் றும், தான்செல்லும் விசையாலே, அனல்சோர்தர ஓடினான் என்பர். துடைப்பரும் புவனத்தினிற் சோர்தர என்றும் பாடம். (கூகூ)

100.—இரண்டுகவிகள்-வீமசேனன் மரங்களைக்கொண்டு உபகீசகர்களைத் துரத்தித்துரத்தி யடித்து உயிர்தொலைத்தமை கூறும்.

அகப்பொழிற்கண்டவம்மரம்யாவையு
மிகப்பிடுங்கினன்வேரொடும்கோட்டொடு
முகப்புடைத்தனனோடத்தொடங்கினர்
தகச்செயாமதிக்கீசகன்றம்பிமார்.

(இ-ள்.) அகப்பொழில்-சோலையினுட்புறத்தே, கண்ட-காணப்பட்ட, அ மரம் யாவை உம்-அந்தமரங்களை யெல்லாம், வேரொடுஉம் கோட்டொடுஉம்- வேரோடும் கிளையோடும், மிக பிடுங்கினன் —: உக - (அவ்வுபகீசகர்கள்) உயிர்சிந்துமாறு, புடைத்தனன் - மோதினான்: தக - தகுதியாக, செயா - (தொழில்களைச்) செய்யமாட்டாத, மதி - துர்ப்புத்தியையுடைய, கீசகன் தம்பிமார் —, — ஓட தொடங்கினர் - ஓடஆரம்பித்தார்கள்; (எ - று.)

திரௌபதியை உயிரோடு கொளுத்துவதென்று முயன்றவ ராதலால், அவர்களை 'தகச்செயாமதிக் கீசகன் தம்பிமார்' என்றார். (க00)

101. போனபோனதிசைதொறும்போய்த்தொடர்ந்
தானவானவனொக்கவக்கோட்டினான்
மானமும்மவராவியும்வாங்கினா
னேனையோர்களுந்தம்முனோடெய்தினர்.

(இ - ள்.) போன போன திசைதொறுஉம் - (உபகீசகர்) ஓடிப்போன திக்குக்களிலெல்லாம், தொடர்ந்து போய்-(அவர்களைத்)தொடர்ந்து சென்று, ஆன - (திரௌபதியைக் காப்பதற்காக) வந்த, வானவன் ஒக்க - கந்தருவ தேவனையொப்ப (த்தோன்றி), அ கோட்டினால்-அந்தமரக்கிளையினால், மானம் உம் - (அவர்களுடைய) கருவத்தையும், அவர் ஆவிஉம் - அவர்களுடைய உயிர்களையும், வாங்கினான் - (வீமன்) பறிக்கலானான்: ஏனையோர்கள் உம் - மற்றையோரான உபகீசகர்களும், தம்முனோடு எய்தினர் - தம்மண்ணனோடு போய்ச் சேர்ந்தார்கள் [இறந்தார்கள்]; (எ - று.)

இரண்டாமடியில், ஆனமானவனக்கொடுங்கோட்டினன் என்றும் பாடம். தொடர்ந்து—, ஆன - பொருந்திய, வானவன் - பெரியோனான வீம சேனன், ஒக்க - ஏற்க என்று உரைப்பாருமுளர். (கoக)

102.—ஊரார் வருந்துதல்.

துவன்றகற்புடைத்தோகையைவிட்டுமுன்
னுவன்றகீசகர் நூற்றொருமூவரு
மவன்றன்வாகுவினலழிவுண்டபின்
கவன்றதாலக்கடிநகரெங்குமே.

(இ - ள்.) துவன்ற - நெருங்கிய, கற்பு உடை-பதிவிரதைத்தன்மையை யுடைய, தோகையை - மயில்போன்றசாயலையுடையளான திரௌபதியை, விட்டு-(தாம் ஈமவெரியிலிடுமாறு பற்றியிருந்ததை) விட்டிட்டு, முன் நுவன்ற கீசகர் நூற்றொருமூவர்உம் - முன்னே சொன்ன உபகீசகர் நூற்றுமூன்று பேர்களும், அவன் தன் வாகுவினல் - அந்த வீமசேனனுடைய கையினல், அழிவுண்ட பின் - இறந்து விட்டபிறகு, அ கடி நகர் எங்குஉம் கவன்றது - அந்தக் காவலுள்ள நகரம்முழுதும் வருந்திற்று; (எ - று.)— ஆல் - ஈற்றசை.

ஏககாலத்தில் விராடனுடைய தேவியின் தம்பியர்யாவரும் இறந்தது குறித்து நகரத்தவர் சோகித்தன ரென்பதாம். நகரத்துக்குப் பாதுகாவல் குறைந்திட்டது குறித்துச் சோகித்தன ரெனலுமாம். நூற்றொடொரைவரும் என்றுபாட மிருக்கலாம். (கoஉ)

103.—இரண்டு கவிகள் - ஒருதொடர்: நகரத்தவர் கீசகவதத்தால் நடுங்கிட, வீமனும் திரௌபதியும் தந்தமிடத்தைச் சேர்தல் கூறும்.

கற்கும்யாழுடைக்கந்தருவர்க்கெதிர்
நிற்பரோவுடனேர்பொரமானவர்
கிற்குமைந்துடைக்கீசகர்யாவருந்
தற்கினன்மடிந்தார்தகவொன்றிலார்.

(இ - ள்.) கற்கும் - பயின்ற, யாழ்உடை-யாழையுடைய, கந்தருவர்க்கு எதிர் - கந்தர்வர்க்கு முன்னே, நேர் பொர - நேர்நின்று சண்டைசெய்ய, மானவர் உடன் நிற்பர்ஓ - மனிதர் உடன் நிற்கவல்லரோ? [வல்லரல்லர்]: (ஆதலால்), கிற்கும் மைந்து உடை - ஆற்றல்படைத்த வலிமையையுடைய, கீசகர் யாவரும்—, தகவு ஒன்று இலார்-நற்குணம் சிறிதும் இல்லாதவராய், தற்கினல் - செருக்கினல், மடிந்தார் - இறந்திட்டார்; (எ - று.)— கிற்கும் மைந்து - செய்யும் வலிமையுமாம். (கoங)

104. என்றுமாநகர்யாவுநடுங்கிடத்
துன்றுகங்குலிற்சோரர்தமாருயிர்
பொன்றுவித்தபொருநனும்பூவையுஞ்
சென்றுதத்தமசேர்விடநண்ணினர்.

(இ - ள்.) என்று - என்றுசொல்லி, மா நகர் யாஉம் - பெரியநகரத்திலுள்ள ஜநங்களெல்லாம், நடுங்கிட - நடுக்கமடைய,—துன்று கங்குலில் - (இருள்) நிரம்பிய இரவிலே, சோரர்தம் - வஞ்சனைக் குணமுடையரான கீசகரின், ஆர் உயிர் - அருமையான உயிரை, பொன்றுவித்த - அழியுமாறு செய்த, பொருநன்உம் - வீரனாகிய வீமனும், பூவைஉம் - நாகணவாய்ப்பறவைபோன்று கொஞ்சிப்பேசுந் தன்மையளான திரௌபதியும், சென்று-(ஆங்குநின்றும்)போய், தத்தம - தம்தமக்குஉரிய, சேர்வு இடம் - சேர்தற்கு உரிய இடத்தை, நண்ணினர் - சேர்ந்தார்கள்; (எ - று.)

நகர் - இடவாகுபெயர். பூவை - உவமவாகுபெயர். 'வண்ணமகளோ பேரழகுபடைத்த வடிவினள்: அவளைக் கண்ணெடுத்துப்பார்ப்பவரோ கீசகர்கதியைக் கந்தருவ தேவராலடைவது திண்ணம்: ஆதலால், இவளை இந்நகரில் தங்கஇடங்கொடுக்காமல் அப்பாற்செல்லச் செய்வதே தகுதி' என நகரத்தவர் விராடனிடம் வேண்ட, விராடனும் வண்ணமகளை நகரைவிட்டுப் போய்விடுமாறு சுதேஷ்ணைமூலம் தெரிவிக்க, அரசகட்டளையைக் கேட்ட வண்ணமகள் ஒருதிங்கள் அங்குவசிக்க அநுமதிகொடுக்குமாறு வேண்டிக்கொள்ள, சுதேஷ்ணை உடன்பட்டனளென்னும் முதனூல். (௧0௪)

105.—சூரியோதயமாக இரவில்நடந்த போர் எங்கும் பிரசித்தமாதல்.

கரியகங்குல்கனையிருட்போர்வையோ
டிரியவந்தவிருள்வலிதன்னினும்
புரியினன்றுபுரிந்தவப்போருமவ்
கிரியின்மன்னுங்கிளர்விளக்கானதே.

(இ - ள்.) கரிய கங்குல் - கருநிறமாகத் தோன்றும் இரவானது, கனை இருள் போர்வையோடு இரிய - நெருங்கிய இருளாகிய போர்வையோடு நிலைகெட்டோட, வந்த - அப்போது உதித்த, இருள்வலி தன்னின்உம் - சூரியனைக்காட்டிலும், புரியின் அன்று புரிந்த அ போர் உம் - அந்த விராடநகரத்திலே அன்று செய்யப்பட்ட அந்தயுத்தமும், வல் கிரியின் மன்னும் கிளர் விளக்கு ஆனது - வலிய மலைமீதுபொருந்திய கொழுந்துவிட்டெரிகின்ற தீபம்போல எங்கும் விளக்கமுற்றுப்பரவியது; (எ - று.)

பல நகரங்களிலும் இதேபேச்சாயிற் றென்றவாறு. சூரியன் குன்றின் மேலிட்ட விளக்குப்போன்று உலகெங்கும் பிரகாசித்தன னன்றோ: அது போலவே கீசகர்களின்வதமும் எங்கும் தெரிய லாயிற்றென்க. (௧0௫)

106.—தன்மைத்துனன்மார் சந்தநுவரா லிறந்தது கேட்டு விராடன் மெலிவுழத்தல்.

புலியினும்பெரும்போரிற்றனித்தனி
வலியராகியமைத்துனர்யாரையும்

பலியிடுங்கந்தருவரைப்பார்க்கவே
மெலிவுழந்தனன்விற்கைவிராடனே.

(இ - ள்.) பெரும் போரில் - பெரிய போர்முனைகளில், புலியின் உம் தனித்தனி வலியர் ஆகிய - புலியைக்காட்டிலும் தனித்தனி வலிமையைக் காட்டுபவராகிய, மைத்துனர் யாரைஉம்-(தன்)மைத்துனர் யாவரையும், பலியிடும் - உயிர்ப்பலிகொண்ட, கந்தருவரை—, பார்க்கவே—, வில் கை விராடன் - வில்லையேந்திய கையையுடைய விராடமன்னவன், மெலிவு உழந்தனன் - மனச்சோர்வடைந்தான்; (எ - று.)

மைத்துனர் யாரையும் பலியிடுங் கந்தருவரைப் பார்த்தல் - தன்மைத்துனன்மாருயிரைக் கந்தருவர் கொள்ளைகொண்டாரென்று உணர்தல். பார்க்கவே என்ற இடத்து, பற்றவே என்றும் பாடமுண்டு. (௧0௬)

107.—பெரும்பாலும் அஜ்ஞாதவாசகாலம் கழிந்து விட்டதால் பாண்டவர் இனி விரைவில் வெளிப்படுவோமென்ற மனப்பான்மையோ டிருந்தல்.

காண்டகுந்தமவேடங்கரந்துறை
யாண்டுசென்றதினிச்சிலநாளென
மீண்டுதோன்றுதுமென்றுவிரதராம்
பாண்டுமைந்தரும்பான்மையினண்ணினர்.

(இ - ள்.) விரதர் ஆம் - விரதவொழுக்கத்தை யுடையவரான, பாண்டு மைந்தர்உம் - பாண்டவர்களும்,—'காண்தகும் தம வேடம்-(இன்னாரென்று) கண்டறியத்தக்க நிஜரூபத்தை, கரந்து - மறைத்துக்கொண்டு, உறை - வசிக்கின்ற, யாண்டு-ஒருவருஷமும், இனி சில நாள் என-இனிச் சில நாளே யுள்ளன வென்னுமாறு, சென்றது - (பெரும்பாலும்) கழிந்திட்டது; மீண்டு தோன்றுதும் - (விரைவில் தானே நிஜரூபத்துடன்) மறுபடியும் வெளிப்படுவோம்,' என்று - என்றுகருதி, பான்மையின் - (அதற்கேற்ற) மனப்பான்மையோடு, நண்ணினர் - பொருந்தியிருந்தார்; (எ - று.)

கீசகன் வதைச்சருக்கம் முற்றிற்று.

---

# வில்லிபுத்தூரர் பாரதம்

## விராட பருவம்

-----o;-----

### நிரைமீட்சிச் சருக்கம்

1. தொழுவார்தம் வினைதீர முற்கோல மாய்வேலை சூழ்பாரெயிற்
றுழுவானை நன்னாம மொன்றாயி னுங்கற்றொ ருருவோதினார்
வழுவாத சுரராக நரராக புள்ளாக மாவாகபுன்
புழுவாக வொன்றிற்பி றந்தாலு நரகிற்பு கார்காணுமே.

2. மூதாரழற்பாலைவனமுந்தடஞ்சாரன்முதுகுன்றமுஞ்
சூதாடியழிவுற்றடைந்தோர்கள்சரிதங்கள்சொன்னோமினிப்
பாதாரவிந்தத்துமருவார்விழக்கொண்டபோராளும்வெங்
கோதார்மனத்தோன்விராடன்றனிரைகொண்டகோள்கூறுவாம்.

3. ஈராறுமொன்றுஞ்சுரர்க்குள்ளநாள்சென்றவினிநம்முடன்
பாராளவருமுன்னரடலைவருறைநாடுபார்மின்களென்
றோராயிரங்கோடியொற்றாள்விடுத்தானவ்வொற்றாள்களும்
வாராழிசூழெல்லையுறவோடிவிரைவின்கண்வந்தார்களே.

4. காடென்றுமலையென்றுநதியென்றுகடலென்றுகடலாடைசூழ்
நாடென்றுநகரென்றுநாடாததிசையில்லைநாடோறும்யாந்
தோடென்றுதாதென்றுதெரியாதுமதுமாரிசொரிமாலையாய்
நீடென்றுவலமேவுமவனிக்குளவரில்லைநின்பாதமே.

5. முன்னொற்றையிருசங்கமுடனூதவெதிர்சென்றுமுனைவெல்லுமா
மன்னொற்றரிதுகூறமந்தாகினீமைந்தன்மகன்மைந்தனுக்
குன்னொற்றருணர்தற்குவருமோவறன்காளையுறைநாடுகோர்
மின்னொற்றுமழையுண்டுவிளைவுண்டெனத்தேடும்விரகோதினான்.

6. ஒற்றாளிலொருவன்பணிந்தென்றுமெவ்வாழ்வுமுண்டாகியே
விற்றானைவெம்போர்விராடன்றன்வளநாடுமேம்பட்டதான்
மற்றாழ்புயக்கீசகன்றானுமொருவண்ணமகள்காரணத்
திற்றானெனுஞ்சொல்லுமுண்டென்றுநிருபற்கெடுத்தோதினான்.

7. வண்டார்விராடன்றன்வளநாடுதண்டான்மலைந்தேதொறுக்
கொண்டாலவன்சூழலிற்சூழும்வினையங்குறிப்போரிருப்
புண்டாகினிரைமீளுமின்றாகின்மீளாதென்னுட்கோளிதென்
றெண்டாழுமிதயத்துநிருபற்குரைத்தானிரவிமைந்தனே.

8. தக்கோர்தகுஞ்சொற்கள்கேளாததுரியோதனன்சொல்லினான்
மிக்கோர்மிலைச்சுஞ்செழுந்தாமவிறல்வெட்சிமிலைதோளினான்
றிக்கோதையெழவிம்மமுரசங்களரசானதிரிகத்தர்கோ
னக்ரோணிபடையோடுபோயானடித்தானவன்சார்பிலே.

9. கரைகாணவரிதானகடலொத்தவெஞ்சேனைகைசூழவுந்
தரைகாவல்பெறுதோளினான்மைப்பெருங்கேளிர்தற்சூழவும்
விரைகாலுமலரோடையெனுமாறிருக்கும்விராடற்குநன்
னிரைகாவனின்றோர்பணிந்தோதினார்தெவ்வர்நிரைகொண்டதே.

10. செருமிக்கபடையோடுசதியாகமதியாதுதிரிகர்த்தர்கோ
னிருமிக்கவொட்டாதவென்பூமிதனில்வந்துநிரைகொள்வதே
பருமிக்கமதயானைதேர்வாசியாளின்னபண்செய்யுமென்
றுருமிக்கமுகில்போலுரைத்தானொரக்ரோணியுளதானையான்.

11. ஒண்டூளிவானம்புதைக்கப்பல்லியசாலமொலிபட்டிடத்
திண்டூசியணியாகநிரைகொண்டவெஞ்சேனைசென்றெய்தினான்
ஞெண்டூரும்வயறோறும்வளைநித்திலஞ்சிந்திநிலவூரவே
வண்டூதமலருந்தடம்பொய்கைசூழ்மச்சவளநாடனே.

12. உட்பேடியாய்வைகும்விற்காளையல்லாதவொருநால்வரு
நட்பேறுபூபாலனுடனேகினார்போர்நலங்காணவே
கொட்பேறுநிரைகொண்டவெஞ்சேனையுஞ்செல்கொடுஞ்சேனையும்
பெட்பேறியமர்செய்யமுன்னிட்டகுருசேனைபின்னிட்டதே.

13. மெய்க்கொண்டபுண்ணோடுதன்சேனைநில்லாமல்வென்னிட்டபின்
கைக்கொண்டநிரையைக்கடத்திப்பொலம்பொற்கழல்காலினான்
செய்க்கொண்டகழுநீரலங்கற்கரந்தைத்திருத்தாமன்மேன்
மைக்கொண்டலெனவில்வளைத்தாறுபத்தம்புமழைசிந்தினான்.

14. மாமச்சவுடல்புன்புலான்மாறிவண்காவிமணநாறுமக்
கோமச்சவளநாடனுங்கொற்றவரிவிற்குனித்தைந்துசெந்
தாமச்சரங்கொண்டுதேர்பாகுகொடிவாசிதனுவுந்துணித்
தாமச்சமுறமற்றவன்கோலமார்பத்துமம்பேவினான்.

15. தனைத்தே ரழித்தோனை நிரைகொண்டு போகின்ற தனுவீரனுந்
துனைத்தேரும்வேறொன்றுமேல்கொண்டுநாலந் துதொடையேவியே
வினைத்தேரும் வயமாவும் வெம்பாகும் விழவெய்து வின்றுணிஞன்
முனைத்தேர் முகத்திற் பிணித்தா னவன்சேனை முகமாறவே.

வேறு.

16. திண்டி றற்சிலை விராடனைத் தேரொடும் பிணித்துக்
கொண்டு போதலுங் குருகுலக் கோமக முனிவன்
கண்டு தன்றிருத் தம்பியைக் கடைக்கணித் தருள
மண்டு தீயென வெழுந்தனன் மடைத்தொழில் வல்லான்.

17. உகத்தினீறுதோறுருதையோடேதையாந்தாதை
நகத்திஞலுயர்நகங்களைநறுக்குமாபோலத்
திகத்தபூபதிதேரினைவேறொருதோராற்
றகர்த்துவில்லொடுமகப்படுத்தினனவன்றனையும்.

18. வீரியந்தனக்கொருவனும்விராடனையொருபொற்
றேரிலேறுகென்றேற்றியத்தேரினிற்றிகத்தன்
சோரிபாய்தடந்தோள்களைவடத்திஞற்றுவக்கி
யூரியேறெனமீண்டனன்முறிந்ததச்சேனை.

19. பொருமுகத்தினிற்பகைவனைப்புயமுறப்பிணித்து
வெருமுகத்தினில்வீடுகொள்வீமனைவிராடன்
செருமுகத்தினிலெனக்குநீசெய்தபேருதவிக்
கொருமுகத்தினுமில்லைகைம்மாறெனவுரைத்தான்.

20. சேவலாமெனத்தயித்தியனனையவத்திகத்தர்
காவலானையக்கான்மகன்பிணித்தமைகண்டு
மாவலான்வயமாப்பதிஞயிரம்வெளவக்
கோவலானவன்கொண்டகோமீளவுங்கொண்டான்.

21. துன்னலன்றனைத்தோளுறத்துவக்கிமுன்றந்த
பன்னுநூன்மடைப்பலாயனற்கண்டுபாவித்தாங்
கன்னகாலையிலருக்கனைத்தேரொடுமணைத்து
மன்னுதன்றிசைவன்சிறைப்படுத்தினன்வருணன்.

22. கங்கனென்றுதன்னருகிருந்தருளியகடவுட்
டுங்கமாமுனிசொற்படிதோள்வடநெகிழ்த்துச்
சிங்கமன்னவத்திகத்தனைச்செல்கெனவிடுத்தா
னங்கமாமதிலயோத்திமன்றேருமொன்றளித்தே.

23. போரணிப்படையொடுமவன்போனபின்றனது
தேரணிப்பெருஞ்சேனையைரவிகுலதிலகன்
பேரணிப்படவகுத்துமற்றியாரினும்பெரியோ
னீரணிப்படைவருமெனக்கங்குலங்கிருந்தான்.

24. கெட்டவெம்படைகெட்டமைசுயோதனன்கேளா
முட்டவெண்டிசாமுகங்களும்பேரிகைமுழங்கத்
தொட்டபைங்கடற்சூரியன்றோன்றுமுன்றோன்றி
வட்டமாமதில்விராடனூர்வடதிசைவளைந்தான்.

25. வளையநாடெலாமன்னவன்வருதினிபரப்பி
விளையுநன்பெருவிளைவெலாம்வெங்கனல்கொளுத்தி
யளையுமாமணியானிரைகவர்தலுமாய
ருளையவோடிவந்தூர்புகுந்துத்தரற்குரைப்பார்.

26. குடநிறைப்பனகுவிமுலைக்கோநிரைமீட்பான்
றிடனுடைப்புயமன்னவன்றென்றிசைச்சென்றான்
வடதிசைப்புலமுழுவதுமாசுணக்கொடியோ
னடல்வயப்படையாழியிற்பரந்ததையன்றே.

27. நாட்டிலுள்ளனபலன்களுங்கவர்ந்தனர்நறுந்தண்
காட்டிலுள்ளனசுரபியின்கணங்களுங்கவர்ந்தார்
கூட்டிலுள்ளுறைகலுழனின்குஞ்சுபோலினிநீ
வீட்டிலுள்ளுறைகின்றதென்வேந்தன்மாமதலாய்.

28. என்றபோதிலப்புதல்வனைப்பரிவுடனின்று
ணின்றமங்கையர்தங்களைநிரைநிரைநோக்கிச்
சென்றகாவலன்வருந்துணைசெங்கையிற்படைகொண்
டொன்றவேநிரம்மெயிற்புறங்காமினென்றுரைத்தாள்.

29. உரைத்தவன்னையைக்கதுமெனவுத்தரன்வணங்கி
நரைத்தவோதிநின்றிருமொழிநன்றெனநகையா
வரைத்தவாரமுமாரமுமாலையுமணிந்தென்
வரைத்தடம்புயம்வளர்த்ததுமகளிர்போர்பொரவோ.

30. கனைகடற்படையுடனிரைக்கணங்கவர்ந்தவரை
முனைபடப்பொருதிமைக்குமுன்முதுகுகண்டிடுவேன்
வினைமுகத்தினையறிந்துதேர்விசையுடன்விடவென்
னினைவொடொப்பதோர்சாரதிநேர்ந்திலனென்றான்.

31. உத்தரன்புகலுறுதிகேட்டொப்பனைக்குரியாள்
கொத்தரம்பொருகூரயிற்குமரனைக்குறுகி
வித்தரம்பெறுதேர்விடும்விசயனுக்கிவளென்
றத்தரம்பெறுபேடியைக்காட்டினளன்றே.

32. என்றபோதவன்பயந்தவட்கியம்பியதுரைப்ப
நின்றபேடியைநிரைவளைதழுவிநீநேரில்
வென்றுபோர்முனையரசரைவிடலைவெய்தீண்டுந்
துன்றுதாரிணுயெனவியந்தின்னவைசொன்னுள்.

33. நாடிவாசியினல்லனநான்கவைபூட்டித்
தேடியாயுதஞ்சிலைமுதற்றெரிந்தவைகொண்டு
கோடிகோடிபைங்கோதையர்குழீஇயினர்வாழ்த்தப்
பேடிதேர்விடச்சென்றனன்சுதேட்டிணைபிள்ளை.

34. விலங்கன்மாமதில்களும்புறவீதியுங்கடந்தாங்
கிலங்குநேமியொன்றுடையதேரென்னலாந்தேர்மேற்
றுலங்குபேரொளியருக்கனிலுருத்தெழுதோற்றத்
தலங்கலுத்தரனுத்தரதிசையைவந்தடைந்தான்.

35. விண்கொளாமதிமேன்மைகொண்மீனினமென்ன
மண்கொளாவிறன்மன்னுடைவரம்பில்வான்படையை
யெண்கொளாமனத்திராகவன்திருக்குலத்திளைஞன்
கண்கொளாவகைபுகுந்துதன்கண்ணுறக்கண்டான்.

36. கைந்நடுங்கவுங்கானடுங்கவுங்கருத்தழிந்து
மெய்ந்நடுங்கவுநாப்புலர்ந்துயிர்ப்புமேல்விஞ்சிச்
சொன்னடுங்கவுஞ்சுடர்முடிநடுங்கவுஞ்சோர்ந்தான்
மைந்நெடுங்களிற்றுரனுடைவிராடர்கோன்மைந்தன்.

37. அஞ்சலஞ்சனீபகைவரையாருயிரடுத
றுஞ்சலென்றிவையிரண்டலாற்றுணிவுவேறுண்டோ
வெஞ்சமந்தனில்வந்துபுண்படாதினிமீண்டால்
வஞ்சநெஞ்சுடைவஞ்சியரென்சொலார்மறவோய்.

38. நிலையுமுட்டியுநிலைபெறநின்றுநேர்படத்திண்
சிலைவளைத்துவெஞ்சிலீமுகஞ்சிற்சிலதொடுத்து
மலையிலக்கெனயாரையுமலைந்திமேலைந்தா
லலைகடற்புவியரசரிலாரெதிர்நிற்பார்.

39. தூண்டுமோவிவைசொரிமதக்களிறிவை துரங்கம்
பூண்டதேரிவைபதாதிமற்றிவையெனப்புகல
வீண்டுநின்றவையாவையுமியாவெனத்தெரியா
மீண்டுபோவதேயுறுதியென்றனனிகல்வீரன்.

40. வெயர்த்தமேனியைநறும்பனிநீரினால்விளக்கி
யயர்த்துநீமுதுகிடாதொழியிமைப்பொழுதையா
வுயர்த்தபல்கொடிப்பகைஞரைத்தனித்தனியோட்டிப்
பெயர்த்துநல்குவேனிரையுமென்றுரைத்தனள்பேடி.

41. கொடித்தடந்தனித்தேரினின்றுகைத்துமுன்குதியா
வடித்தலம்பிடரடித்திடவோடலுமவனைத்
தொடித்தடம்புயமிரண்டையுந்தொடர்ந்துபோய்த்துவக்கிப்
பிடித்துவந்தொருநொடியினிற்றேருடன்பிணித்தான்.

42. பிணித்ததேரினைப்பெற்றமும்பிற்படக்கடாவித்
திணித்தரும்பெரும்பொதும்பரிற்சேர்த்தியசிலையுந்
துணித்துமேவலர்முடியுகுசோரிதோய்தொடையுங்
கணித்தவெல்லையிற்கொண்டுமீண்டமர்க்களங்கலந்தான்.

43. எரிப்புறத்தருத்தருபடையாவெனவினவக்
கிரிப்புறப்பெருங்கானுறைகிரீடியவென்னத்
தெரிப்புறப்புகலெவ்வயிற்சேர்ந்தனனவனென்
றரிப்புறத்தடங்கண்ணியைக்கேட்டனனவனும்.

44. கிரிடியெங்குளனென்றெனைக்கேட்டநீகேண்மோ
விருடியாகிநின்றுரைதையோராசனத்திருக்கும்
புருடனிப்பதிபுகுந்தநாள்வந்துடன்புகுந்தோ
ரரிடமானதன்விதியினாற்பேடியுமானேன்.

45. யாண்டுசென்றிலதின்னமுமீரிருகடிகை
வேண்டுமோவினியீண்டையவ்விசயனுந்தோன்று
மீண்டுபோகலைவிடுவிடுவிரைபரித்தடந்தேர்
தூண்டுநீயெனத்தோளிலத்துவக்கையும்விடுத்தான்.

46. அறிந்துதாள்விழுந்தெழுந்துபின்னுங்கவனருளாற்
செறிந்தமால்பெருஞ்சிறப்பையச்சிறுவனும்பெற்றுப்
பிறிந்தபற்பலபேரணிநால்வகைப்படையு
முறிந்துபோகவத்தேர்விடுதொழிலினின்மூண்டான்.

47. ஓடினனுமித்தேர்விரைந்தூர்பவனென்றும்
பேடிகாமுதலையுறும்பெருந்தகையென்று
நாடினர்பலர்நந்தியாவர்த்தநாண்மாலை
சூடினனெடுஞ்சேனையிற்றுரோணனேமுதலோர்.

48. பேடியன்றுதன்பெண்மையையாண்மையாய்ப்பிறர்கொண்
டாடவந்தவெஞ்சாபமுந்தொடிக்கையிலாக்கிக்
கோடியம்புகளோரொருதொடையினிற்கோத்து
வீடுவிப்பனியஞ்சிடாவிடுகதேரென்றான்.

49. என்றபோதவன்றேரினையிமைப்பினிற்செலுத்தச்
சென்றுபோர்முனைச்சிலைவிடுசிலீமுகங்களினாற்
கொன்றபோர்மன்னரீதிலர்குருகுலத்தவராய்
நின்றபோர்முடிமன்னருஞ்சுளித்துளநெளித்தார்.

50. அன்றுபோலலனருச்சுனனம்பிகாபதிபாற்
றுன்றுபோர்புரிதவத்தினாற்சுடுகணைபலபெற்
றன்றுபோரினிலவுணரையமரருக்காக
வென்றுபோனகநுகர்ந்துபொற்றருமலர்வேய்ந்தான்.

51. தன்னிலத்தினிற்குறுமுயறந்தியின்வலிதென்
றிந்நிலத்தினிற்பழமொழியதிதிசீயிறைவ
வெந்நிலத்தினுமுனக்கெளிதாயினுமிவர்நந்
நன்னிலத்தினில்வரவமர்தொடங்குதனன்றால்.

52. என்றுகூறினன்விதுரனுமேனையகருகு
நின்றவீடுமன்றுரோணனுநினைவிதுவென்றா
ரன்றுநாகவெங்கொடியவன்கொடியநெஞ்சழன்றான்
குன்றமாயினுநீறெழுமருகுறக்குறுகின்.

53. தேருமங்கொருதேர்தனித்தேரின்மேனின்று
வீரவெஞ்சிலைவளைத்தகைவீரனும்பேடி
யாருநெஞ்சழிந்தஞ்சுவதென்கொலென்றிசைத்தான்
சூரன்மாமகனாகியசூரிற்சூரன்.

54. கொண்டகோநிரைகோவலர்கொண்டுமுன்போகத்
தண்டுநிற்கெனத்தம்பியரனைவருந்தானுந்
திண்டிறற்பெரும்பேடியைத்தேர்மிசைக்கண்டு
மிண்டுவீரெனக்கூறியேசுயோதனன்மீண்டான்.

55. மானமாமுடிமன்னரைவிலக்கிவல்விரைந்து
கோநிரைக்குலங்கொண்டுபோங்கோநிரைதுரந்து
போனபேடிவெம்பூசலும்பொழுதுறப்பொருது
தூநிறத்திளங்கன்றுடைத்தொறுக்களுமீட்டான்.

56. முந்தவான்றெறுமீட்டலுமுற்கவர்பொதுவர்
வெந்தநெய்யெனவாரவமடங்கினர்மிகவு
மந்தநெய்யினிற்பாற்றுளியுகுத்தெனவார்த்தார்
வந்தமச்சர்கோமகனெடும்வந்தகோபாலர்.

57. பாலெடுத்தபொற்குடநிகர்மடியினபருவச்
சூலெடுத்தநல்வயிற்றினமழவிடைதொடர்வ
கோலெடுத்திளங்கோவலர்கூவினர்துரப்ப
வாலெடுத்தனதுள்ளிமீண்டோடினவனமே.

58. கடிகைநாலவண்சென்றபின்கடைசிவந்தகன்ற
நெடியகண்ணியன்றிட்டவெஞ்சாபமுநீங்கக்
கொடியின்மீதெழுமனுமனைக்குறிக்கவக்கொடியு
முடிகொடன்றனியிரதமுமுன்வரக்கண்டான்.

59. உரியதேரினைமீதுகொண்டுத்தரன்செலுத்தக்
கரியமேனியன்செய்யதாமரைத்தடங்கண்ணன்
புரியவாங்கியசிலையினனின்றனன்பொலம்பொற்
கிரியின்மீதெழுமரகதகிரியெனக்கிளர்ந்தே.

60. படுங்குறும்பனிபுதைத்தலிற்பரிதிதன்னுருவ
மொடுங்குமாறெனவொளித்ததன்பேட்டுருவொழித்து
நெடுங்கொடுங்கணைநிருபன்வெஞ்சேனையின்வேந்தர்
நடுங்குமாறுமுன்றேன்றினனரனெனுநாமன்.

61. செருச்செய்வான்வருசேனைவெண்டிரையையுங்கடப்பான்
பருச்சிலம்பினின்றுகைதருபாவனைபோல
வுருச்செழுஞ்சுடரெறிப்பநின்றுலாவினனுண்மைக்
கருச்சுனன்றடந்தேர்க்கொடியாடையிலனுமன்.

62. மருமிகுந்தொடைத்தடம்புயமகபதிமதலை
பெருமிதம்படவளைத்தவிற்பிறங்குநாணெலியாற்
செருமியெங்கணுங்கரிபரிதேர்மிசைநின்றே
ருருமின்வெங்குரல்கேட்டகோளுரகரோடொத்தார்.

தோன்ற 'சிறுவன்'என்றுங் கூறினன். ஆகவே,மெய்ந்நடுங்குதலும் எதிர்நில்லாமையும் இயல்பாயின.'மெய்ந்நடுங்காமல்போரில்நின்றுவெல்ல வல்லனே' என்றது - எதிர் நிற்கவும் வல்லனல்லன் வெல்லவும் வல்லனல்லன் என்றபடி. உருவத்தாற் பேடியே யன்றி ஆற்றலாற் பேடியன் றென்பது விளங்க, 'வென்றவன் பேடி' என ஆண்பாலாற் கூறினன். 'வென்றவன் பேடி' என்ற முடிபை, சொல்நிலைநோக்கிய முடிபன்றிப் பொருள்நிலைநோக்கிய முடிபென்னலாம். தருமபுத்திரன் உண்மையை உள்ளபடி உணர்த்தவேண்டுமென்று இவ்வாறு கூறினன். தமது அன்பர் காரணமின்றிச் செருக்குக்கொண்டால் அதனைத் தக்கவாறு கூறியொழித்தல் ஆன்றோர் கடமை; அரசர்செருக்கியவிடத்து அமைச்சர் செயற்பாலதும் அது.

(121) அருச்சுனன் பேடிவடிவங்கொண்டு விராடனிடம் வந்தபோது "ஏய வெஞ்சிலைக்கையருச்சுனன் கோயிலிருப்பதோர் பேடி நான்" என்று சொன்னதைக் கங்கபட்டன் நேரிற் கேட்டும், விரதசாரணியென்னும் வண்ணமகளாகிய திரௌபதி அப்பேடியைக்குறித்து உத்தரனிடம் "வித்தரம்பெறு தேர் விடும் விசயனுக் கிவள்" என்று சொன்னதைக் கேள்வியுற்று முள்ளானதலால், அவற்றிற்கேற்ப 'அவனே முன்னம் காண்டவமெரித்த காளை யொருதனித்தடம் பொற்றேரூர்ந்து' என்றான். சத்தியவிரதனும் அந்தணனுமாகிய தருமபுத்திரனது இவ்வார்த்தை - 'அவனே முன்னம் காண்டவமெரித்தகாளை: (மற்றும்), ஒப்பற்ற தனித்த பொன்மயமான பெரிய (இந்திரனது)தேரி லேறிச்சென்று தேவர்கட்காகத் தேவசத்துருக்களாகிய (நிவாதகவச காலகேயரென்னும்) அசுரர்களை அருமையாக வென்றவன்' என்ற உண்மைப்பொருளையு முடையதாதலும், 'பேடியைப் பேடியென்று கருதல்' என்றதிலும் - பேடியுருவங்கொண்டவனை இயல்பான பேடியென்று எண்ணுதே [அவன் அருச்சுனனவன்] என்ற பொருள் தோன்றுதலும் காண்க. கருதல் - எதிர்மறை யொருமை யேவல். ஒரு தனி - தன்னந்தனி யென்றவாறுமாம். 'உம்பர்' என்ற மேலிடத்தின்பெயர் - அங்கு உள்ள தேவர்க்கு இடவாகுபெயராம்.

காண்டவமெரிந்த கதை:—இந்திரப்பிரத்த நகரத்தைச் சார்ந்ததொரு பூஞ்சோலையிற் கிருஷ்ணனும் அருச்சுனனும் உல்லாசமாக வசித்திருக்கையில் ஒருநாள் அக்கினிபகவான் அந்தணவடிவங்கொண்டு வந்து 'எனக்கு மிகப்பசிக்கின்றது; உணவிடுக' என்று வேண்ட, அவ்விருவரும் 'நீ வேண்டியபடி உணவிடுவோம்' என்று வாக்குதத்தஞ்செய்ய, உடனே தீக்கடவுள் நிஜரூபங்கொண்டு 'இந்திரனது காவற்காடாய் யாவர்க்கும் அழிக்கவொண்ணுதபடி நிலவுலகத்திலிருக்கின்ற காண்டவவனத்தை அதிலுள்ள சராசரங்களுடனே எனக்கு விருந்திடவேண்டும்' என்ன, கிருஷ்ண அருச்சுனர்கள் அங்கே புக்கு ஒதுங்கியிருக்கின்ற அசுரர் முதலிய துஷ்டர்களை யழித்தருள வேண்டுமென்னும் நோக்கத்தால் 'நீ இதனைப் புசி' என்று இசைந்து அளிக்க, உடனே நெருப்புப் பற்றி யெரித்ததென்பதாம். அங்ஙனம் எரிக்கையில், இந்திரன் சினந்து பெய்வித்த பெருமழையைச் சரக்கூடுகட்டித் தடுத்தும்,

கோபித்துத் தேவர்கூட்டத்துடன் வந்து பொருத இந்திரனைப் புறங்கொடுத்தோடச்செய்தும், அவ்வனத்தினின்று தப்பியோடத்தொடங்கிய பிராணிகளை அம்பெய்து தழலில் விழுத்தியும் பலவாறு உதவி புரிந்ததனால், அருச்சுனன் 'காண்டவமெரித்த காளை' எனப்பட்டான். (கஉக)

122.—விராடன் அதனை மறுத்துப்பேசுதல்.

(இ-ள்.) (அதுகேட்ட விராடன் கங்கபட்டனைநோக்கி),—பிரமமூர்த்தி - தவவடிவமுடையவனே! என் புதல்வன் தானே - எனதுபுத்திரனே, ஒரு தனி - தன்னந்தனியே [ஒரு துணையுமில்லாமல்], ஓடி - விரைந்து சென்று, பொருது - போர்செய்து, கோடியின் கோடி ஆன குருக்கள் வெம் சேனை தன்னை-பலகோடிக்கணக்கான குருகுலத்தவரதுகொடியசேனையை, வென்று-சயித்து, நீடிய நிரையும் மீட்டு - மிகுதியான பசுக்கூட்டங்களையும் திருப்பிக்கொண்டு, மீண்டனன் - திரும்பிவந்தான், என்ன - என்று (யான்) சொல்லவும், நீ—, அ பேடியை - அந்தப் பேடியாகிய பிருகந்நளையை, விறல் கொண்டாடி பேசுதி - பெருமைப்பாராட்டிப் புகழ்ந்துபேசுகின்றாய்; (எ - று.)

ப்ரஹ்மமூர்த்தி - வடசொல்; ஈறுநீண்டது, விளியுருபு. பிரமம் - ஞானமும், வேதமுமாம்; ஞானமே ஒருவடிவங் கொண்டாற்போன்றவனென்க: அந்தணரை 'வேதமூர்த்தி' என்றல், வழக்கு. விவேகியாகிய நீ இங்ஙனங் கூறுதல் தகுமோ? என்பதாம். கோடியின் கோடி - கோடியாகிய கோடியெனப் பண்புத்தொகை; கோடியென்னும்எண்ணினாற் பெருக்கிய கோடியென்னும்எண் என்பது கருத்து: அது, பதுமமெனவும், கோடாகோடியெனவும், மகாகோடியெனவும்படும். தான் - தேற்றம்; ஏ - பிரிநிலை. ஒரு தனி - ஒருபொருட்பன்மொழி. (கஉஉ)

123.—இதுவும் அது.

(இ - ள்.) சுருதி வல்லாய் - வேதம்வல்லவனே! புல் நவை ஆன மாற்றம் புகன்றனர் எனினும் - மிகவும்பிழையான வார்த்தைகளை (அரசர்)சொல்லினராயினும், கேட்டு - (அவற்றைச் செவிகொடுத்துக்) கேட்டு, ஆங்கு - அப்பொழுது, அன்னவை நன்று நன்று என்று - 'இவ்வார்த்தைகள் மிகநன்றாயுள்ளன' என்று, இதம் பட - (அவ்வரசர்க்குப்) பிரியமாக, மொழிவது அல்லால் - (அரசரையடுத்துவாழ்பவர்) ஒட்டிப்பேசுவதல்லாமல், மன் அவை நாளும் இருந்து வழிபடும் மாந்தர் - ராஜசபையிலே நாள்தோறும் இருந்து (அரசர்க்குக்) கீழ்ப்படிந்துநடக்கின்ற மனிதர்கள், மன்னர் சொன்னவை மறுத்து மாறு சொல்வரோ - (இவ்வாறு) அரசர்சொன்னவற்றைத் தடுத்து எதிர் பேசுவர்களோ? [பேசார் என்றபடி]; (எ - று.)

எல்லாந்தெரிந்த உனக்கு அரசரைச்சார்ந்து நடக்கும் முறைமைதெரியாதோவென்றற்கு, மேல் 'பிரமமூர்த்தி' என்றும், இங்கு 'சுருதிவல்லாய்' என்றும் கூறினான். இங்கு, வழிபடுதல் - அரசரது குறிப்பின் வழியிற் சேர்ந்தொழுகுதல். என்குறிப்பின் வழிநடப்பதற்குரிய நீ யான் சொன்னவற்றை வெட்டிப்பேசுதல் தகுதியன்றென்பதாம். புல், நவை - ஒருபொருட் பன்

மொழி. 'புகன்றனரெனினும்' என்ற உம்மை -அங்ஙனம் அவர்புகலா ரென்பது பட நின்றது. நன்றன்றென்றுசொல்வதாயினும் பின்பு சமயம்பார்த்துத் தக்கபடிசொல்லவேண்டுமேயன்றி அப்பொழுதே மருத்துச்சொல்ல லாகாதென்பான் ஆங்கு என்றான். இன்னவை நன்று - பன்மையில் ஒருமை வந்த வழுவமைதி: பன்மை யொருமைமயக்கம்.'நன்று நன்று' என்ற அடுக்கு, உவகை பற்றியது.'நாளும்' என்பதில், உம்மை-தொறுப்பொருளது.மாந்தர்-பன்மைப் பெயர். ஶ்ருதி என்ற வடசொல்லுக்கு-(எழுதாக்கிளவியாய்க்குருசிஷ்யக்கிரமத்திலே கர்ணபரம்பரையாற்) கேட்கப்பட்டு வருவதென்றுபொருள்.

'இகழி னிகழ்ந்தாங் கிறைமகனென்று, புகழினு மொக்கப் புகழ்ப— இகன் மன்னன், சீர்வழிப்பட்டதே மன்பதை மற்றென்செய்யும், நீர்வழிப் பட்ட புணை'' என்ற நீதிநெறிவிளக்கம், இங்கு நோக்கத்தக்கது. (கஉஙு)

124.—மீண்டும் கங்கபட்டன் மறுத்துப்பேசுதல்.

(இ - ள்.) என்னவும்-என்று (விராடன் சினந்து) சொல்லவும்,—இருடி-முனிவனாகிய கங்கபட்டன்,—இடம் கொடாமல் - (அவன்கொள்கைக்குச்) சிறிதும் இணங்காமல் [தாழாமல்]—எதிர் உற-(அவன்வார்த்தைக்கு) மாறாக, மீண்டும் - மறுபடியும்,—'மன்னவ - அரசனே! கன்னன் - கர்ணனும், வில் துரோணன் - வில்லாசிரியனாகிய துரோணனும், மைந்தன் - அவன் மகனான அசுவத்தாமனும், காங்கெயன்-கங்காதேவியின் குமாரனான பீஷ்மனும், முதலினோரை - முதலிய வீரர்களை, நின் சேய் - உனது மகன் [உத்தரன்], வெல்ல வல்லனோ - சயிக்கமாட்டுவனோ? வந்து சொன்னால் - (அக்குமரனே) வந்து கூறினால், பின்னை - பின்பு, நீ—, பீடு உடை பேடி தன்னை - பெருமையையுடைய அப்பேடியை, தெளிதி-(போர்வென்றவனென்று) ஐயமறத்தெரிந்து கொள்வாய்', என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

பீடுடைப் பேடிதன்னைத் தெளிதி - பேடியின் பெருமையை யறிவாயென்றபடி. ருஷி, காங்கேயன் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. காங்கேயன் - கங்கையின் புத்திரன்:தத்திதாந்தநாமம். 'காங்கெயன் முதலினோர்' என்று பெரியோனான பீஷ்மனைத் தலைமையாக வெடுத்துக்கூறிக் குருகுலத்தவரனைவரையுங் குறித்தனன். (கஉச)

125.—விராடன் மிகக் கோபித்துக் கங்கபட்டனைக் கவறுகொண்டு அடித்தல்.

(இ - ள்.) மன்னன் - (அதுகேட்ட) விராடராசன்,—(கங்கபட்டனை நோக்கி), 'இன்று - இன்றைத்தினத்தில், என் குமரன் - எனது மகன், கொடு வில் ஆண்மையினால் - கொடிய விற்போர்த்தொழிலில் தனக்கு உள்ள திறமையினால், வென்றிடவும் - (பகைவரைச்) சயித்திருக்கவும், நீ—,சற்றும் நடு இலாதவரின் - சிறிதும் நடுவுநிலைமை யில்லாதவர்போல [பக்ஷபாதமுடையவர்போல], பல் கால் - பலமுறை, நவில்வது - (அதனை - இல்லையென்று மறுத்து என்மகனையிகழ்ந்து பேடியைப்புகழ்ந்து) பேசுவது, என் கொல் - என்னோ?' என்னா - என்று சொல்லி, கடு இல் ஆடு அரவின் பொங்கி - விஷத்திற்குஇருப்பிடமான படமெடுத்தாடுகின்றதொரு பாம்புபோலச் சீறி, வடு

இலா முனியை-குற்றமில்லாத அம்முனிவனை, வடு படும் ஆறு-தழும்பு படும்படி, கவற்றினால் எறிந்து - சூதாடுகருவியினால் வீசியடித்து, நக்கான் - சிரித்தான்; (எ - று.)—மன் ஓ - ஈற்றசை.

விராடன் சீறுதற்கு, நஞ்சுள்ளபாம்பு படமெடுத்துச்சீறினாற்போலு மென உவமை கூறியவாறும். நடுவு நிலைமையாவது - பகைவர் அயலார் நண்பர் என்னும் மூன்று வகையாரிடத்தும் அறத்தின்வழுவாமல் ஒப்பநிற்கின்ற பக்ஷபாதமில்லாத நிலைமை. இத்தகைமையில்லாதவரியல்பு, ஒரு தலையாப்பேசுதல். கடுவில் ஆடு அரவின்-விஷத்தினாற் படமெடுத்தாடும் பாம்புபோல வென்றுமாம். கடு இல் - விஷமில்லாத என்று உரைப்பாரு முளர். சிரித்தது, வெகுளியினால். 'வடுவிலாமுனியை வடுப்படுமாறுஎறிந்து' என்றவிடத்து, விரோதாலங்காரங் காண்க: வடு - குற்றமும், தழும்பும். கொடுமை - வளைவுமாம். (கஉரு)

126.—கங்கபட்டனது நெற்றியி லிரத்தம் பொசிதலை விரதசாரணி பார்த்தல்.

(இ - ள்.) எற்றிய கவறு - (விராடன்) வீசியெறிந்த அச்சூதாடுகருவியானது, சென்று - போய், எதிர் உற இருந்த கங்கன் நெற்றியில் - எதிரில்வீற்றிருந்த கங்கபட்டனது நெற்றியில், வாசம் நிறைத்த குங்குமத்தின் சேற்றால் பற்றிய திலகம் போல - வாசனையை மிகுதியாக வீசுகின்ற குங்குமப்பூவின் குழம்பினால் இட்ட திலகம்போல (இரத்தம் பொசியும்படி), நெற்றி படுதலும் - தாக்கிப் பட்டவளவில்,—பாங்கர் நின்ற - பக்கத்தில்நின்ற, வற்றிய ஓடை அன்ன வனப்பினாள் - நீர்வறண்ட ஓடைபோன்ற [அலங்காரமில்லாத]அழகுள்ள வண்ணமகளாகிய திரௌபதி, மருண்டு கண்டாள்-(அதனை) வெருண்டு பார்த்தாள்; (எ - று.)

மருண்டுகாணுதல், முனி வடிவமாயுள்ள தன்கணவனை அரசன் புண்படுத்தியதனா லாகிய கவலையால். ஆபரணமணிதல் முதலியவற்றா லுண்டாகுஞ் செயற்கையழ கில்லாமையும், தன்கணவர் உருக்கரந்து அடிமைபூண்டிருத்தலா லாகிய வருத்தத்தாற் பொலிவிழந்திருத்தலும், அரசியுருவத்தை யொழித்துப் பணிசெய்பவள்வடிவத்தைக்கொண்டிருத்தலும்பற்றி, 'வற்றிய வோடையன்ன' என்றும், இயற்கையழகுடைமைபற்றி 'வனப்பினாள்' என்றுங் கூறினார். நெற்றி என்ற சொல் இரண்டனுள், முன்னது-இறந்தகால வினையெச்சம்; நெற்று-பகுதி: பின்னது - பெயர்ச்சொல். பாங்கர்=பாங்கு; மென்றொடர்க்குற்றியலுகரத்துக்கு அர் - போலி. குங்குமம், திலகம் - வடசொற்கள். திலகம் - நெற்றிப் பொட்டு. மருண்டு கண்டாள் - கண்டு மருண்டாள் என்று விகுதிபிரித்துக் கூட்டலுமாம். மருண்டு கண்டதற்குக் காரணம், மேலே விளங்கும். ஓடை-நீரோடுவதெனக் காரணக்குறி. (கஉசா)

127.—அவள் அவ்விரத்தத்தைத் துடைத்தல்.

(இ - ள்.) 'பார்த்திவன் - (விராட)ராஜனது, பல்கிய கிளையும் - மிகுதியான பந்துவர்க்கமும், தேசும் - ஒளியும், வாழ்வும் - வாழ்க்கையும், தாங்கள்

அல்கிய நகரும் - தாங்கள் (அஜ்ஞாதவாசமாகத்) தங்கியிருந்த அவ்விராட நகரமும், இன்றே அழியும் - (இக்கங்கபட்டனது இரத்தம் கீழே சிந்தினால்) இன்றைக்கே அழிந்துபோய்விடும்,' என்று - என்றுஎண்ணி அதனால்,அஞ்சியே கொல் - அச்சங்கொண்டதனாலேயோ?(அன்றி), நல்கிய நேயமே கொல்-(தன்கணவனாகிய அத்தருமபுத்திரனிடத்துத்தான்) வைத்துள்ள அன்பினாலேயோ? வண்ணம் மாது - வண்ணமகளாகிய திரௌபதி, நயனம் நீர் மல்க மல்க - (தன்) கண்களினின்றுநீர் மிகுதியாய்ப்பெருகப்பெருக,மல்கிய குருதி தன்னை மாற்றினாள் - (கங்கபட்டனதுநெற்றியினின்று) மிகுதியாய் வெளிப்பட்ட இரத்தத்தை (க் கீழேசிந்தவொட்டாமல்) துடைத்துப் போக்கினாள்.

நிரபராதியும் சாந்தமூர்த்தியும் நற்குண நற்செயல்களிற் சிறந்தவனும் முனிவடிவமாயுள்ளவனு மான தருமபுத்திரனை விராடன் சினந்து ஊறுபடுத்தியதனால் அவனது நெற்றியினின்று பெருகும் இரத்தம் கீழே சிந்துமாயின் அத்தீவினைப்பயனால் விராடனும் அவனதுநாடும் சுற்றத்தோடு அழிதல் கூடுமென்பதையும், தனதுமூத்ததமையனான தருமபுத்திரனை எவரேனும் புண்படுத்திக்குருதிசிந்துவித்தால் அவரை வேரோடழித்துவிடுவதென்று அருச்சுனன் விரதங்கொண்டுள்ளவனாதலால் அவனால் விராடனுக்குப் பேரழிவு நேர்தல் கூடுமென்பதையும் எண்ணித் திரௌபதி அஞ்சியதனாலும், தன்பிராண நாயகனாகிய அத்தருமபுத்திரனிடத்து அவள் தான்கொண்டுள்ள அன்பினாலும், அருகிலிருந்து கண்ணுற்ற பணிப்பெண்ணாகிய அவள் கண்ணுங் கண்ணீருமாய் விரைந்தோடிவந்து தருமனது நெற்றியினிரத்தத்தைக் கீழே சிந்தாதபடி தனது ஆடையினால் துடைத்தன ளென்ற கருத்தை இங்ஙனம் விகற்பவகையாற் கூறினார். (அருச்சுனன் இவ்வகை விரதமுடையனாதல்பற்றி அவனுக்கு ஜிஷ்ணுவென்று ஒருபெயர் வழங்கிய தென்பதை, "மட்டிலாவலி பெற்றுள்ளவானவர் முதலோரேனு, மிட்டமற்று திட்டிரப்பேரிறைவனையவமானித்தால், தொட்டவான் கணையாற்சென்னி துணிப்பதென்றிருக்குஞ் சொல்லாற், சிட்டுணுவென்று நாமஞ்செய்தனர் தெளிந்தமேலார்" என்ற நல்லாப்பிள்ளை பாரதத்தாலும் அறிக: மேல் வெளிப்பாட்டுச் சருக்கத்தில் "தன்னை நிகர்கிற்பவரிலாததனுவல்லோன், என்னை திருநெற்றியி லிகுத்தவடு வென்றான், மின்னையும்வெறுத்தொளிரு மேதகுநிறத்தாள், பின்னையவனுக்கு நிகழ்பெற்றியுரைசெய்தாள்," "உரைத்தபொழுதிப் பொழுதிவ்வூரெரி கொளுத்தித், தரைத்தலைவனைத் தலைதடிந்திடுவெலென்னா, விரைத்தடவரைப் புயன்வெகுண்டுவிலெடுத்தான், இரைத்துவரு கான்மகனு மெரிவிழிசிவந்தான்," "அனலுமுதுகானகமகன்று நெடுநாள்நம், நினைவுவழுவாமலிவனீழலிலிருந்தோஞ், சினமிகுதலிற்றவறுசெய்தன னெனப்போய், முனிதல் பழுதாகுமென முன்னவன்மொழிந்தான்" என வருஞ் செய்யுள்களிற் கூறும் விஷயமும் நோக்கத்தக்கது.)

கிளை-மரத்தைக் கிளைபோல ஒருவனைத் தழுவிநிற்கும் உறவினத்துக்கு உவமவாகுபெயர். தேசு - தேஜஸ் என்ற வடசொல்லின் சிதைவு. அரசனுக்கு ஒளி—"உறங்குமாயினு மன்னவன் றன்னொளி, கறங்குதெண்டிரைவையகம்

காக்குமால்" என்றபடி உறங்காநிற்கவும் தான் உலகங்காக்கின்ற அவனது தெய்வத்தன்மையும், தான் உயிர் வாழுங்காலத்து மிக்குத்தோன்றுதலுடைமையும், புகழுமாம். பார்த்திவன் என்ற வடசொல், பிருதிவியை யாளுபவனென்று பொருள்படும்; பிருதிவி - பூமி. நயனம் - வடசொல். மல்க மல்க - அடுக்கு, இடைவிடாமை குறிப்பது. வண்ணம் மாது - (விராடன்மனைவியாகிய சுதேட்டிணைக்கு) அலங்காரஞ்செய்யும் பெண். (கஉஎ)

128.—விராடன் கழிவிரக்கங்கொள்ளுதல்.

(இ - ள்.) அந்த வண்ணம் - அவ்வாறு, வண்ணம் காரிகை - வண்ணமகள், கண்ணின் நீர் மல்க - (தன்) கண்களினின்று நீர்பெருக, கலையால் - (தனது) ஆடையினால், மா முனிவன் சோரி - சிறந்தஅந்தக்கங்கமுனிவனுடைய இரத்தத்தை, மாற்றிய காலை - துடைத்த பொழுது, அண்ணலும் - பெருமையிற்சிறந்தவனான விராடராஜனும், ஐயுற்று - சந்தேகமடைந்து, எண்ணமும் செயலும் வேறு ஆய் - நினைப்பும் தொழிலும் வேறுபட்டு, 'என் செய்தோம் என் செய்தோம் - (ஆலோசனையில்லாமல்) என்ன தவறானகாரியஞ் செய்துவிட்டோம்! என்ன தவறானகாரியஞ்செய்துவிட்டோம்!!' என்று-என்று பலதரம் எண்ணி, தன்னை நொந்து - தன்னைத்தானே வெறுத்துக் கொண்டு, ஆங்கு-அப்பொழுது, அருஞ் சினம் பாவம் என்றான் - 'அடக்குதற்கு அரிய கோபம் கெட்டது' என்று பச்சாத்தாபப்பட்டான்; (எ - று.)

கலை - சேலை; இங்கு, முன் தானை. முனிவனது நெற்றியிற் பொசியும் இரத்தத்தை வண்ணமகள் துகிலால் துடைத்த தென்னவென்று விராடன் சங்கைகொண்டனன். 'எண்ணமுஞ் செயலும் வேறாய்' என்றது, இவ்வளவு காலமாய்க் கங்கபட்டனிடத்து வைத்திருந்த அன்போடுகூடிய மதிப்பாகிய நினைப்பும் இப்பொழுது கவற்றினாலெறிந்தகடுந்தொழிலும் ஒன்றோடொன்று ஒற்றுமையுடைய தன்றாகி யென்றபடி. 'என்செய்தோம்' என்ற அடுக்கு - இரக்கம்பற்றியது. பாவம் - பாபமென்ற வடசொல்லின் விகாரம். பாவி யென்றும்பாடமுண்டு: 'அருஞ்சினம் பாவி' என்றதை "அழுக்காறெனவொருபாவி" என்றாற்போலக் கொள்க. பண்பிற்குப் பண்பி யில்லையாயினும் தன்னையுடையவனை இம்மைமறுமை யிரண்டிலுங் கெடுக்கின்ற கொடுமை பற்றி, சினத்தை 'பாவி' என்றனரென்க; கொடியவனை 'பாவி' என்னும் வழக்கு இருத்தலால். (கஉஅ)

129.—மாலைப்பொழுதில் உத்தரன் நகர்க்கு மீளுதல்.

(இ - ள்.) அ இடை - அப்பொழுது, ஆதபன் - சூரியன், அத்தம் குன்றுக்கு அணியன் ஆக - அஸ்தமனகிரிக்குச் சமீபத்திற் சென்றவனாக [சாயங்கால மாகுஞ் சமயத்தில்],—வேந்தன் புதல்வன் - விராடராசனுடைய குமாரன் [உத்தரன்],—சேய் இடை எதிர் கொள் கொற்றம் சேனை மன்னவர்கள் சூழ - வெகுதூரம்வந்து தன்னை யெதிர்கொண்டு அழைத்துச்செல்லுகின்ற வெற்றியையுடைய சேனைத்தலைவர்கள் (தன்னைச்) சூழ்ந்துவர,—வீயிடை வரி வண்டு ஆர்க்கும் - மலர்களில் உடற்கோடுகளையுடைய வண்டுகள் மொய்த்து ஆரவாரிக்கப்பெற்ற, வியல் பெருங் காவு - அகன்ற பெரிய சோலையி

னின்று, நீங்கி போய் - புறப்பட்டுச் சென்று, இடை நெருங்கி - நடுவிடத்தைக் கடந்து நெருங்கி, அ புரத்தை சேர்ந்தான் - அந்தப்பட்டணத்தை யடைந்தான்; (எ - று.)

அ + இடை = ஆயிடை: செய்யுளிற் சுட்டுநீண்டவிடத்து உயிர்வர யகரந் தோன்றிற்று. அஸ்தம், ஆதபன் - வடசொற்கள். அத்தக்குன்று, மேற்றிசையில் மேல்கடலைச் சாரவுள்ள தெனப்படும். அத்தக்குன்று - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஆதபன் - எங்கும் நன்றாய்த் தபிப்பவன். தென்புறத்துப் பகை வென்று நிரைமீட்டுவந்தசேனை யென்பது பற்றி, 'கொற்றச் சேனை' என்றார். வரி - இசைப்பாட்டுமாம். வியல் - உரிச்சொல்; வியல் + பெரு = வியன்பெரு; சிறுபான்மை லகரம் வலிவர னகரமாயிற்று: "குறில் செறியா ல ள" என்னுஞ் சூத்திரத்து 'பிற' என்ற மிகையைக் காண்க. அப்புரம் - விராடபுரம். (கஉகூ)

130.—உத்தரன் வீதியில் உலாப்போதல்.

(இ - ள்.) (அங்ஙனஞ்சேர்ந்த உத்தரன்),—வெம் படைகள் - கொடிய ஆயுதங்கள், பரந்து மின்ன - பரவிப் பிரகாசிக்கவும், பல் இயம் - பலவகைவாத்தியங்களும், பணிலம் - வெற்றிச் சங்கத்தோடு, ஆர்ப்ப-ஆரவாரிக்கவும்,—சுரந்து மும் மதமும் பாயும் - ஊற்றெடுத்து [இடைவிடாமல்] மூன்றுவகை மதங்களும் பெருகப்பெற்ற, துதிக்கை வாரணங்கள் - துதிக்கையையுடைய யானைகள், சூழ - (தன்னைச்) சூழ்ந்துவரவும்,—புரந்தரன் நகரில் - தேவேந்திரனது பட்டணத்தில், காளம் புயல் வரும் ஆறு போல - கறுத்தமேகம் வருவதுபோல, உரம் தரு பேடி தன் தேர் ஊர - தனக்குவெற்றியைக்கொடுத்த பேடியாகிய பிருகந்நளை தனதுதேரைச் செலுத்த, வீதி உற்றான் - அந்நகரத்து வீதிகளின் வழியே சென்றான்; (எ - று.)

செல்வ வளச்சிறப்புப்பற்றி, விராடபுரத்துக்குத் தேவேந்திரனது அமராவதிநகரம் உவமை. இனிமையையும் மகிழ்ச்சியையும் விளைத்தலில், உத்தரன் வருதல் நீர் கொண்டகாளமேகம் வருதல் போலு மென்க. காளமேகத்தை உவமைகூறியதற்கு ஏற்ப, படைகளாகிய மின்னலும் வாத்தியமுழக்கமாகிய இடியும் யானைமதமாகிய மழையும் கூறின ரென்னலாம். உம்மை - முற்றுப்பொருளது. பரந்துமின்னுதல் - நெடுந்தூரமளவும் பிரகாசித்தல். அருச்சுனன் தான் வென்ற ஆண்மையை உத்தரனதாக அனைவரும் கருதும்படி தூது போக்கியமைபற்றி, 'உரந்தருபேடி' என்றார். காளப்புயல் என்பதை உவமையாகுபெயராக்கொண்டு, காளமேகம்போன்ற திருமாலினவதாரமாகிய உபேந்திரமூர்த்திப் பகைவென்றுவந்தாற்போல என்று பொருளுரைத்தலுமொன்று; விராடனதுமகனாகிய உத்தரன் வெற்றியோடு விராடபுரத்து வீதியில் வருதற்கு, இந்திரனது தம்பியாகிய உபேந்திரன் பகைவென்று இந்திரநகரத்துவீதியில் வருதல்ஒப்புமையென்க. புரந்தரன் - பகைவரது நகரங்களை அல்லது உடம்புகளை அழிப்பவன்; வடசொல்: புரம் - ஊரும், உடலும். (கங०)

131.—விராடன் எதிர்கொண்டு உத்தரனைத் தழுவுதல்.

(இ - ள்.) வென்று மீள் குமரன் தன்னை - பகைவென்று மீண்டுவருகின்ற இளமகனாகிய உத்தரனை, வீதிகள் தோறும் - (அவன் செல்லுகின்ற விராடபுரத்து) வீதிகளிலெல்லாம், மாதர்- (அந்நகரத்து மாளிகைகளிலுள்ள) மகளிர்கள், அன்று - அப்பொழுது, எதிர்கொண்டு - எதிர்கொண்டு சென்று, நல் நீராசனம் எடுத்து வாழ்த்த - நல்ல மங்களவாலத்தி யெடுத்துச் சுழற்றி வாழ்த்தாநிற்க,—அவன் பிதாவும் - அவனது தந்தையாகிய விராடனும்,— குன்று எறிந்தவனை-கிரௌஞ்சகிரியை (வேல்கொண்டு) பிளந்திட்ட (தனது இளையகுமாரனான) சுப்பிரமணியனை, கண்ட - பார்த்த, குன்றம் வில்லியை போல் - மகாமேருகிரியை வில்லாகக்கொண்டவனாகிய சிவபிரானைப்போல, முந்த தேர்மேல் சென்று - விரைவாகத் தேரின்மீது (ஏறி எதிர்கொண்டு) சென்று, சிக்கென தழீஇக்கொண்டான் - (அவ்வுத்தரனை) இறுகத்தழுவிக் கொண்டான்; (எ - று.)

உத்தரனது தந்தையாகிய விராடனுக்கு முருகக்கடவுளின் தந்தையாகிய சிவபிரானும், வெற்றிபெற்று மீண்ட இளையகுமாரனான உத்தரனுக்கு அம்மனமாகிய முருகக்கடவுளும் ஒப்புமை யெனக் காண்க. எதிர்கொண்டு, நீராசனமெடுத்து வாழ்த்த, தழீஇக்கொண்டான் என்பவற்றிற்கெல்லாம் 'குமரன் தன்னை' என்றது - செயப்படுபொருள். நீராஜநம்-வடசொல்; இது, திருஷ்டி தோஷங்கழிதற்பொருட்டுச் சுழற்றுவது: சுண்ணாம்புகலந்த மஞ்சள் நீரை ஒரு தட்டிற்கொண்டு அதன் நடுவிற் கர்ப்பூரமேற்றிவைத்து அதனை எடுத்து மங்களகரமான மாதர்கள் விசேஷகாலங்களில் ஒருவர்க்குச் சுழற்றுதல் மரபு. வில்லி என்றதில், இ - ஆண்பாற் பெயர்விகுதி. குன்று என்ற பொதுப் பெயர், சந்தர்ப்பத்தினால் கிரௌஞ்சமும் மேருவுமாகிய சிறப்புப்பொருளைக் குறித்தது.

குன்றெறிந்த கதை:—சூரபதுமன் முதலிய கொடிய அசுரர்களை அழித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்த தேவர்களது வேண்டுகோளுக்கு இரங்கிய சிவபிரானால் உண்டாக்கப்பட்ட இளையகுமாரனான முருகக்கடவுள் அவ்வசுரர்களையழித்தற்பொருட்டுப் படையெடுத்துத் தேவர்களுடனே சூரபதுமனது மகேந்திர நகரத்தை நோக்கிச் செல்லும் வழியிடையே வானுறவோங்கிய கிரௌஞ்சகிரியைக் கண்டு தேவர்கள் திகைத்திடுதலும், நாரதமுனிவன் கூறியதனால் அம்மலையில் ஒருசார் மாயமாபுரியிலே சூரபதுமனதுதம்பியான தாரகன் பல அசுரசேனையுடனே யிருத்தலையறிந்து, முருகக்கடவுள் தனக்குத் தம்பிமுறையாகின்ற வீரவாகுவைச் சேனையோடு போர்க்கு அனுப்ப, தாரகாசுரனும் சேனையுடன்வந்து போர்செய்கையில், அசுரர்கள் அழிந்திட, யானைமுகமுள்ள அத்தாரகாசுரன் கடும்போர்புரிந்து சுப்பிரமணிய பரிவாரமான பூதகணங்களை யழித்து முடிவில் முன் நிற்கமாட்டாமல் அம்மலையில் ஒரு குகையிலே ஒளித்தனனாக, தொடர்ந்துசென்ற வீரவாகு முதலியோர் பலர் அக்குகையினுள்ளே அம்மலையின் மாயையால் மயங்கிக்கிடக்க, தாரகன் போர்க்களம்புகுந்து பூதகணங்களை வருத்தித் துரத்த, இச்செய்திகளை நாரத

முனிவன் சொல்லக்கேட்டு முருகவேள் சேனையுடன்சென்று போர்செய்து அவ்வசுரனது துதிக்கையையுந் தந்தங்களையுந் துணித்து அவனதுசேனைகளை யழிக்கையில், அவன் அக்கிரௌஞ்சமலையுடன் கூடிப் பலமாயைகள்புரிய, ஆறுமுகமூர்த்தி வேலாயுதத்தையெறிந்து அம்மலையையும் அவ்வசுரனையும் அழித்து, மயங்கிக்கிடந்த தனது வீரர்களையெல்லாம் தனது திவ்விய சக்தியால் எழுப்பி யழைத்துக்கொண்டு அப்பாற்சென்றன னென்பதாம். அன்றியும், சிவபிரான் பரசுராமனுக்கும் சுப்பிரமணியனுக்கும் ஒருங்கு படைக்கல வித்தை பயிற்றுவித்தபின்பு அவர்கள் திறத்தைப் பரீக்ஷிக்கையில், பரசுராமன் அம்பெய்து கிரௌஞ்சகிரியைத் துளைக்க, குமாரமூர்த்தி தனது வேற்படையை அக்கிரியின்மீது எறிந்து அதனைப்பிளந்து தனது வேலின் திறத்தைக் காட்டின னென்ற வரலாறும் உண்டு.

சிவபிரான் மகாமேருமலையை வில்லாகக்கொண்டது, திரிபுரசங்கார காலத்தில்; அவ்வரலாறு வருமாறு:—தாரகாசுரனது புத்திரர்களாகிய வித்யுந்மாலி தாரகாட்சன் கமலாட்சன் என்னும் மூவரும் மிக்கதவஞ்செய்து மய னென்பவனால் சுவர்க்க மத்திய பாதாள மென்ற மூன்றிடங்களிலும் முறையே பசும்பொன் வெண்பொன் கரும்பொன்களால் அரண்வகுக்கப்பட்டு ஆகாய மார்க்கத்திற் சஞ்சரிக்குந்தன்மையுடைய மூன்றுபட்டணங்களைப் பெற்று, மற்றும் பல அசுரர்களோடு அந்நகரங்களுடனே தாம்நினைத்த விடங்களிற் பறந்துசென்று பல இடங்களையும் பாழாக்கிவருகையில், அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால், சிவபெருமான், பூமியைத் தேராகவும், சந்திரசூரியரைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்கு வேதங்களைக் குதிரைகளாகவும், பிரமனைச்சாரதியாகவும், மகாமேருவை வில்லாகவும், ஆதிசேஷனை நாணாகவும், விஷ்ணுவை வாயுவாகிய சிறகமைந்த அக்கினியை முனையாகவுடைய அம்பாகவும், மற்றைத்தேவர்களைப் பிறபோர்க்கருவிகளாகவும் அமைத்துக் கொண்டு யுத்தசன்னத்தனாய்ச் சென்று போர்செய்ய யத்தனித்துப் புன்சிரிப்புச்செய்து திருமாலாகிய அம்பையெய்து அவ்வசுரரனைவரையும் பட்டணங்களோடு எரித்தருளின னென்பதாம். 'குன்றவில்லி' என்ற பெயரினால், கல்லை வில்லாகவளைத்து அதுகொண்டு தொழில் செய்ய வல்லவ னெனச் சிவபிரானது மிக்கதிறமை விளங்கும். (கந௧)

132.—அரண்மனையிற் புகுந்த உத்தரன் கங்கபட்டனது நெற்றியில் வடுவைக்காணுதல்.

(இ - ள்.) (உத்தரகுமாரன்),—தழுவிய அரசன் தாளில் - (தன்னை) அணைத்துக்கொண்ட விராடராசனது பாதங்களில், தலை உற - தனது தலை படும்படி, வீழ்ந்து - விழுந்து (ஸாஷ்டாங்கமாக) வணங்கி,—வேந்தர் குழு இடை கொண்டு போக - அரசர் கூட்டம் (சுற்றிலுஞ்சூழ்ந்து (இடையிலே (தன்னை) அழைத்துக்கொண்டுபோக, கோயிலில் புகுந்த பின்னர் - அரண்மனையிற் சேர்ந்தபின்பு,—பழுது அறு வாய்மை - குற்றமற்ற உண்மைமொழி

களையுடைய, வேத பண்டிதன் - வேதம்வல்லவனாகிய கங்கபட்டனது, பாதம் - சீர்பாதங்களை, போற்றி-வணங்கி,—செழு மலர் வதனம் நோக்கி - செழுமையான செந்தாமரைமலர்போன்ற (அவனது) திருமுகத்தைப் பார்த்து, திரு நுதல் வடுவும் கண்டான் - (அம்முகத்திலே) அழகிய நெற்றியில் ஊறுபட்டிருத்தலையும் பார்த்தான்; (எ - று.)

கோயில்—கோ+இல்: அரசனது மாளிகை; அல்லது, தலைமையான மாளிகை: 'கோவில்' என வகரவுடம்படுமெய்பெற்று வரற்பாலது 'கோயில்' என யகரம் பெற்றது, இலக்கணப்போலி. தருமபுத்திரன் சத்தியவிரதனாதலால், அவனுக்கு 'பழுதறுவாய்மை' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. அந்தணவடிவங்கொண்டவனாதலால், தருமன் 'வேதபண்டிதன்' எனப்பட்டான். "பூவிற்குத் தாமரையே" என்றபடி எல்லாமலர்களினும் தாமரைமலர் மிகச்சிறத்தல்பற்றி, 'செழுமலர்' எனப்பட்டது. ஊறுபட்டிருக்கையிலும் முகச்சுளிப்புறாத பொறையுடைமை, 'செழுமலர்வதனம்' என்றதனால் விளங்கும். வீழ்ந்து புகுந்து பின்னர் என இயையும். வடுவும் என்ற உம்மை—இறந்தது தழுவிய எச்சம். (கஙஉ.)

133.—நிகழ்ந்த செய்தியை யறிந்து உத்தரன் உளம்வருந்துதல்.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) (அதுகண்ட உத்தரன்), 'திகழ்ந்த நின் நுதலின் - விளங்குகின்ற உனது நெற்றியிலே, ஊறு செய்தவர்-வடுப்படுத்தியவர், யார்கொல் - யாரோ?' என்ன - என்று (அக்கங்கபட்டனை) வினவியவளவில்,—நிகழ்ந்தமை - நடந்தசெய்தியை, தந்தை - தந்தையான விராடன், கூற - சொல்ல,—(கேட்டறிந்த உத்தரன்), நெஞ்சினால் - (தன்) மனத்தினால், தந்தை தன்னை - தன்பிதாவான அவ்விராடனை, இகழ்ந்தமை - வெறுத்ததை, நுவலும் போதைக்கு - சொல்லுமளவுக்கு, எல்லை இன்று - ஒருவரையறையில்லை; (அங்ஙனம் மிகவெறுத்தபின்பு உத்தரன்), 'இவனை போல - இம்முனிவனைப்போல, அமைவின் மிக்கோர் - பெருமையிற் சிறந்தவர், அகழ்ந்த நீர் ஆடை ஞாலத்து- (சகரசக்கரவர்த்திகுமாரர்களால்) தோண்டப்பட்ட கடலை ஆடையாகவுடைய [கடல்சூழ்ந்த] இந்நிலவுலகத்தில், ஆர் கொலோ-வேறு யாருளரோ? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

உறுவது ஊறு எனக் காரணக்குறி. போதைக்கு, ஐ - சாரியை. நீர் - கடலுக்கு, இலக்கணை. அமைவாவது - காரணம்பற்றியாவது, பேதைமையாலாவது ஒருவன் தமக்குக் குற்றஞ்செய்தவிடத்துத் தாமும் அவனுக்கு அதனைச்செய்யாது பொறுத்தல். மிகுதியாக இகழ்ந்தது - அம்முனிவனைத் தருமபுத்திரனென்று தானறிந்ததனாலும், "வென்றவன் பேடியே" என்று அவன் கூறியது உண்மையேயாக அதுபற்றி விராடன் அவனைச்சினந்து கவறுகொண்டெறிந்தது பெருந்தீங்காதலாலு மென்க. ஐம்பெருங்குரவரிலொருவனாகிய தந்தையைச் சொற்செயல்களால் வெறுத்தல் கூடாமையாலும், மனம் பொறாமையாலும், நெஞ்சினா லிகழ்ந்தான். பூமியைச்சூழ்ந்த கடலை, பூமியாகியபெண் உடுக்கும் ஆடை யென்றல், மரபு. (கஙங)

134.—உத்தரன் தந்தையும் தானுமாய்த் தருமனை வணங்கிச் சினந்தீர்த்தல்.

(இ - ள்.) 'சிறியவர் செய்த தீமை - சிறியோர்செய்ததீங்கை, செறுப்பது - வெறுத்துக் கோபிப்பது, பெருமை அன்று - பெருந்தன்மையன்று; பொறுப்பதே - (அதனைப்)பொறுத்துக்கொள்வதே, பெருமை - பெருந்தன்மையாம்,' என்று - என்றுசொல்லி, வெறுப்பது விளைத்த தாதை வீழ்ந்தபின் தானும் வீழ்ந்து பூசுரன் பாதம் போற்றி - வெறுக்கத்தக்க [தீய] காரியத்தைச் செய்த தந்தையான விராடன் (கங்கபட்டனது பாதங்களில்) விழுந்து நமஸ்கரித்தபின்பு (மைந்தனாகிய) தானும் அந்தணனாகிய அக்கங்கபட்டனது பாதங்களில் வீழ்ந்து வணங்கி,—மறுப்பது புரியா ஞானி - (சரணமடைந்தவரது வேண்டுகோளைத்) தடுத்தல் செய்யாத தத்துவஞானமுடையவனான அம்முனிவனது, மனம் துனி-மனத்திலடங்கிய சிறுகோபத்தையும், அகற்றினான் - போக்கினான்; (எ - று.)

"சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம், பெரியோராயிற் பொறுப்பது கடனே" என்றார் பிறரும். சிறியவர் - அறிவாலும் ஒழுக்கத்தாலும் பிராயத்தாலும் சிறியவர். பூஸுரன் என்ற வடசொல்லுக்கு - (பிரமதேஜசினால்) பூமியில் தேவன்போலவிளங்குபவனென்பது பொருள். பிறர்வேண்டுகோளுக்கு இசையாமல் மறுதலிக்குங் குணம் இயல்பிலேயே யில்லாதவனென்பார், 'மறுப்பது புரியாஞானி' என்றார்; இத்தொடர்க்கு - எவராலும் தடுக்கவொண்ணாத கல்வியறிவுடையவனென்ற பொருளும் அமையும். சிறியவர்செய்ததீமை - இடைநிலைத்தீவகம். (கூ௩௪)

135.—உத்தரகுமாரனைக்கண்டு சுதேட்டிணை மகிழ்தல்.

(இ - ள்.) ஆன்று அமைந்து அடங்கு கேள்வி - மிக நிறைந்து அடங்கியிருக்கின்ற நூற்கேள்வியையுடைய, அண்ணலும் - பெருந்தன்மையிற் சிறந்தவனான உத்தரனும், அவனை பெற்ற தோன்றலும் - அக்குமாரனைப்பெற்ற தந்தையான விராடராசனும், பின்னர் - பின்பு, சுதேட்டிணை கோயில் - சுதேஷ்ணைவாழ்கின்ற அந்தப்புரத்துக்கு, சென்று எய்த - போய்ச்சேர,—தவத்தின் மிக்காள் - தவத்தினால் மிக்கவளாகிய அவள், சான்ற தன் மகனை கண்டு - வெற்றியாற்சிறந்த தனது குமாரனைப் பார்த்து, ஈன்ற அ பொழுதின் ஓகை எண் மடங்கு ஆக விஞ்ச - தான் அப்பிள்ளையைப் பெற்றபொழுது அடைந்த மகிழ்ச்சியினும் (இப்பொழுதை) மகிழ்ச்சி எட்டுப்பங்கு அதிகமாகப் பெருகாநிற்க, மகிழ்ந்தனள் - சந்தோஷமடைந்தாள்; (எ - று.)

ஈன்ற பொழுதை மகிழ்ச்சி—"வயாவும் வருத்தமும் ஈன்றக் காலேவும், கவா அன் மகற்கண்டு தாய் மறந்தாஅங்கு" என்பதனாற் காண்க. புதல்வனை மடியிற்கண்ட பொதுவுவகையினும் சால்புடையனாகக்கண்ட சிறப்புவகை பெரிதாதலால், 'ஈன்றவப்பொழுதி னோகை யெண்மடங்காக விஞ்ச' என்றார்; "ஈன்றபொழுதிற் பெரிதுவக்குத் தன்மகனைச், சான்றோனெனக் கேட்டதாய்" என்றார் திருவள்ளுவரும். ஓகை - உவகையென்பதன் மரூஉ. எண்

மடங்கு என்றது - பலமடங்கு என்றபடி. ஆகவே, தாயுவகைக்கு அளவின்றென்றவாறும். இங்குத் தாய்க்குத் தவம்-இவ்வாறு நல்லறிவும் நல்லொழுக்கமுமுடைய குமாரனைப் பெறுதற்கு ஏற்ற நல்வினை. அடங்கு கேள்வி - அடக்கமுடையனாயிருத்தற்குக் காரணமான நூற்கேள்வி யெனினுமாம். ()

136.—பிருகந்நளை செய்தி.

(இ - ள்.) பேடி - பேடியாகிய பிருகந்நளை,—உத்தரன் - உத்தரகுமாரன், ஓடி - (முதலிற் பகைவர்சேனையைக்கண்டு) அஞ்சியோடி, தேர் ஊர - (பின்பு தன்வார்த்தையால் தெளிந்து) தேரையோட்ட, (தான்சென்றுபொருது), தன்னை நாடி - தன்னைக்கண்டமாத்திரத்திலே, ஒரு முனை ஆக - ஒரே துணிவாக, உத்தரிக்கமாட்டா - முன்நிற்கமாட்டாமற் போன, நரஅதிபர் - (துரியோதனன்முதலிய) அரசர்களது, பதாகை தூசும் - கொடிச்சீலைகளையும், கோடி உத்தரியம் பட்டும் - அவர்கள்மேலேதரித்திருந்த அனேகம் பட்டாடைகளையும், குழமகன் தனக்கு - (உத்தரைவைத்துக்கொண்டு விளையாடுகின்ற) பிரதிமைக்காக, நல்கி - (அலங்கரித்தற்பொருட்டுக்) கொடுத்து, உத்தரை தன்னோடும் - உத்தரையுடனே, பெற்ற தாய் பின்பு நின்றாள் - அவளையீன்ற தாயாகிய சுதேட்டிணையின் பின்புறத்தில் ஒதுங்கிநின்றாள்; (எ-று.)

இச்செய்யுளில் திரிபு என்னுஞ் சொல்லணி காண்க. கீழ் ௧௦௨ - ஆஞ் செய்யுளில் "மணிக்கொடித் தூசுந் தூசும், உ.த்தரைவண்டற்பாவைக் குடுத்துதற்கென்று கொய்தான்" என்று கூறியவர், அவற்றை அப்பிருகந்நளையாகிய அருச்சுனன் உத்தரைக்குக் கொடுத்த செய்தியைஇங்குக் கூறினர். குழமகன் - மரப்பாவை; இளமகன்போன்ற வடிவமமைந்ததென்று காரணப்பொருள் காணலாம். உத்தரன் தேரூர, ஓடி - (தான்) விரைந்து சென்று என்றுமாம். 'ஒருமுனையாக தன்னைநாடி - ஒரேதுணிவாகத் தன்னைக்குறித்துப் போர்க்குவந்து, உத்தரிக்கமாட்டா - (பின்பு) முன்னிற்கமாட்டாமற்போன என்றலும் அமையும். கோடி - புதுமையுமாம். நரஅதிபர்- மனிதர்க்குத்தலைவர்: தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர். உத்தரீயம் - மேலாடை; வடசொல். உத்தரியப்பட்டு. உத்தரீயமாகிய பட்டு, என இருபெயரொட்டுப் பண்புத்தொகை. நாணத்தால் மகளிர்பின்னே யொதுங்கிநிற்றல், பேடியரியல்பு. (௧௩௬)

137.—நிகழ்ந்தசெய்திகளை உத்தரன் ஏகாந்தத்தில் தந்தைக்குக் கூறத்தொடங்குதல்.

(இ - ள்.) சுந்தர கிரிகள் போலும் தோளினான் - அழகிய மலைகள்போன்ற தோள்களையுடையவனான உத்தரன்,—ஆங்கு - அப்பொழுது, தந்தையும் தானும் தனித்து இருந்து - விராடனுந் தானுமாகத் தனியிடத்தேயிருக்கையில், அடையலாரை - பகைவர்களை, முந்திய அமரில் சென்று - முற்பட்ட யுத்தகளத்திற் போய், முனைந்து - எதிர்த்து, போர் விளைத்த ஆறும் - யுத்தஞ்செய்த விதத்தையும், வந்தவர் சாய்ந்த ஆறும் - எதிர்த்துவந்த அரசர்கள் தோற்றுப்போன விதத்தையும், மணி நிரை மீட்ட ஆறும் - அழகிய பசுக்

கூட்டத்தை மீட்டுவந்தவிதத்தையும், தோன்றசொல்வான் - விளங்கச்சொல் பவனானன்; (எ - று.) — இதன் விவரத்தை, அடுத்த கவியிலுங் காண்க.

தனித்திருந்து சொல்வான் என இயையும். தமது அரண்மனையிற் பாண்டவர் இரகசியமாக அஜ்ஞாதவாசஞ்செய்திருந்தமையையும், அவர்களில் அருச்சுனனே இப்போர்வென்றன னென்பதையும் கூறுகின்றானாதலின், தனித்திருந்து கூறுபவ னானன். மணி நிரை - மணிகள்கட்டிய பசுக்களுமாம். ஸந்தாகிரி - வடமொழித்தொடர். 'சாய்ந்த ஆறு' என்றதில், மோகநாஸ்திரத்தாற் கீழேவிழுந்து கிடந்ததும் அடங்கும். கீழ் ௧௦௪-ஆஞ் செய்யுளில் "முடியடி படிக்கண் வீழ்த்தான்' என்றமை காண்க. இருந்து=இருக்க: எச்சத்திரிபு. ()

138.—மூன்றுகவிகள்-ஒருதொடர்: உத்தரன் விராடனிடத்துக் கூறியதைத் தெரிவிக்கும்.

(இ - ள்.) ஐய - தந்தையே! (பிருகந்நளை), உருப்பசி வெம் சாபத்தால் பேடி ஆன உருவம் ஒழித்து - (முன்பு) ஊர்வசியிட்ட கொடியசாபத்தாற் பேடியாய்க்கிடந்த செயற்கைவடிவத்தைப் போக்கி, அருச்சுனன் தன் உருவம் கொண்டு - அருச்சுனனாகிய தனது இயற்கைவடிவத்தை யடைந்து, பொருப்பு அனைய கவி துவசம் தேர்மேல் - மலைபோன்றதும் குரங்குக்கொடியுடையதுமான (தனக்குஉரிய) தேரின்மேலேறி, வண்ணம் பொரு சிலை தன் கரத்து ஏந்தி - அழகிய போர்க்கு உரிய தனது காண்டீவவில்லைத் தன்கையிலெடுத்துக்கொண்டு, புகுந்த போது - (போர்க்களத்திற்) பிரவேசித்தபொழுது, அணி ஆகி நின்ற வேந்தர் - படைவகுத்து வந்து நின்ற பகையரசர்கள், செரு புரவி இரவி எதிர் திமிரம் போல - போர்செய்யவல்ல குதிரை பூண்ட (தேரையுடைய) சூரியனை யெதிரிற்கண்ட இருள் போலவும், திறல் அரி ஏறு எதிர் கரியின் திறங்கள் போல - வலிமையுடைய ஆண்சிங்கத்தை யெதிரிற்கண்ட யானைக்கூட்டங்கள் போலவும், நெருப்பு எதிர்ந்த பதங்கம் போல் - விளக்கையெதிர்த்த விட்டிற்பறவைகள்போலவும், நிரை போக்கி அழிந்தார்-(அவ்வருச்சுனனைக் கண்டமாத்திரத்தில்) தாம் கவர்ந்த நிரையைப் போகவிட்டுத் தோற்றோடிப்போனார்கள்; (எ - று.)

இப்பாடலால் அருச்சுனனே பிருகந்நளையென்ற பேடியாயிருந்தமையையும், அவனைக் கண்டதும் பகைவர் நிரையை விட்டுவிட்டுத் தோற்றோடினமையையுங் கூறுகின்றான். அருச்சுனனைக்கண்டதும் அழிந்த பகையரசர்க்குச் சூரியனைக்கண்ட இருளையும், அரியேற்றைக்கண்ட கரியையும் விளக்கைக் கண்ட விட்டிலையும் உவமைகூறினன்; உவமையணி. உருப்பசி - ஊர்வசீ என்ற வடசொல்லின் சிதைவு; அப்பெயர் - தொடையினின்று பிறந்தவளென்று பொருள்படும்: ஊரு-தொடை. நாராயணமுனிவரது தொடையினின்று பிறந்தவ ளாதலால், இவள் இப்பெயர் பெற்றனள். குருசிஷ்யக்கிரமத்தை உலகத்தார்க்கு உணர்த்துதற்பொருட்டு விஷ்ணுவின் அம்சமாய்க் குருவும் சிஷ்யனுமாகத் திருவவதரித்த நாராயணன் நரன் என்ற முனிவர்கள் பதரிகாச்சிரமத்தில் தவஞ்செய்துகொண்டிருக்கையில் இந்திரனேவலால் அப்ஸரஸ்

ஸ்திரீகள்பலர் அங்குவந்து தங்களுடைய மேனிமினுக்கினாலும் ஆடல் பாடலாதி விநோதங்களாலும் அவர்களுடைய தவத்துக்கு இடையூறுசெய்யத் தொடங்க, அதனாற் சிறிதுங்கலங்காத அவர்களுள் நாராயணமுனிவர் அம்மகளிரை அவமானப்படுத்தக்கருதித் தமது தொடையினின்று ஒருகட்டழகியைச் சங்கற்பத்தா லுண்டாக்க, அவளது ஒப்புயர்வற்ற திவ்விய சௌந்தரியத்தை நோக்கி அத்தேவமாதர்கள் மிகவெள்கி அவளையே தங்கட்குத் தலைவியாகக் கொண்டு அவளுடன் தமது உலகத்துக்குச்சென்றன ரென்பது வரலாறு; அவளே ஊர்வசி. கபி, ரவி, ஹரி என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. ஹரி - (யானைமுதலியவற்றை) ஹரிப்பது; ஹரித்தல் - அழித்தல். போக்கி அழிந்தார் - அழிந்துபோக்கினர் என விகுதிபிரித்துக் கூட்டுக.

இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவு முள்ள நான்குகவிகள் - பெரும்பாலும் ஒன்று இரண்டு ஐந்து ஆறுஞ்சீர்கள் காய்ச்சீர்களும், மற்றை நான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடிநான்கு கொண்ட எண்சீராசிரிய விருத்தங்கள். (கஙஅ)

139.—(இ - ள்.) வேந்தே-அரசனே! உனக்கு உயிர் நண்பு ஆகி-உனக்கு உயிர்போன்ற சிநேகிதனாய், அருகு விடாது - (உன்) சமீபத்தை விடாமல் [எப்பொழுதும் உனது அருகில் இருந்துகொண்டு], நீதி அறம் உரைப்போன்-நியாயங்களையும் தருமங்களையும் (அப்பொழுதைக்கப்பொழுது) எடுத்துச் சொல்லி வருகின்றவனான கங்கபட்டன், அறத்தின் மகன் ஆகவேண்டும் - தருமபுத்திரனாக இருத்தல்வேண்டும்; மரு மலரும் - நறுமணமுள்ள மலர்களையும், மான்மதமும்-கஸ்தூரிப்புழுகையும், துறந்த-இழந்திருக்கின்ற, கூந்தல் - கூந்தலையுடைய, வண்ணம் மகள் - அலங்காரஞ்செய்யும் பணிப்பெண்ணாகிய விரதசாரணி, பாஞ்சாலன் மகளே போலும் - பாஞ்சாலதேசத்தரசனான துருபதனுடைய மகளாகிய திரௌபதிபோலும்; வெருவரும் மல் போர் கடந்த - அஞ்சத்தக்கமல்லயுத்தத்தில் (எல்லாமல்லரையும் வென்றுவந்தானொரு மல்லனைச்) சயித்த, மடையன்தன்னை - சமையற்காரனாகிய பலாயநனை, வீமன் என அயிர்க்கின்றேன்-வீமசேனனென்று உத்தேசிக்கின்றேன்; மா வலான் - குதிரைத்தொழிலில் வல்லவனான தாமக்கிரந்தி, மற்றை இருவரினும்-மற்றைப் பாண்டவர்களிரண்டுபேரினும், நகுலன் தானே - நகுலனாகவேண்டும்; இன் நிரையின் காவலான் - அழகிய பசுக்கூட்டங்களைக் காத்தல்வல்லவனான தந்திரிபாலன், இளைய கோவே - (ஐவருள்) இளையவனாகிய சகாதேவனே யாகவேண்டும்; (எ - று.)

இதனால், மற்றைப்பாண்டவரும் திரௌபதியும் இன்னாரின்னா ரென்று உத்தரன் தெரிவிக்கின்றான். நண்பு-நண்பனுக்குப் பண்பாகுபெயர். அறம்-தருமக்கடவுளாகிய யமன். 'அறமுரைப்போ னறத்தின்மகன்' என்றதில், தந்தையின் தகுதிக்கு ஏற்றபடி மைந்தனும் அறநெறிதேர்ந்தவ னென்றது விளங்கும். மான்மதம் - கஸ்தூரியென்னும் மானினது கொழுப்பு: வடமொழியில் ம்ருகமத மெனப்படும். திரௌபதி தன்னைத் துரியோதனன் துச்சாதன

னைக்கொண்டு தலைமயிர் பிடித்திழுத்துச் சபையிற்கொணர்ந்து துகிலுரிந்தும் தன் மடிமேலுட்காரென்று சொல்லியும் பங்கப்படுத்தியபொழுது 'துரியோதனுதியர் நூற்றுவரையுங் கொன்று வெற்றி முரசறைந்தாலன்றி யான்விரித்த கூந்தலை யெடுத்து முடித்து அலங்கரிப்பதில்லை' என்று சபதஞ்செய்து அங்ஙனமே தலைவிரிகோலமாயிருத்தலால், 'மருமலரு மான்மதமுந் துறந்த கூந்தல் வண்ணமகள் பாஞ்சாலன் மகளேபோலும்' என்ருன்; ஆகவேண்டும், போலும், அயிர்க்கின்றேன் என்றவை - ஊகித்தற்பொருளன. 'என அயிர்க்கின்றேன்' என்றதைப் பின்னிரண்டுவாக்கியங்கட்குங் கூட்டுக.

பாண்டவர் அஜ்ஞாதவாசஞ்செய்கையில், ஆயிரம்மல்லர்சூழப் பெருமல்லனெருவன் விராடராஜசபைக்குவந்து மற்போரில் தன்னேடொப்பவரெவருமில்லையென்று செருக்கிப் பேச, அப்பொழுது அவ்வரண்மனையிலுள்ள மல்லரனைவரும் அரசன்கட்டளைப்படி அம்மகாமல்லனுடன் பொருதுதோற்றனராக, பிறகு கங்கபட்டன்சொன்னபடி விராடன் வீமனுகிய பலாயனனையேவ, அவன் மற்போர்பொருது அம்மல்லர்தலைவனை எளிதில் வென்றனனென்ற வரலாறு, கீழ் மற்போர்ச்சருக்கத்தில் விளக்கப்பட்டது. மற்போர் -உறுப்புக்களால் தாக்கி உடல் வலிமைகொண்டு செய்யும் போர். (௧௩௯)

140.—(இ - ள்.) ஆளையே அடும் களிற்ருர் - பாகனுனவனைக் கொல்லுந்தன்மையுள்ள யானைச்சேனையையுடையவரான பாண்டவர்கள், தம்மை—, யாரும் அறியாமல் - எவரும் அறியாதபடி, இ நகர்க்கண் - இந்த நகரத்தில், அடங்கினின்ருர் - (இதுவரையில்) மறைந்திருந்தார்கள்; நாளையே வெளிப்படுவர் - நாளைக்கே வெளிப்படுவார்கள்: நெருநலே - நேற்றே, தம் நாள் உள்ள கழிந்தன - தாம் கழிக்கவேண்டியனவாயிருந்த அஜ்ஞாதவாச தினங்கள் கழிந்துவிட்டன; நயந்து கேண்மோ - (யான் இப்பொழுது சொல்வதை) விரும்பிக் கேட்பாயாக: வேளையே அனைய - மன்மதனையேபோன்ற, எழில் - அழகையும், தோகை வாகை வேளையே அனைய - மயில்வாகனத்தையும் வெற்றிமாலையையுமுடைய முருகக்கடவுளையே போன்ற, விறல் - வெற்றியையுமுடைய, விசயன் என்னும் - அருச்சுனனுகிய, காளையே - வீரனே, அடியேனுக்கு இளைய - எனக்குத்தங்கையாகிய, காதல் கன்னிகைக்கு - அன்புமிக்க உத்தரைக்கு, வரன் - எற்ற கணவன், என்று—, கருதுவாய் - எண்ணுவாயாக; (எ - று.)

இதனுல், பாண்டவர்களைவரும் அஜ்ஞாதவாசத்தை இங்குக் கழித்தனரென்பதனையும், உத்தரையை அருச்சுனனுக்கு மணம்புரிவிக்கவேண்டுமென்றதையும் கூறுகின்ருன். மதயானை தனக்கு ஆவனசெய்து தன்னையடக்கியாளும் பாகன்மீது முன்பு தன்னை அவன் கடிந்தமைபற்றிக் கறுக்கொண்டு அவனைக் கொல்லுமியல்பினதாதலால், 'ஆளையே யடுங் களிறு' எனப்பட்டது. நால்வகைச்சேனையுள்ளும் "படைதனக்கி யானைவனப்பாகும்" என்றபடி சிறப்பதாகிய யானையைத் தலைமைபற்றி யெடுத்துக் கூறியது, மற்ற மூன்றுக்கும் உபலக்ஷணம். இனி, களிற்ருர் - யானைபோன்றவ

ரெனினுமாம்; கோபத்தை மறைத்தற்குரியகாலத்தே மறைத்து வெளிப்படுத் தற் குரியகாலத்தே வெளிப்படுத்துந் தன்மைக்கும், வலிமைக்கும், நடைக் கும், காம்பீரியத்துக்கும் உவமை. ஆளையே, வேளையே என்றவற்றில், ஏகா ரம் - உயர்வுசிறப்பு. நாளையே, நெருநலே, காளையே என்றவற்றில், ஏகா ரம் - தேற்றம். 'வாகை' என்ற மரத்தின்பெயர் - அதன் மலர்களாலாகிய மாலைக்கு இருமடியாகுபெயராம். வாகைப்பூமாலை, போரில் வென்றவர் சூடு வது. மூன்றுமடியில் 'வேளையே' என்ற சொல் வெவ்வேறுபொருளில் அடுத் துவந்தது, மடக்கு என்னுஞ் சொல்லணியாம். (கசo)

141.—இவைகேட்டு விராடன் மகிழ்தல் முதலியன.

(இ - ள்.) இவை - இவ்வார்த்தைகளை, மகன் - தன் புதல்வனான உத் தரன், உரைத்த அளவில் - சொல்லியவளவிலே, தாதை கேட்டு - அந்த உத் தரனது தந்தையாகிய விராடராசன்கேட்டு,மனம் நடுங்கி—,நெகிழ்ச்சியுடன்- மனத்தளர்ச்சியுடனே, மகிழ்ச்சி கூர்ந்தான் - சந்தோஷம் மிகப்பெற்றான்: பகல் அமரில் - பகற்பொழுதைய போரிலே, எறிய மெய் பராகம் - தன் னுடம்பிற் படிந்த புழுதி, மாற - போகும்படி, பகலோனும்-சூரியனும், புனல் படிவான் - நீராடுதற்கு, பரவை சேர்ந்தான் - (மேற்றிசைக்) கடலை யடைந் தான் [அஸ்தமித்தான்]; (அவ்விராத்திரியில்), தகவு உடைய பாண்டவரும் - பெருமையையுடைய பாண்டுபுத்திரரைந்துபேரும், வண்ணம் மாதும் - வண்ணமகளாகிய திரௌபதியும், தனித்து எண்ணி - தனியாக இருந்து இரகசியமாக ஆலோசித்து, பர காயசரிதர் போல - பரகாயப் பிரவேசஞ் செய்தவர்கள்போல, புகல் அரிய பழைய தம வடிவம் கொண்டார் - வருணித் துச் சொல்லுதற்கு அருமையாகவுள்ள பழமையான தங்களது நிசரூபத்தை யடைந்தார்கள்; போன பகலவன்-அஸ்தமித்த சூரியன், உதயம் பொருப்பில் மீண்டான்-திரும்பி உதயகிரியில் வந்தான் [உதித்தான்];(எ-று.)மற்று-அசை.

மிகச் சிறந்தவர்களாகிய பாண்டவர்களையும் திரௌபதியையும் தன் கீழ் அடங்கிய பரிவாரங்களாகக் கொண்டிருந்ததையும், தருமபுத்திரனைக் கவறு கொண்டு அடித்ததையுங் கருதி விராடன் மனநடுங்கினன். உரைத்தளவு - தொகுத்தல். நெகிழ்ச்சியும் - மனநடுக்கத்தாலானதே. மகிழ்ச்சி - பாண்ட வர் தன்னிடத்து வாழுமாறு தான் பாக்கியஞ்செய்திருந்ததைக் கருதியதனு லாகியது. மாலைப்பொழுதில் விளங்குகின்ற சூரியனது இயற்கைச் சிவப் பைப் பகற்பொழுதிற் போர்க்களத்தினின்று எழுந்த புழுதி படிந்ததனாலாகிய தாகவும், இயல்பில் அஸ்தமிப்பதை அப்புழுதி நீங்க மேல்கடலிற் குளிப்ப தற்குச்சென்றதாகவும் வருணித்தவாறும்; தற்குறிப்பேற்றவணி. பராகம், பரகாயசரிதர் - வடசொற்கள். பரகாயசரிதர் - தமது உடம்பை விட்டு வேறோ ருடம்பிற் புகுந்திருந்து மீண்டும் தமது உடம்பில் வருபவர்; இது, ஒருவகை யோகசித்தி: கூடு விட்டுக் கூடுபாய்தலெனப்படும். (கசக)

நிரைமீட்சிச் சருக்கம் முற்றிற்று.

---

ஐந்தாவது

# வெளிப்பாட்டுச்சருக்கம்.

(பாண்டவர் அஜ்ஞாதவாசத்தினின்று) வெளிப்பட்டதைக்கூறுஞ்சருக்க மென்பது பொருள். வெளிப்பாடு-வெளிப்படுதல்: முதனிலை திரிந்த தொழிற் பெயர்.

பாண்டவர் நிஜவடிவத்துடன் வெளிப்பட்டதும், அவர் தன்னிடத்திலிருந்ததை யுணர்ந்த விராடன் சிந்தைகொண்டு உத்தரனுடன் அப்பாண்டவரைப்பணிந்து பணிவுரைகூறியதும், உத்தரன் தன்தங்கை உத்தரையை அருச்சுனனுக்கு உரியாளென்ன அருச்சுனன் உத்தரையை மருமகளாகக் கொள்ளுவதாகக் கூறியதும், பாண்டவர் தமர்நண்பர்க்குத் தம் வெளிப்பாட்டைத் தூதர்முகமாகத் தெரிவித்ததும், க்ருஷ்ணன் முதலியோர் வந்ததும், க்ருஷ்ணன் சிவேதன்வரலாற்றைச் சொல்ல அந்தச்சிவேதன் தந்தையான விராடனடிபணிந்து அத்தந்தையின்மனமுவப்ப விருந்ததும், பாஞ்சாலர் முதலியோர் தானையுடன் வந்ததும், அன்னார் மனநோவுதீரத் தாம் விராடநகரத்து இனிதிருந்தமையைத் தருமன் தெரிவித்ததும், வந்த மன்னரிடம் தருமன் துரியோதனனுடைய செய்தியெல்லாம் நயமாகச்சொல்லிக்கொண்டிருந்த போது சல்லியன்வந்து தான் துரியோதனன் வஞ்சகத்துக்குட்பட்டுச் செஞ்சோற்றுக்கடனுக்காக அவனுக்கே துணையாவது சொல்லிச் சென்றதும், அபிமந்யுவுக்கும் உத்தரைக்கும் விவாகம்நடந்ததும், தாம் முன்னர் வன்னிமரத்துப் படைக்கலங்கள் சேமித்துவைத்திருந்தவற்றைப் பாண்டவர் மீண்டு கொண்டதும், பின்னர் உபலாவியநகரிற் புகுந்து போருக்கு ஆராய்தலுறுதலும் இதிற் கூறப்படுகின்றன.

### 1.—கடவுள்வணக்கம்.

எக்கடலு மெக்கிரியு மெவ்வுலகு முலகிற்
றக்கபல யோனிகள்ச ராசரம னைத்து
மிக்கவிதி யால்விதிசெய் விதியினைவி திக்குஞ்
செக்கமல நாபிமுகில் சேவடிது திப்பாம்.

(இ - ள்.) எ கடல்உம் - எல்லாக் கடல்களையும், எ கிரிஉம் - எல்லா மலைகளையும், எ உலகுஉம்-எல்லாவுலகங்களையும், உலகில் தக்க பல யோனிகள் சராசரம் அனைத்துஉம் - உலகிலே வாழ்கின்ற பலபிறவிகளைச்சேர்ந்த இயங்குதிணை நிலைத்திணையென்ற பொருள்கள்யாவற்றையும், மிக்க விதியால்-மேம்பட்ட வலிமைகொண்ட (அவ்வவ்வுயிர்களின்) விதியின்படி, விதி செய் - சிருஷ்டித்தொழிலைச் செய்கின்ற, விதியினை - பிரமதேவனையும், விதிக்கும் - சிருஷ்டிக்கவல்ல, செக் கமலம் நாபி-செந்தாமரை யுந்தியையுடைய, முகில் - மேகம்போன்ற திருநிறத்தவனான திருமாலின், சே அடி - செவ்வியதிருவடிகளை, துதிப்பாம்—; (எ - று.)

படைத்தற்கடவுளுக்கும் படைத்தற்கடவுளான பரம்பொருளின் சேவடியைத் துதிப்போ மென்றவாறு. அனுபவித்தே தீரவேண்டியிருத்தலால், 'மிக்கவிதி' என்றது: இனி, மிக்கவிதியால்-சிறந்தவேதவிதிப்படி யென்றலும் உண்டு. செக்கமலம் = செங்கமலம்: வலித்தல்.

முதற்பதினைந்துகவிகள்-ஈற்றுச்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் காய்ச்சீர்களுமாகிவந்த அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். (க)

2.—இரண்டுகவிகள்-மறுநாட்காலையில் தருமன்
திரௌபதியும் தம்பிமாரும் அருகுசூழ்தர, நிஜவடிவத்தோடிருத்தல் கூறும்.

அருக்கனடிகைதொழுதனந்தரமருக்க
னுருக்கருகவேயருணவுருவழகெறிப்பத்
திருக்கிளர்நலம்பெறுசெழுந்தெரிவையோடும்
குருக்குலம்விளங்கவருகோமகனிருந்தான்.

(இ-ள்.) அனந்தரம் - (சூரியனுதித்த)பிறகு, குருக்குலம் விளங்க வரு கோமகன் - (தன்னால்) குருகுலம் விளக்கத்தையடையுமாறுதோன்றிய ராஜகுமாரனாகிய தருமன்,—அருக்கன் அடி கைதொழுது - சூரியனுடைய திருப்பாதங்களை வணங்கி, அருக்கன் உரு கருக அருணம் உரு அழகு எறிப்ப- சூரியனுடைய செந்நிறவடிவும் (தன்வடிவுக்குமுன்னே) கருநிறமுடையதாகத்தோன்றும்படி செந்நிறவடிவம் அழகுவீசாநிற்க, திரு கிளர் நலம் பெறு செழுந் தெரிவையோடுஉம் - அழகுவிளங்குகின்ற நற்குணம் பூண்ட வளவிய பெண்ணாகிய திரௌபதியுடனே, இருந்தான்—; (எ - று.)

காலைச்சந்தி யனுஷ்டித்ததை, 'அருக்கனடிகைதொழுது' என்றனரென்னலாம். "பகலோனுதயப்பொருப்பின் மீண்டான்" என்று கீழ்வந்திருக்க, 'அனந்தரம்' என இங்கு வந்ததனால், சூரியனுதித்தபிறகு என்க. (உ)

3. காற்றின்மகனுங்கடவுளாதிதிருமகனு
மாற்றமுதிராயுண்மறைவானவர்மகாரு
மேற்றமுறையாலடியிறைஞ்சியிசையோடுந்
தோற்றமுறுமாறருகுசூழ்தரவிருந்தார்.

(இ - ள்.) காற்றின் மகன்உம் - வாயுபுத்திரனான வீமசேனனும், கடவுள் ஆதி திருமகன்உம் - தேவர்கட்குத்தலைவனான இந்திரனுடைய குமாரனான அருச்சுனனும், மாற்றம் முதிர் - புகழ்ச்சியுரை மிக்க, ஆயுள் மறை - வைத்தியசாஸ்திரத்திலே வல்ல, வானவர் - அசுவினிதேவர்களின், மகார் உம் - மக்களான நகுலசகதேவர்களும், ஏற்ற முறையால்-(தாம்தாம்) இருக்கவேண்டிய முறைப்படியே, அடி இறைஞ்சி - (அந்தத்தருமனுடைய) பாதங்களை வணங்கிக்கொண்டு, இசையோடுஉம் தோற்றம் உறும் ஆறு - கீர்த்தியுடனே விளங்குதல் பொருந்தும்படி, அருகு - (அந்தத் தருமனுடைய) சமீபத்திலே, சூழ்தர - சுற்றிலும், இருந்தார்—; (எ - று.) (ங)

4.—அருச்சுனன் 'உன்நெற்றியிற்காணும் வடுஏன்?' என்று தருமனை வினவ,
திரௌபதி நிகழ்ந்ததை யுரைத்தல்.

தன்னைநிகர்கிற்பவரிலாததனுவல்லோ
னென்னைதிருநெற்றியிலிருந்தவடுவென்றான்
பின்னையும்வெறுத்தொளிருமேதகுநிறத்தாள்
பின்னையவனுக்குநிகழ்பெற்றியுரைசெய்தாள்.

(இ - ள்.) தன்னை நிகர்கிற்பவர் இலாத தனு வல்லோன் - தன்னையொப்பவரைப்பெறுதவாறு வில்வித்தையில் தேர்ச்சிபெற்றவனான அருச்சுனன், (தருமனைநோக்கி), திரு நெற்றியில் இருந்த வடு என்னை என்றான் - '(உனது) அழகியநெற்றியிலே காணப்படும் தழும்பு எவ்வாறு வந்தது?' என்று வினவினான்; மின்னை உம் வெறுத்து ஒளிரும் மேதகு நிறத்தாள் - மின்னலையும் (தனக்கு ஒப்பாகாதுஎன்று) வெறுத்துத்தள்ளி [மின்னலினும் விளக்கம் பொருந்தி] விளங்குகின்ற மேம்பட்ட நிறத்தையுடையவளான திரௌபதி, பின்னை - பின்பு, அவனுக்கு - அந்தஅருச்சுனனிடம், நிகழ் பெற்றி - நடந்த நிகழ்ச்சியை, உரைசெய்தாள் சொன்னாள்; (எ - று.)

விராடனும் கங்கபட்டனென்ற தருமனுஞ் சூதாடுகையில் இருவர்க்கும் நடந்த பேச்சில் விராடன் வெகுண்டு கவறுகொண்டு மோதியது முதலியன நிகழ்ந்ததைக் கீழ் நிரைமீட்சிச்சருக்கத்தில் 120 - ஆம் பாடல்முதல் காணலாம். (ச)

5.—அருச்சுனனும் வீமனும் விராடன்மீது வெகுளி கொள்ளுதல்.

உரைத்தபொழுதிப்பொழுதிவ்வூரெரிகொளுத்தித்
தரைத்தலைவனைத்தலைதடிந்திடுவலென்னா
விரைத்தடவரைப்புயன்வெகுண்டுவிலெடுத்தா
னிரைத்துவருகான்மகனுமெரிவிழிசிவந்தான்.

(இ-ள்.) உரைத்த பொழுது-(நடந்த நிகழ்ச்சியைத் திரௌபதி)சொன்னபோது, தட வரை புயன் - பெரிய மலைபோலுந்தோள்களை யுடையவனான அருச்சுனன், விரை - விரைவுகொண்டு, வெகுண்டு - சினந்து, 'இ பொழுது - இப்போதே, இ ஊர் - இந்தவூரை, எரி கொளுத்தி - நெருப்பினாலெரித்திட்டு, தரை தலைவனை - மச்சதேசாதிபதியாகிய விராடனை, தலை தடிந்திடுவல் - தலைதுணித்துவிடுவேன்,' என்னா - என்றுசொல்லி, (அங்ஙனே செய்யுமாறு), வில் - விற்படையை, எடுத்தான் - கையிலெடுத்துக்கொண்டான்; இரைத்து வரு - ஒலிசெய்துகொண்டு வீசுந்தன்மையுள்ள, கால் - வாயுதேவனுடைய, மகன் உம் - புத்திரனான வீமசேனனும், எரி விழி - நெருப்புப்பொறிபறக்கப்பெற்ற கண்கள், சிவந்தான் - சிவக்கப்பெற்றான்.

கான்மகன் விழி சிவந்தான் - சினைவினை முதலொடுஞ் செறிந்தது. [நன்-பொது. 52.] விரை=விரைந்து: வினைப்பகுதி யெச்சப்பொருள் தந்தது: "வரிப்புனைபந்து" என்ற இடத்துப்போல. (ரு)

6.—இரண்டுகவிகள்-ஒருதொடர்: தருமன் சினந்த வீமார்ச்சுனரின் வெகுளியை நியாயவுரையால் தணித்தலைக் கூறும்.

ஒன்றுதவிசெய்யினுமவ்வுதவிமறவாமற்
பின்றையவர்செய்பிழைபொறுத்திடுவர்பெரியோர்
நன்றிபலவாகவொருநவைபுரிவரேனுங்
குன்றிடுவதன்றிமுதுகயவர்நினையாரே.

(இ - ள்.) ஒன்று உதவி செய்யின்உம் - (ஒருத்தர்) ஒருதவி செய்தாரே யாயினும், அ உதவி - அந்தஉபகாரத்தை, மறவாமல்-மறந்திடாமல், பின்றை-பிறகு, அவர்-அந்தஉபகாரஞ்செய்தவர், செய்-செய்த, பிழை-பலகுற்றத்தை, பெரியோர்—, பொறுத்திடுவர்—: மூது கயவர் - பழமையான கீழ்மக்கள், நன்றி - (ஒருவர்செய்த) உபகாரம், பல ஆக - மிகப்பலவாயிருக்க, (அந்த உபகாரஞ் செய்தவர்), ஒரு நவை புரிவர் என்உம் - ஒருகுற்றஞ் செய்வாரே யானாலும், (அன்னார்செய்த மிகப்பல நன்மைகளையும் மறந்து அவர்செய்த ஒருதீமைக்காக), கன்றிடுவது அன்றி - (அவர்மீது)கோபிப்பதே யன்றி, நினையார் - (அவர்செய்த நன்மையை) எண்ணிச் சாந்தமாக இருக்கமாட்டார்; (எ - று.)

நீங்கள் கயவர்தன்மையை மேற்கொள்ளாமல் பெரியோர் தன்மையை மேற்கொண்டு விராடன்செய்த பல நன்மைகளையெண்ணி என்நெற்றியில் வடுச்செய்த இந்தஒருதீமையை மறக்கவேணு மென்றபடி: இந்தச்செய்யுளில் பொதுவாகக் கூறி 'நீங்கள் சினம்மாறுதலே செய்யத்தக்கது' என்றசிறப் புப்பொருளைப் பெறவைத்தது - பிறிதுமொழிதலணியின்பாற் படும். விராடன்செய்தநன்மை, மேற்செய்யுளிற் பெறப்படும். (சு)

7. அனலுமுதுகானகமகன்றுநெடுநாணந்
நினைவுவழுவாமலிவனீழலிலிருந்தோஞ்
சினமிகுதலிற்றவறுசெய்தனனெனப்போய்
முனிதல்பழுதாகுமெனமுன்னவன்மொழிந்தான்.

(இ - ள்.) அனலும் - பற்றியெரியுந்தன்மையுள்ள, முது கானகம் - பழமையாகிய காட்டை, அகன்று - விட்டுநீங்கி, நெடு நாள் - (ஒருவருஷத்திற்குச்செல்லவேண்டிய) பல நாள்கள், நம் நினைவு வழுவாமல்-நம் எண்ணம் மாறுபடாமல் [நம்விருப்பின்படி], இவன் நீழலில் இருந்தோம்-இந்தவிராடராசனுடைய குடைநிழலில் தங்கியிருந்தோம்; (அப்படிப் பலநன்மைகளை யடைந்த நாம்), சினம் மிகுதலில் தவறு செய்தனன் என போய் முனிதல் - கோபம்முதிர்ந்ததனால் (என் நெற்றியில் வடுவையுண்டாக்குதலாகிய) ஒரு தவற்றைச் செய்தான் என்று (அவன்மீது) போய்க் கோபச்செயலைக் காட்டுதல், பழுது ஆகும் - தவறும், என-என்று, முன்னவன் - மூத்தவனாகிய தருமன், மொழிந்தான் - சொன்னான்; (எ - று.)

சினமிகுதலின் முனிதல் எனக் கூட்டி யுரைப்பினுமாம். அனலின் முதிர்கானகம் என்றும் பாடம். (எ)

8.—பாண்டவரின் வெளிப்பாட்டை யறிந்த விராடன் தன்மைந்தனோடும் நிறைப்பொருளோடும் பாண்டவர்பாதங்களில்வீழ்தல்.

குந்திவயின்வந்துதமகுருகுலம்விளக்கு
மைந்தாசுமன்றுதனகன்கடையிருக்கச்
சிந்தனையொடுந்நிறைகொள்செல்வநிதியோடு
மைந்தனொடுமெய்தியவர்மலரடியின்வீழ்ந்தான்.

(இ - ள்.) குந்தி வயின் வந்து - குந்திதேவியினுடைய வயிற்றிலே பிறந்து, தம குருகுலம் விளக்கும் - தங்களுடைய குருகுலத்தை விளக்குபவரான, ஐந்து அரசுஉம் - பாண்டவராசாக்கள் ஐந்துபேரும், அன்று - அப்போது, தன் அகன் கடை இருக்க - தன்னுடைய பரந்த இடத்திலே யிராநிற்க,—சிந்தனையொடுஉம்-கவலையுடனே, திறை கொள் செல்வம் நிதியோடுஉம் - (தான்) திறையிற்பெற்ற பொருட்செல்வத்தோடும், மைந்தனொடுஉம் - (தன்) புத்திரனான உத்தரனென்பவனோடும், எய்தி - (பாண்டவரிருக்குமிடத்திற்குப்) போய், அவர் மலர் அடியின் வீழ்ந்தான் - அந்தப்பாண்டவரின் தாமரைபோன்ற பாதங்களில் வீழ்ந்து கும்பிட்டான்; (எ - று.)

சிந்தனை - இந்தப்பாண்டவர் வேற்றுருவோடு நம்மிடத்துவசிக்கையில் அவர்களைப் பணியாளராகக்கொண்டு நடத்தினோமே என்பது கருதியதனாலாகியது: மேல் 13 - ஆங் கவியில் "மனனிடரகற்றி" என வருதல் நோக்குக. சிந்தனையென்றசொல் கவலையென்னும் பொருளில் வருதலை "சிந்தனை முகத்திற்றேக்கி" என்ற இடத்துங் காண்க. (அ)

9.—தருமன் விராடனைத் தழுவிப் புகழ்தல்.

விராடனைநறுங்குவளைமாலைவியன்மார்பிற்
றராபதியெழுந்தெதிர்தழீஇயினனிருத்திப்
பராவருபெரும்புகழ்படைத்தவருனைப்போ
லராவின்முடிமேலுலகிலார்கொலுளரென்றான்.

(இ - ள்.) தராபதி-பூமிக்கெல்லாந்தலைவனாகிய தருமன்,—எதிர்எழுந்து-எதிராக(த்தன் னிருக்கையினின்றும்)எழுந்திருந்து, விராடனை—, நறுங் குவளை மாலை வியன் மார்பில்-நறிய குவளைமலர்கொண்டுதொடுத்த மாலையையணிந்த (தன்) பரந்த மார்பிலே, தழீஇயினன் - தழுவினவனாய், இருத்தி - உட்காரவைத்து, (அவனைநோக்கி),—'உனை போல் - உன்னைப்போல், பராவரு பெரும் புகழ் படைத்தவர்-கொண்டாடத்தக்க மிக்க கீர்த்தியை யடைந்தவர், அராவின் முடிமேல் உலகில் - ஆதிசேஷனுடைய சிரசிலே தங்கியிருக்கின்ற இந்தஉலகத்தில், ஆர்கொல் உளர்-யாவரிருக்கின்றனர்?' என்றான்—; (எ - று.)

விராடன் தன்பாதங்களில் வீழவே, அதற்குஎதிராகத் தருமன் எழுந்து அவ்விராடனை மார்புறத் தழுவினன். (கூ)

10.—தன்னிடத்து வாழ்ந்தபோது நேர்ந்திருக்குங் குறையைப் பொறுக்குமாறு விராடன் பாண்டவரை வேண்டுதல்.

அறைமுரசுயர்த்தவனையவனுநனியையா
பொறையுடையவர்க்கலதுபுகழ்புனைதலுண்டோ
விறையமுதநற்குணமிலாதவரிடத்திற்
குறைதிருவுளத்தினிடைகொண்டருளலென்றான்.

(இ - ள்.) அறை - (குணில்கொண்டு) அடிக்கப்படுகின்ற, முரசு - முரசவாத்தியத்தை, உயர்த்தவனை-உயரவெடுத்த கொடியிலே கொண்டவனாகிய

தருமபுத்திரனைநோக்கி, அவன் உம்-அந்த விராடராசனும், 'ஐயா—!பொறை-பொறுமையை, நனி உடையவர்க்கு அலது - மிகுதியாகக் கொண்டிருப்பவருக்கு அல்லாமல், (மற்றையோர்க்கு), புகழ் புனைதல் - புகழை யணிவதென்பது, உண்டு ஒ - உண்டாகுமோ? இறை - சிறிதும், அமுதம் நல் குணம் இலாதவரிடத்தில்-அமுதம்போன்ற நல்லகுணமில்லாதவரிடத்திலேநேர்ந்த, குறை-குறையை, திருஉளத்தினிடை-(உனது)திருமனத்திலே, கொண்டருளல் - கொண்டருளவேண்டா,' என்றான் - என்று வேண்டிக்கொண்டான்.

"ஒறுத்தார்க்கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப், பொன்றுந்துணையும் புகழ்" என்றார், நாயனாரும். என்னிடத்துக்குறையைப் பொறுக்கவேண்டும் என்று நேரேகூறுதற்குக் கூசி, விராடன், தன்னைப் படர்க்கையாகவைத்துப் பேசுகின்றான்: இக்கருத்துப்பற்றியதே இது என்பது, மேற்கவியில் தருமன் கூறுவதால் விளங்கும். மூன்றாமடியில், அறிவு முதனற்குணமடாதவரிடத்தில் என்றும் பாடம். (கo)

11.—தருமன் விராடநகரத்தில் இனிதுறைந்தமை கூறல்.

இந்நகரிலெய்தியபினெத்துயருமெய்தா<br>
தெந்நகரியென்னநெடுநாளினிதிருந்தேஞ்<br>
செந்நெல்வயலூடுமுதுசேலுகளுநாடா<br>
நின்னினுமுயர்ந்ததமர்நீயறியவுண்டோ.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) செந்நெல் வயலூடு - செந்நெல்விளையும் வயலில், (நீர்வளத்தால்), முது சேல் உகளும்-பழமையான சேல்மீன்கள் தாவித் திரியப்பெற்ற, நாடா-மச்சநாட்டை யுடையோனே! இ நகரில் - இந்த நகரத்திலே, எய்திய பின்-வந்துசேர்ந்தபின்பு, எ துயர் உம் எய்தாது - எவ்வகைத்துன்பத்தையும் அடையாமல், எம் நகரி என்ன-எம்முடைய இந்திரப்பிரத்தநகரியிலே யுறைவதுபோல, நெடுநாள்-பலநாள்[ஒருவருஷகாலம்], இனிது இருந்தேம்-இனிதாக வசித்துவந்தோம்: நின்னில்உம் உயர்ந்த தமர் - உன்னைக்காட்டிலும் மேம்பட்ட சுற்றத்தார், நீ அறிய—, உண்டுஒ - உளரோ? (எ - று.)

நல்லோர்க்கு எந்தப்பொருளிலேனும் ஐயந்தோன்றியவிடத்து அவர் நெஞ்சேசான்று ஆகுமென்பவாதலால், 'நீயறியவுண்டோ' என்கின்றான். சென்னல்வயலூடு என்றும் பாடம். (கக)

12.—உன்னுடைய சேனைமுதலியவற்றின் துணையிருப்பின் பகைவெல்வேனென்று தருமன் கூறுதல்.

நின்புதல்வருந்திறல்வரூதினியுநீயு<br>
மென்புயமெனச்சமரிலென்னருகுமின்றால்<br>
வன்பினொடுவஞ்சனைசெய்மன்னர்படையாவுந்<br>
தென்புலமடைந்திடமலைப்பலிதுதிண்ணம்.

(இ - ள்.) நின் புதல்வர்உம் - உன்னுடையபுத்திரரும், திறல் வரூதினி உம் - வலிமையையுடைய சேனையும், நீயும்—, என் புயம் என - என்

தோள்போல், சமரில் - (இனி நேரப்போகின்ற) போரிலே, என் அருகு நின்றால் - என்சமீபத்திலே யிருந்தால், வன்பினொடு - வலிமையோடு, வஞ்சனை செய் - வஞ்சனையைச்செய்கின்ற, மன்னர் படை யாஉம் - (துரியோதனராசனைச்சேர்ந்த) மன்னவரின் சேனைகள்யாவும், தென் புலம் அடைந்திட - யமலோகத்தைச் சேரும்படி, மலைப்பல் - போர்செய்வேன்: இது—, திண்ணம் - நிச்சயம்; (எ - று.)

புதல்வர்என்றபன்மை - விராடனுடைய முதற்பத்தினியாகிய சுரதை யென்பவளிடத்துத்தோன்றிய சுவேதன் சங்கன் என்பவரோடு, இரண்டாம்மனைவியாகிய சுதேஷ்ணையென்பாளிடத்துத் தோன்றிய உத்தரனையும் குறித்தற்காக. (கஉ)

13.—விராடன் அவ்வுரைகேட்டு மகிழ, உத்தரன் கூறலுறுதல்.

எனமுரசுயர்த்தவனியம்புதலுமகிழா
மனனிடரகற்றினனம்மச்சவளநாடன்
றனயனுநமக்குறுதிதக்கதெனவெண்ணு
வினிமையொடறத்தின்மகனுக்கிவையிசைப்பான்.

(இ - ள்.) என - என்று, முரசு உயர்த்தவன் - முரசக்கொடியை உயரவெடுத்தவனாகிய தருமன், இயம்புதலும் - சொன்னவுடனே, அ மச்சம் வளம் நாடன் - அந்த மச்சநாட்டிற்கு உரியவனான விராடன், மகிழா - மனமகிழ்ச்சியடைந்து, மனன் இடர் அகற்றினன் - மனத்துயரத்தைப் போக்கினான்: தனயன் உம் - (அவனுடைய) குமாரனான உத்தரனும், 'தக்கது - (இந்தப்பாண்டவர்க்குத்) தகுதியாகஇருப்பது [உதவுவது], நமக்கு உறுதி - நமக்கு நன்மைதருவதாகும்,' என எண்ணு - என்றுநினைத்து, இனிமையொடு - மனமகிழ்ச்சியொடு, அறத்தின் மகனுக்கு - தருமபுத்திரனுக்கு, இவை இசைப்பான் - இவ்வார்த்தைகளைக் கூறலானான்: (எ - று.)—உத்தரன் உரைப்பவற்றை மேற்கவியிற் காண்க. (கங)

14.—உத்தரன் கூறியன.

எத்தரையுநீழல்செய்தனிக்கவிகையெந்தா
யித்தரையுநின்னதுநின்னேவலினர்யாமும்
பத்தரையொடீரரைகொள்பல்படையுநினவே
யுத்தரையும்வில்விசயனுக்குரியளென்றான்.

(இ - ள்.) (தருமபுத்திரனை நோக்கி உத்தரன்),—'எ தரைஉம் - பூமியெங்கும், நீழல் செய் - நிழலைச்செய்கின்ற, தனி கவிகை - ஒப்பற்ற வெண்கொற்றக்குடையையுடைய, எந்தாய் - எமது தந்தைபோன்றவனே! இ தரைஉம் - இந்தமச்சதேசமும், நின்னது - உன்னுடையதே: யாம்உம் - நாங்களும், நின் ஏவலினர் - உன் கட்டளையின்படி நடப்பவரேயாவோம்: பத்தரையொடு ஈர் அரை கொள் பல் படைஉம் - அறுவகைப்படையும், நினஏ - உன்னுடையனவே: உத்தரைஉம் - (என்னுடன் பிறந்தவளான) உத்தரை

யென்பாளும், வில் விசயனுக்கு - விற்போரில்வல்ல அருச்சுனனுக்கு, உரியள் - உரியவளாவள்,' என்றான் - என்று கூறினான்; (எ - று.)

அறுவகைப் படைகளாவன - நாட்டுப்படை காட்டுப்படை பகைப்படை துணைப்படை கூலிப்படை மூலப்படையென்பன. தரை - தரா என்ற வடசொல்லின்திரிபு: பூமியென்று பொருளுள்ள இச்சொல், அதன்ஏகதேசமாகியநாடுஎன்ற பொருளில் வந்தது: "மாயோன்மேய காடுறையுலகமும்" என்றஇடத்து உலகம் என்றதுபோல. (கச)

15.—அருச்சுனன் 'உத்தரை என்மகனுக்கு மனைவியாதற்கு உரியள்' எனல்.

வில்விசயனுத்தரன்விளம்புதலும்வீரங்
கல்விசெய்கலைத்திறன்வனப்புடையகாளா
யில்விசயமெய்க்குணனின்மிக்கவிளையாளென்
றொல்விசயமுற்றசுதனுக்குரியளென்றான்.

(இ-ள்.) உத்தரன் விளம்புதலும்-உத்தரகுமாரன் (இவ்வாறு)கூறவே,— வில் விசயன்—, (உத்தரகுமாரனைநோக்கி),—'வீரம்-வீரமும், கல்வி - படிப்பும், செய் கலை - செய்யப்படுகின்ற அறுபத்துநான்கு கலைத்தொழிலும், திறன் - வல்லமையும், வனப்பு-அழகும், உடைய—, காளாய் - இளமெருது போன்றவனே! இல் விசயம் மெய் குணனில் மிக்க இளையாள் - இல்லறத்திற்குஉரிய மேம்பட்ட உண்மையான நற்குணங்களாற் சிறந்த இளையவளான உத்தரை, என் - என்னுடைய, தொல் விசயம் உற்ற - பழமையாக வெற்றியையே பெறுதல்பொருந்திய, சுதனுக்கு - புத்திரனாகிய அபிமனென்பவனுக்கு, உரியள் - மனைவியாதற்குஉரியாள்,' என்றான் - என்று கூறினான்: (எ - று.)—எல்விசயமுற்றசுதன் என்றும் பாடம். (கரு)

வேறு.

16.—பாண்டவர் எல்லாத்திசையிலுமுள்ள சுற்றத்தார்க்குந் தம் செய்தியைத் தூதர்மூலமாகச் சொல்லியனுப்புதல்.

விசயன் றொகுத்து நயமாக விராடனெஞ்சுக்
கிசையும் படிசொற் றவரோடு மிருந்த பின்னர்
வசையின்றி வாழுந் தமராகிய மன்னர்க்கெல்லாத்
திசையுந் தமது செயறூதரிற் செப்பி விட்டார்.

(இ - ள்.) விசயன் - அருச்சுனன், தொகுத்து - சுருக்கமாக, நயம் ஆக - இனிதாக, விராடன் நெஞ்சுக்கு இசையும்படி - விராடன்மனத்துக்குப் பொருந்தும்படி, சொற்று - (உத்தரையை அபிமனுக்கு மணம்பாக்குதல் முதலியவற்றைக் குறித்துச்) சொல்லி, அவரோடுஉம் இருந்த பின்னர் - அந்தவிராடன்முதலியவரோடும் சேர இருந்தபிறகு,— (அப்பாண்டவர்),— வசை இன்றி - குற்றமில்லாமல், வாழும் - வாழ்பவராகி, தமர் ஆகிய-தமது சுற்றத்தாராகிய, மன்னர்க்கு-அரசர்பொருட்டு, எல்லாம் திசைஉம்-எல்லாத்திக்குக்களிலும், தமது செயல்-(வெளிப்பட்ட) தமதுவரலாற்றை, தூதரின் - தூதர்மூலமாக, செப்பி விட்டார் - சொல்லியனுப்பினார்கள்; (எ - று.)

இதுமுதற் பதினேந்துகவிகள் - பெரும்பாலும் மூன்றுஞ்சீரொன்று காய்ச்சீரும், மற்றையவை மாச்சீர்களுமாகிவந்த நெடிலடிநான்குகொண்ட கலிநிலைத்துறைகள். (கசு)

17.—பாண்டவரின் வேளிப்பாட்டையறிந்து ஸ்ரீக்ருஷ்ணன் தன்துணைவர்முதலியவரோடு பாண்டவருள்ள இடத்துக்கு வருதல்.

வெளிநின்றமாற்றம்வெளியானபின்வெண்டயிர்த்தண்
டுளிநின்றமேனித்துளவோன்றன்றுணைவரோடு
மளிநின்றமாலைபுனைதங்கையபிமனோடுந்
தெளிநின்றவேற்கைச்சிவேதன்னொடும்வந்துசேர்ந்தான்.

(இ - ள்.) வெளி நின்ற மாற்றம் - (பாண்டவர்) வெளிப்பட்டுவிட்டன ரென்ற சொல், வெளி ஆன பின் - வெளிப்பட்டபின்பு, வெள் தயிர் தண் துளி நின்ற மேனி - வெள்ளியதயிரின் தண்ணிய துளி தங்கப்பெற்ற திரு மேனியைக் கொண்டிருந்தவனாகிய, துளவோன்-திருத்துழாய்மாலைசூடுந் திரு மாலி னவதாரமாகிய ஸ்ரீ கிருஷ்ணன், தன் துணைவரோடும் - தன்னுடன் பிறந்தவரான பலராம சாத்தியகியருடனும், அளி நின்ற மாலை புனை தங்கை (யோடும்) - வண்டுகள் தங்கிநின்ற மாலையையணிந்த தங்கையான சுபத்திரை யோடும், அபிமனோடும் - (அவளுக்குப்புதல்வனான) அபிமனுடனும், தெளி நின்ற வேல் கை சிவேதன்னொடும் - தெளிவாகநின்ற [கூர்மையுள்ளதாய் விளங்குகின்ற] வேற்படையேந்திய கையையுடைய சிவேதனுடனும், வந்து சேர்ந்தான்—; (எ - று.)

ஸ்ரீக்ருஷ்ணன் குழந்தைப்பருவத்தில் நந்தகோபனில்லில் வளர்ந்த போது வெண்டயிர்த்தண்டுளி மேனியுடன் தோன்றின னென்க. மூன்ற மடியில், அளிநின்ற நெஞ்சிற் குருமைந்தராறுவரோடும் என்றும் பாடம். (கஎ)

18.—தருமபுத்திரன் முதலியோரைக் கண்டு மகிழ்ந்து ஸ்ரீக்ருஷ்ணன் அவரோடும் எண்ணிப் பல பேசுதல்.

கண்டான்மகிழ்ந்தானறன்மைந்தனைக்கைதழீஇயுங்
கொண்டானவன்றனிளையோர்கைகுவித்துவீழ்ந்தா
ரெண்டானவரோடிசைந்தெண்ணிப்புவனமேழு
முண்டானுரைத்தானுரைத்தக்கவுரைகளெல்லாம்.

(இ - ள்.) (வந்து சேர்ந்த ஸ்ரீக்ருஷ்ணன்),—அறன் மைந்தனை கண்டான் மகிழ்ந்தான் - (வனவாச அஜ்ஞாதவாசங்களைச்செய்து கழித்து வெளிப்பட்ட) தருமபுத்திரனைக் கண்டு மகிழ்ந்தான்: கை தழீஇயும் கொண்டான் - (தன்) கைகளால் தழுவியும் அணைத்தான்: அவன்தன் இளையோர் - அந்தத்தருமனுடைய தம்பிமார், கைகுவித்து வீழ்ந்தார் - (ஸ்ரீக்ருஷ்ணனைக்) கைகூப்பி வணங்கித்தொழுதார்கள்: அவரோடு - அந்தப்பாண்டவ ரு

ரோடு,—புவனம் ஏழ்உம் உண்டான் - ஏழுலோகங்களையும் உண்டவனான திருமாலினவதாரமான ஸ்ரீக்ருஷ்ணன்,—எண் இசைந்து எண்ணி - ஆலோசனைகளை மனமொத்திருந்து ஆலோசித்து, உரைத்தக்க உரைகள் எல்லாம் உரைத்தான்-சொல்லத்தக்க வார்த்தைகளையெல்லாஞ் சொன்னான்; (எ - று.) —எண்டானவனேடியைபத்துஎன்று பிரதிபேதம். தான் - அசை. (௧அ)

### 19.—சிவேதன்செய்கையையெல்லாம் சொல்லி ஸ்ரீக்ருஷ்ணன் விராடன்கவலையைப் போக்குதல்.

சிவன்றன்னைநோக்கிச்சிவேதன்றவஞ்செய்தவாறு
மவன்றன்னருளாற்பலவாயுதம்பெற்றவாறு
மிவன்றன்பகைசெற்றதும்யாவுமியம்பியுள்ளங்
கவன்றன்புறுமன்விராடன்றன்கவற்சிதீர்த்தான்.

(இ - ள்.) சிவன் தன்னை நோக்கி - சிவபெருமானைக் குறித்து, சிவேதன் தவம் செய்த ஆறுஉம் - சிவேதன் தவஞ்செய்த விதத்தையும், அவன் தன் அருளால் - அந்தச் சிவபெருமானுடைய திருவருளினால், பல ஆயுதம் பெற்ற ஆறுஉம் - (இந்தச்சிவேதன்) பலபடைக்கலங்களைப் பெற்றவகையையும், இவன் தன் பகை செற்றதுஉம் - இந்தச்சிவேதன் தன்பகையை யழித்ததை யும், யாஉம் - எல்லாவற்றையும், இயம்பி - (விராடனிடம்) சொல்லி, (வெகு நாளாகச் சிவேதனது பிரிவினால்), உள்ளம் கவன்று - மனம்வருந்தி, அன்பு உறு - மனக்கசிவு கொள்ளாமலிருந்த, மன் விராடன் தன் - விராட மன்னவனுடைய, கவற்சி - துன்பத்தை, தீர்த்தான்—; (எ - று.)

சிவேதன் முன்னொருகாலத்தில் தேவலோகத்திற் போயிருந்தபொழுது ரிஷிகள் அவனை மயிலென்னும் பறவையாகும்படி சபித்து அவன்பேரெழுதிய அம்பொன்றை அவன்மேலெறிய, அதுபட்டவுடனே அவன் மயிலாகித் தந்தையாகிய விராடனிடம் வந்துசேர, அதனையறியாத அவன் கோபித்துத் துரத்திவிட, மைந்தன் பறந்துசென்று தவஞ்செய்து சிவபிரானருளாற் சாப விடைபெற்று வில்முதலிய ஆயுதங்களும் கவசங்களும் பெற்றனனென்பர். இவன்தன் பகைசெற்ற விவரம் தெரியவில்லை; ஒருசாரார் ஸ்ரீக்ருஷ்ணன் இந்தச்சிவேதனைக்கொண்டு தன்பகையை யொழித்துக்கொண்டானென்று பொருள்கூறுவர்; அதற்குஉரிய சரித்திரமும் தெரியவில்லை. அன்புறுமல் என்று பிரதிபேதம். (௧௯)

### 20.—தன் தந்தையின்தாளிற் சிவேதன் வீழ்ந்துபணிதல்.

தெம்மைந்தரென்னுங்களபங்களைச்சிங்கசாப
வெம்மைந்தின்வேறற்கமைந்தானொருவீரனான
தன்மைந்தனைக்கண்டுருகுந்திறற்றந்தைதாளி
லெம்மைந்தனும்வீழ்ந்துடன்வணங்கினனர்வமிக்கே.

(இ - ள்.) தெம் மைந்தர் என்னும் களபங்களை-பகைவீரராகிய யானைக் கன்றுகளை, சிங்கசாபம் வெம் மைந்தின் - சிங்கக்குட்டியின் வலிமைபோன்ற வெவ்விய வலிமையினால், வேறற்கு - வெல்லுதற்கு, அமைந்தான் - பொருந்தினவனாகி, ஒரு வீரன் ஆன - ஒப்பற்ற வீரனான, தன் மைந்தனை - தன் புத்திரனை, கண்டு—, உருகும் - உருகுகின்ற, திறல் - வலிமையையுடைய, தந்தை - தமப்பனாகிய விராடனுடைய, தாளில் - பாதங்களில், அ மைந்தன் உம் - அந்தப்புத்திரனாகிய சிவேதனும், வீழ்ந்து - பணிந்து, ஆர்வம் மிக்கு - அன்புமிகுந்து, உடன்வைகினன்-தந்தையுடனேசேர்ந்து தங்கினான்; (எ-று.)

மைந்து - வீரம், இளமை: அதனையுடையவன் - மைந்தன்: எனவே, வீரன், புதல்வன்என்ற பொருளைக் காட்டும். களபம் - யானைக்கன்று: ஸிம்ஹ ஶாவ:-சிங்கக்குட்டி: வடசொற்கள். "வெம்மைந்தின் வேறற்கமைந்தோரொருவீரான, தம்மைந்தரைக்கண்டுருகுந் தந்தையர்கடாளி, லம்மைந்தரும் வீழ்ந்துடன் வைகினரார்வமிக்கே" என்று ஒருபாடம் பதினேழாஞ்செய்யுளின் பாடபேதத்திற்கு ஏற்பக் காண்கின்றது. (உ௦)

21.—பாஞ்சாலர்முதலியோர் அங்குச் சேனையோடும் வருதல்.

பாஞ்சாலர்போசகுலமன்னவர்பாண்டிவேந்தர்
வாஞ்சாமனத்தின்வயமத்திரர்மாகதேயர்
பூஞ்சாபவெற்றிக்கொடிக்கேரளர்பொன்னிநாடர்
தாஞ்சால்புடனப்பதிவந்தனர்தானையோடும்.

(இ - ள்.) பாஞ்சாலர் - பாஞ்சாலர்களும், போசகுலமன்னவர் - போசகுலராஜாக்களும், பாண்டிவேந்தர் - பாண்டியமன்னவரும், வாஞ்சா மனத்தின் வய மத்திரர் - விருப்பங்கொண்ட மனத்தினையுடைய வலிய மத்திரதேசத்தாரும், மாகதேயர் - மகததேசத்தவரும், பூஞ் சாபம் வெற்றி கொடி கேரளர் - அழகிய வில்லை(த் தமது) வெற்றிக்கு அடையாளமாகக் கொடியிலேகொண்ட சேரதேசத்து மன்னவரும், பொன்னிநாடர் - சோழநாட்டு மன்னவரும், தாம் - (ஆகிய) இவர், தானையோடு உம் - சேனையுடனே, சால்புடன் - நிறைகுணத்தோடு, அ பதி வந்தனர்-(பாண்டவரிருந்த) அவ்விராடநகரத்து வந்து சேர்ந்தார்கள்; (எ-று.)

சால்பு - மனவமைதியுமாம். பொன்னைக் கொழித்துக்கொண்டு வருதலால், காவேரிக்குப் பொன்னியென்று ஒருபெயர். காவேரிபால் மிக்க வளம்பெற்றது சோழநாடேயாதலால் அது 'பொன்னிநாடு' எனப்படும். (உ௧)

22.—நாட்டில் நெடுநாள் வசிக்கலாயிற்றே என்று பாண்டவரைக்கண்டு வருந்திக் கூறும் நிருபர்க்குத் தருமன் கூறலுறுதல்.

வந்தோர்களையோடிருபாதம்வணங்கிவைகுங்
கந்தோடடர்கைக்கடுங்கோபக்களிற்றுவேந்த
ரந்தோநெடுநாளகன்கானிலடைந்திரென்று
நொந்தோரையாற்றுவல்வானந்குதிகொள்வேலான்'

(இ - ள்.) வந்து—, உவகையோடும் - சந்தோஷத்துடனே, இரு பாதம் வணங்கி - (தருமபுத்திரனுடைய) இரண்டு தாள்களிலே கும்பிட்டு, வைகும் - தங்கிய, கந்தோடு அடர் கை கடுங் கோபம் களிறு வேந்தர் - கட்டுத்தறியை யடர்க்கின்ற துதிக்கையையும் கொடியகோபத்தையுமுடைய களிற்றுப் படையையுடைய அரசராகி, 'நெடு நாள் அகல் கானில் அடைந்திர் - வெகு நாள் அகன்ற காட்டிலே தங்கிவசித்திரே: அந்தோ - ஐயோ,' என்று—, நொந்தோரை - மனம்வருந்தினவரை, ஆற்றி - சமாதானப்படுத்தி, அ நுதி கொள் வேலான்-அந்தக்கூர்மையான வேற்படையையுடைய தருமபுத்திரன், நுவல்வான்-(பின்வருமாறு)சொல்பவனானான்; (எ-று.)—தருமன்சொல்வதை மேலிற்கவியிற் காண்க. அடைந்திர்—அடைந்தீர். (உஉ)

23.—'விராடநகரில் ஒருவருஷம் வசித்ததனால் காட்டில் திரிந்த வருத்தமெல்லாம் நீங்கிற்று' என்று தருமன் கூறுதல்.

தேனிற்குளித்தசிறையம்புயச்சேக்கையன்னம்
வானிற்பறந்துபுலர்த்தும்புனன்மச்சநாடன்
வேனிற்சிலைவேள்விராடன்புரமேயவன்றே
கானிற்றிரிந்தபரிதாபங்கழிந்ததென்றான்.

(இ - ள்.) (தருமன்), 'அம்புயம் சேக்கை - தாமரைமலரைப் படுக்கையாகக்கொண்ட, அன்னம்—, தேனில்—, குளித்த - நனைந்த, சிறை - (தம்) இறகுகளை, வானில் பறந்து - (ஆகாயத்திலே) பறந்துபோய், புலர்த்தும் - உலர்த்துமாறு வளம்படைத்த, புனல் - நீரைக்கொண்ட, மச்சநாடன் - மச்ச நாட்டிற்கு உரியவனாகிய, வேனில் சிலை வேள் - வேனிற்காலத்தில் வில்லை யேந்திக்கொண்டு திரிபவனான மன்மதனையொத்த, விராடன் - விராடராச னுடைய, புரம் - பட்டணத்தை, மேய - வசிக்குமாறு பொருந்திய, அன்றே - அன்றைத்தினமே, கானில் திரிந்த - காட்டிலே (பன்னிரண்டியாண்டுகள்) திரிந்ததனாலான, பரிதாபம்-துன்பம், கழிந்தது-நீங்கிற்று,' என்றான்—;(எ-று.)

24.—தருமன் அரசர்களைநோக்கித் துரியோதனன் துராலோசனையால் தான் அழிந்தமை கூறி, நீவிரே களைகணெனல்.

பண்ணுக்குருகிப்பறையாலகப்பட்டமான்போன்
மண்ணுக்கிறைவன்மொழிதேறிமகன்செய்வஞ்ச
வெண்ணுக்கழிந்தேனினிச்செய்வதென்யாருநீவிர்
கண்ணுக்கிமைபோலிருந்தீர்களைகண்களாக.

(இ - ள்.) பண்ணுக்கு - (இனிய) சங்கீதத்தைக் கேட்டலால், உருகி - மனமுருகி, (உடனே), பறையால் - பறைகொண்டடித்தலால், அகம் பட்ட - (இருந்த) இடத்தில்தானே பிறந்திட்ட, மான்போல் (அசுணமென்னும்) மிரு கத்தைப்போல, மண்ணுக்கு இறைவன் - பூமிக்குத் தலைவனாகிய திருதராட் டிரனுடைய, மொழி-வார்த்தையை, தேறி-நம்பி, மகன்-அவனுடைய குமார

னான துரியோதனன், செய் - செய்த, வஞ்சம் எண்ணுக்கு - வஞ்சனையான ஆலோசனைக்கு, அழிந்தேன் - தோற்றுவிட்டேன்; இனிச் செய்வது என்—? நீவிர்யார் உம்-(நண்பரசரான) நீங்கள்எல்லீரும், கண்ணுக்கு இமை போல் களைகண்கள் ஆக இருந்தீர்-கண்களை இமைகள்காத்துஇருப்பதுபோல் (எங்களைக்காக்கும்) களைகண்களாக இருந்தீர்கள்; (எ - று.)

களைகண் - துன்பத்தைப் போக்கும்இடம்: எனவே, ஆதரவாயிருப்பது. "கண்களைக்காக்கின்ற விமையிற் காத்தனர்" என்ற அடி, இச்செய்யுளின் ஈற்றிலே காணத்தக்கது. இசையறிவிலங்காகிய அசுணமென்னுங் குறிஞ்சிநிலப்பிராணியைப் பிடிக்கக்கருதிய அந்நிலத்துமாக்கள் செழுமையுள்ள மலைச்சாரலிலே நிலாவிளங்கும் மாலைப்பொழுதிலே வேய்ங்குழல் முதலியவற்றால் இனியஇசையைப் பாட அச்சங்கீதத்தைக் கேட்டு ஆனந்தமடையவிரும்பி அந்தப்பிராணிகள் அருகில்வந்து அவ்வின்னிசையைச் செவியிலேற்றுப் பரவசப்பட்டிருக்கிற சமயத்தில் அக்கொலையாளர் பறைகொட்ட, அக்கொடிய ஓசையைக் கேட்டவுடன் அப்பிராணிகள் இறந்துபடும் என்பர்: அசுணமென்ற இதை மிருகமென்று ஒருசாராரும் பறவையென்று ஒருசாராரும் கூறுகின்றனர். பண்ணுக்குநல்கினென்று பிரதிபேதம். (உச)

25.—தருமன் துரியோதனனது துராலோசனைச்செயல்களையெல்லாம் கூறுகையில், சல்லியன், துரியோதனன் தன்னை யேமாற்றித் தன்பக்கத்திற் சேர்த்துக்கொண்டதைத் தெரிவித்துச் செல்லல்.

அரசர்க்கடைவேயவையின்கணவையனைத்து
முரசக்கொடியோனயமாகமொழிந்தபோது
விரைதுற்றுதார்ச்சல்லியன்முன்புவிளைந்தவெல்லாம்
பரசுற்றகன்றான்பிழைகொன்றபகடுபோல்வான்.

(இ - ள்.) அவையின்கண்-சபையிலே, அரசர்க்கு-(விசாரிக்கவந்த பாஞ்சாலர்முதலிய) ராஜாக்களுக்கு, அடைவே-முறைமையாக, அவை அனைத்து உம் - (துரியோதனனுடைய) அந்தத்துராலோசனைச் செயல்களையெல்லாம், முரசம் கொடியோன் - முரசவாத்தியத்தைக் கொடியின்கணுடையவனான தருமபுத்திரன், நயம் ஆக-இனிமையாக, மொழிந்த போது-சொன்ன காலத்திலே,—விரை துற்று தார் சல்லியன் - நறுமணம் நெருங்கிய மாலையையணிந்த சல்லியனென்பான், பிழை கொன்ற - (தன்) குற்றத்தினால் தீங்கிழைத்த, பகடு போல்வான் - ஆண்யானைபோல்பவனாகி, முன்பு விளைந்த எல்லாம் - முன்னே நடந்தஎல்லாவற்றையும், பரசுற்று - சொல்லிவிட்டு, அகன்றான் - அப்பாற்சென்றான்; (எ - று.)

தான் முன்னமே யாராய்ந்திருக்க வேண்டியதாகவும் அங்ஙன் செய்யாமையால், சல்லியனை, 'பிழைகொன்ற பகடுபோல்வான்' என்றது: இனி, பிழைகொன்ற - அரவக்கொடியோனால் முன்பு நிகழ்ந்ததைத் தெரிவித்தலால் தன் குற்றத்தைப் போக்கிக்கொண்ட, பகடுபோல்பவனான சல்லியன் என்று உரைத்தலும் உண்டு. (உரு)

26.—சல்லியன் துரியோதனனுக்கே உதவிபுரிபவனாதல்.

கரடக்கடவெங்களியானைகவனமான்றேர்
துரகப்பதாதிப்படைதம்மொடுஞ்சூழ்ச்சியாக
விரகிற்புகுந்துநெறியின்கண்விருந்துசெய்த
வுரகக்கொடியோற்கரும்போரிலுதவிசெய்வான்.

(இ - ள்.) கரடம்-கரடத்திலே, கடம்-மதநீரையுடைய, வெம்-வெம்மையான, களி யானை - மதக்களிப்புள்ள யானையும், கவனம் மான் தேர் - விரைந்துசெல்லும் விலங்காகிய குதிரைபூட்டிய தேரும், துரகம் - குதிரையும், பதாதி-காலாளும்ஆகிய, படைதம்மொடுஉம்-நால்வகைச் சேனைகட்கும், சூழ்ச்சிஆக - (முன்னமே செய்த)ஆலோசனையின்படி, விரகின் - தந்திரமாக, புகுந்து - வந்து, நெறியின்கண் - (தருமனைக்குறித்துத் தான்செல்லும்) வழியிடையே, விருந்து செய்த—, உரகம் கொடியோற்கு - பாம்புக்கொடியையுடையவனான துரியோதனனுக்கு, அரும் போரில் - மகாயுத்தத்தில், (சல்லியராசன்), உதவிசெய்வான் - துணைபுரிபவனானான்; (எ - று.)

கரடம் - யானைக்கவுளினின்றும் மதநீர்பாயுந்துளை: யானையின் கவுளில் மதநீர்பெருகுஞ்சுவடுமாம். சேனைகளுடன் தருமனைநோக்கிச் சல்லியராசன் வாராநிற்கையில் இடைவழியே மிகவும் இளைப்பையடைந்த வேளையில் இன்னார் உதவிபுரிபவரென்று தெரியாது விருந்துசெய்துவிட்டுப் பின்னர்த் துரியோதனன் செய்தவிருந்து என்று தெரிவித்ததனால், 'விரகிற்புகுந்து நெறியின்கண் விருந்துசெய்த உரகக்கொடியோன்'என்றார். படைதம்மொடும் என்பதைஉருபுமயக்கமாகக்கொள்ளாமல் 'படைதம்மொடும் புகுந்து' எனக் கூட்டியுரைத்தலும் ஒன்று. (உசு)

27.—சல்லியன் துரியோதனனுக்கு உதவியாவதைப்பற்றிய கவிக்கூற்று.

நஞ்சோடுசாலுமமரின்கணமர்களென்று
நெஞ்சோடிபைந்ததுணையென்றுநினைத்தல்செய்யார்
செஞ்சோறுசாலவலிதென்றுமண்செப்பும்வார்த்தை
வெஞ்சோரிவேலானிலையிட்டனன்மீண்டுமீண்டும்.

(இ - ள்.) (வீரர்),—'நஞ்சோடு சாலும்-விஷத்தோடு ஒப்பிடத்தக்க [உக்கிரங்கொண்டு கொல்லுந்தன்மையுள்ள], அமரின்கண் - போரிலே, நமர்கள் என்றுஉம் - (இவர்) நம்மைச்சேர்ந்தவரென்றும், நெஞ்சோடு இயைந்த துணை என்று உம் - மனத்தோடொத்த நண்பர்என்றும், நினைத்தல் - எண்ணுவதை, செய்யார்-: (அவ்வீரர்கட்கு), செம் சோறு - செவ்வியசோறு [தக்க காலத்திலளிக்கும் உணவே], சால வலிது - மிக்கவலிமையை யுடையது', என்று—, மண் - இவ்வுலகத்தவர், செப்பும் - சொல்லுகின்ற, வார்த்தை - வார்த்தையை, வெம் சோரி வேலான்-கொடிய இரத்தம் படியப்பெற்ற வேற்படையை யுடையவனாகிய சல்லியன், மீண்டுஉம் - மறுபடியும், ஈண்டுஉம் - இப்போதும், நிலையிட்டனன் - நிலைப்படுத்தினன்; (எ - று.)

மாமனும் தக்கதுணைவனுமாக இருந்தும், சல்லியன், பாண்டவர்க்குப் போர்த்துணையாகாது வழியிடையே இளைப்புக்காலத்திற் சோறிட்ட காரணத்தால் துரியோதனனுக்கே போர்த்துணைவனானதால், 'வீரர்க்கு நமர்துணையென்பதுவேண்டா: செஞ்சோறேவலிது'என்று உலகத்தார் சொல்லும்வார்த்தையை இப்போது மீண்டும்நிலையிட்டவனானவன். (உஎ)

28.—விராடராசன் உத்தரையை அபிமனுக்கு மணஞ்செய்வித்தல்.

ஓமஞ்செய்தீயிற்பொரிசிந்தலினுற்றவாசத்
தூமங்கமழப்பலவாசத்தொடையல்சூட்டிக்
காமன்றிருமைத்துனற்கன்பொடக்கன்னிதன்னை
மாமன்றலங்கேபுரிவித்தனன்மச்சர்கோமான்.

(இ - ள்.) ஓமம் செய்-ஓமஞ்செய்யப்படுகின்ற, தீயின் - அக்கினியிலே; பொரி சிந்தலின்-பொரியைச் சிந்துவதனால் [லாஜஹோமஞ் செய்வதனால்], உற்ற - பொருந்திய, வாசம் - வாசனைகொண்ட, தூமம் - புகை, கமழ - எங்குநறுமணம்வீசாநிற்க,— காமன் திருமைத்துனற்கு - காமனுடைய அவதாரமான பிரத்யும்நனுக்கு மைத்துனனான அபிமந்யுவுக்கு, அ கன்னி தன்னை - அந்தஉத்தரையென்ற கன்னிகையை, வாசம் பல தொடையல் சூட்டி - நறுமணமுள்ள பலமலர்மாலைகளையணிவித்து, அன்பொடு - அன்புடனே, மா மன்றல் - சிறந்தவிவாகத்தை, அங்கே-அவ்விடத்தில், மச்சர் கோமான் - விராடன், புரிவித்தனன்—; (எ - று.)

ஸ்ரீக்ருஷ்ணனுக்கு உடன்பிறந்தவளாகிய சுபத்திரைக்கு மைந்தனான அபிமந்யு அந்தக்ருஷ்ணன்மகனான ப்ரத்யும்நனுக்கு அத்தைமைந்தனாவனாதலால், அவனை, 'காமன்திருமைத்துனன்' என்றார். தூமம்புடைசூழ்புவிவேந்தர் தொடையல்சூழ என்றும் பாடம். (உஅ)

29.—பாண்டவர் காளிக்குப் பலிகொடுத்து முன்வன்னிமரத்துவைத்த படைக்கலங்களை மீட்டுங்கொள்ளுதல்.

முன்னிச்சமருக்கொருப்பட்டமுடிமகிபர்
கன்னிக்குவேண்டுங்கடனானபலிகணல்கி
வன்னிப்பொதும்பர்வயின்வைத்தவயங்குசோதி
மின்னிற்றிகழ்வெப்படையாவையுமீண்டுகொண்டார்.

(இ - ள்.) முன்னி - ஆலோசித்து, சமருக்கு ஒருப்பட்ட - (எந்தவகையிலும் சந்திக்கு இணங்காவிட்டால்) போர்செய்யுமாறு சம்மதித்த, முடி - கிரீடங்களையணிந்த, மகிபர்-அரசர் [பாண்டவர்],— கன்னிக்கு-காளிகாதேவிக்கு, வேண்டும்-இன்றியமையாத, கடன் ஆன -முறைமையான, பலிகள்-உயிர்ப்பலிகளை, நல்கி - கொடுத்து,—வன்னி பொதும்பர்வயின் - வன்னிமரத்தின் பொந்திலே, வைத்த - (அஜ்ஞாதவாசஞ்செய்வதற்கு முன்னே) வைக்கப்பட்ட, வயங்கு சோதி மின்னின் - விளங்குகின்ற ஒளியையுடைய மின்ன

லைப்போல, திகழ் - விளங்குகின்ற, வெம் படை யாவையும் - (தம்முடைய வான) கொடிய ஆயுதங்களையெல்லாம், மீண்டு - மறுபடியும், கொண்டார் - எடுத்துக்கொண்டார்கள்; (எ - று.)

நாடகரந்துறைசருக்கத்து 9, 10 - பாடல்களால், காளிகோயிலையடுத்த வன்னிமரத்தின்பொதும்பரில் பாண்டவர் தம்படைக்கலங்களைச் சேமித்து வைத்தமை விளங்கும். (உக)

30.—அபிமந்யுவின் விவாகம் முடிந்தபின் க்ருஷ்ணனும் பாண்டவரும் மற்றையாவரும் உபலாவியத்திற்புகுந்து போர்க்குவேண்டுவன ஆராய்தல்.

சேயோன்விழவுவிழைவோடுசிறந்தபின்னர்
மாயோனுமற்றக்குருமைந்தருமன்னர்யாரும்
போயோதைவிதியுபலாவிபுகுந்துதங்க
ளாயோதனத்துக்குறுநீர்மைகளாயலுற்றார்.

(இ - ள்.) சேயோன் - (அபிமந்யுஎன்ற) குமாரனுடைய, விழவு - கலியாணம், விழைவொடு - (யாவரும்) விரும்பும்வண்ணம், சிறந்த பின்னர் - சிறக்கநடந்தபிறகு,— மாயோன்உம் - ஸ்ரீக்ருஷ்ணனும், அ குருமைந்தர் உம் - அந்தக் குருகுலகுமாரரான பாண்டவர்களும், மன்னர்யார்உம் - (பின்னும் தமராகவும் நண்பராகவுமுள்ள) அரசர்யாவரும், போய் (அவ்விராடநகரத்தை)விட்டுச்சென்று,ஓதை வீதி-பலவகை யோசைகளையுடைய வீதியைக் கொண்ட, உபலாவி புகுந்து-உபப்லாவியத்திற்புகுந்து, தங்கள் ஆயோதனத்துக்கு - தாம்செய்யக்கருதிய பெரும்போர்க்கு, உறும் - வேண்டிய, நீர்மைகள்-தன்மைகளைக்குறித்து, ஆயல் உற்றார்-ஆராய்தற்குப் பொருந்தினார்கள்.

சேயோன்-முருகக்கடவுள்: இச்சொல்-குமாரன்என்பதுபோல, மைந்தனென்ற பொருளைக் காட்டிற்று. உபலாவி - உபப்லாவ்யம் என்றவடசொல்லின்திரிபு: இது, விராடநகரத்துக்கு மிக அருகிலுள்ளதாகும். மற்று-அசை. மாயாக்குருமைந்தரும்என்றும், போயோசையோடும் என்றும் பிரதிபேதம் ()

வெளிப்பாட்டுச் சருக்கம் முற்றிற்று.

---

விராடபருவம் முற்றுப்பெற்றது.



## விராடபருவத்தின்

# அபிதான சூசிகை யகராதி.

அசுவத்தாமன் - துரோணன் குமாரன், நிரை-82, 89, 95

அபிமன் - கிருஷ்ணன் தங்கை புதல்வன், வெளி-17: காமன்றிருவமைத்துனன், 28

அருச்சுனன் - சுரபதிமகன், நாடு-3: உருப்பசிசாபத்தாற் பேடிவடிவந்தரித்தான், ஆண்மைக்கு இமையவரெவரினும் பெரியோன், 17: அம்பிகாபதிபாற் றவத்தால் பல சுடுகணைபெற்றவன்: அமரரை அவுணருக்காக வென்றவன்: பொற்றருயலர்வேய்ந்தவன், நிரை-50: கொடியின் மீது அனுமனெழப்பெற்றவன்: 58: சுவேதப்பரிமா இவனுக்கு, 65,80,101: துரோணனையாசிரியனாகப் பெற்றவன், 88: குருவைத் தப்பாக் குருகுலக்கோ, 91: கவுரிபங்காளனைக் கண்ணுறக்கண்டவன், 99: கனற்கடவுடந்ததேரோன், 101: திங்களமுதுகமவுலியிற் சிவனைப் புடைத்த வில்லான், 102: விசயனென்ற பெயர் மிக்க செயத்தை யுடையவனென்றும் தன்னை வெல்பவரை யில்லாதவனென்றும் பொருள்படும்: இது, அருச்சுனன் பெயர்களில் ஒன்று, நாடு-22, நிரை-45: கிரீடியென்று, ஒருபெயர், நிரை - 43: நரநாமன், 60: இவன் வேறுநாமங்கள்-தனஞ்சயன், பற்குனன், நிரை - 85: தன்னை நிகர்கிற்பவரில்லாத் தனுவல்லோன், வெளிப்-4

உத்தரன்-விராடன் குமரன், நிரை-25: சுதேட்டிணை பிள்ளை, 33: இராகவன் றிருக்குலத்திளைஞன், 35

உத்தரை-விராடன் புத்திரி, நாடு-20, நிரை 102

உதிட்டிரன்=யுதிஷ்டிரன்: இது, தருமன் பெயர்: நாடு - 12, நிரை-87: மற்றைவிவரங்களைத் தருமனைப் பார்க்க.

உபலாவி-உபப்லாவ்யம்; விராடன் பாண்டவர்பொருட்டுக் கொடுத்ததும் அவனூருக்கு அருகே இருப்பதுமான நகரம், வெளிப்-30

கிருஷ்ணன், வெளிப்-17

கங்கன்-அஜ்ஞாதவாசகாலத்தில் தாபதவடிவுகொண்டபோது தருமன் புனைந்துகொண்ட பெயர், நாடு-11, நிரை-129

கர்ணன்-இரவிமைந்தன், நிரை-7, 82: சூரன்மாமகன்: சூரனிற்சூரன்-53: கற்பகநிகர் கொடையான், 75: அங்கர்கோன்-80

காளி - விராடநகரத்திலுறைபவள், எழுவகைத்தாயரிலொருத்தி, சாமள வடிவினள், சங்கு தண்டு கையிற்றரிப்பாள், யாமளமறையால்யாவராலும் பணியப்படுபவள், மூத்தலை வடிவேலுடையாள்: நாடு-9, 10

கிருபன், நிரை-86,97

கீசகர் - நூற்றொருநால்வர்: சுதேட்டிணை துணைவர், கீசக-1: 102

கீசகன்-விராடன் சேனைத்தலைவன், உபகீசகர் நூற்றுமூவர்க்கு அண்ணன், மிக்க அழகியான், கீசக-1: சுதேட்டிணை தம்பி, 2: அறம்பாவமென்றெண்ணலான், 11: குருட்டியல் மதியினன், 60: மண்ணுடைக் காவலன் மைத்துனன், 72: சண்டவேகக்களிறன்ன தன்மையான், 90: பழுதுடைப்பெரும்பாதகன், 95.

சகுனி-சூதாடிப் பாண்டவர் காட்டிற் செல்லக் காரணமானவன், நாடு-32: சுபலன் புதல்வன், கீசக-50

சயந்திரதன்-சிந்துராசன், நிரை-98

சல்லியன், வெளிப்-25, 27

சாதேவன்=சகதேவன்: நகுலன் தம்பி, நாடு - 27: ஆயுண்மறைவானவர் மகன், வெளிப்-3

சிவேதன், வெளிப்-17, 19: விராடன் புதல்வன், 20

சுதேட்டிணை-சுதேஷ்ணை: விராடன் மனைவி, நாடு-35: கீசகர் இவள் துணைவர், கீசக-1: நரைத்தவோதியள், நிரை-29

சுயோதனன்-அரவவெங்கொடியோன், நாடு-2: மந்தாகினிமைந்தன் மகன்மைந்தன், நிரை-5: தக்கோர்

விராடபருவத்தின்

# அருப்பதவகராதி முதலியன.

சரித்திரம், கீசக 57
சாபலம் - நிலைத்தில்லாத் தன்மை, நிரை-95
சாமளம்-கருநிறம், நாடு-9
சாய்த்து-வணக்கி, நாடு-18
சாயல்-தோற்றம், கீசக-10: நிறம், கீசக-21
சாரி, மற்-6
சிக்கென-அழுத்தமாக, 131
சிங்கசாபம்-சிங்கக்குட்டி, வெளிப்-20
சிந்தனை-கவலை, வெளிப்-8
சிந்தை-மனம், கீசக-3
சிலம்பு-மலை, மற்-11
சிலீமுகம்-அம்பு, நிரை-38
சிலை-வில், நாடு-17
சிவப்பு-வெகுளி, செந்நிறம், கீசக-46
சினம் பாவம், நிரை-128
சீர்-நிலைமை, கீசக-51
சூதன், வெளி-15
சுதை, கீசக-94
சுரதம்=ஸுரதம், புணர்ச்சி: கீசக-10
சுரபதி-இந்திரன், நாடு-3
சுரபி-பசு, நிரை-27
சுரர்-தேவர், நிரை-1
சுரர்நாள் ஓரியாண்டு, நிரை-3
சுருதி-வேதம், நாடு 2
சுரேசர், கீசக-7
சுவாலைசெய்தல், கீசக-86
சுவேதம்-வெண்மை, நிரை-80
சுளித்தல்-வெகுளல், நிரை-49
சூரியன் தரங்கமோரேழுடையான், கரங்களாயிரமுடையான், கீசக-22: உருளையொன்றுடைத் தேரவன், கீசக-32: பச்சைவாசியினன், நிரை-65: மேருவை வலம்வருகின்றான், கீசக-46
சூரியாத்தமனம், நிரை-21
சூல்-கரு, நிரை-57
சூழல்-நாடு, நிரை-7
சூறை, கீசக-77
சூறைமாருதம்-சுழல்காற்று, கீசக-32
செஞ்சோறு, வெளிப்-27
செஞ்சோற்றுக்கடன், நிரை-90
செம்மல்-தலைவன், நாடு-28, கீசக-74
செரு-போர், நிரை-10
செருக்கு-வளம், நாடு-38
செருமுதல்-நெருங்குதல், நிரை 62
செல்வம்-பணம், போவோம், நாடு-6
செவ்வி-அழகு, கீசக 63
செறுதல், மற்-12
சேயொளி, நாடு-18
சேயோன்-குமாரன், வெளிப்-30 [24
சைத்தியோபசாரப் படுக்கை, கீசக-
சோல்-பாவை, மற்-1
சொற்படிவெல்வது விதிக்குங் கூடாது, நிரை-84
சோகம்-துயரம், கீசக-11
சோரர்கருவைத் தங்கருவென்றெண்ணும் அறிவிலார் × அருச்சுனன் வெற்றியை உத்தரன் வெற்றியாகக் கருதும் விராடன், நிரை-117
சோரன் - வஞ்சக்குணமுடையவன், கீசக-7, 104
சோரி-இரத்தம், நிரை-42
ஞெண்டு, நிரை-11
தகவு-திறமை, நாடு-20: சிறப்பு, 31: நற்குணம், கீசக-7
தகை-பெருமை, நாடு 28
தகைமை-பாராட்டு, நாடு-13
தடம்-நீர்நிலை, நாடு-8
தண்டு-கதாயுதம், நாடு-14: சேனை, நிரை-54
தத்தி-தாவி, மற்-6
தந்தி-யானை, நிரை-51
தபோதனத்தவர், நாடு 6
தம்முன்-அண்ணன், நாடு-15
தரம்-மேன்மை, நிரை-31
தருக்கு-மனமேம்பாடு, நாடு-21
தருக்குதல் - செருக்குக்கொள்ளுதல், கீசக-21
தலைமகன்-சிறந்தகுணமுள்ள மகன், மேலோன், கீசக-55
தவர்-வில், நிரை-100
தவளமாடம், கீசக-64
தற்கு-செருக்கு, கீசக-103
தனு-வில், நாடு-14
தாக்கிய-வருத்திய, கீசக-26
தாது-பூந்துகள், நிரை-4 [11
தாபதவடிவு-சந்நியாசிவேஷம், நாடு-
தாமம்-ஒளி, பூமாலை, கீசக-25: ஒழுங்கு, நிரை-14
தாமரைவளையம், கீசக-24

தாரணி-பூமி, சீசக-4
தாழ்தல்-இழிதல், நிரை-7: தொங்கு 'தல், நிரை-64
தாறு-குதிரைமுதலியவற்றைச் செல் லுமாறு முடுக்குங் கோல், நிரை-94
திகிரி-சக்கரம், நிரை-73
திண்டிறல், நாடு-14
திருந்தவை, மற்-3
தினகரன், நாடு-6
தீரம்-தைரியம், சீசக-80
துடைப்பரும்பவனம், சீசக-99 [35
துண்ணெனல்-அச்சக்குறிப்பு, நாடு-
துணைவர்-தம்பிமார், நாடு-3
துணைவி-உடன்பிறந்தாள், சீசக-1
துதைவு நெருக்கம், மற்-10
துரங்கம்-குதிரை, நாடு-25
துரிசு-குற்றம், சீசக-50
துரியோதனனை விட்டுக் கன்னன்மே ற்செல்லும் அருச்சுனன் × களிற் றைவிட்டு அரிமேலோடும் யாளி, நிரை-77
துரோணன் விசயனேடு கற்பதற் குன்னினன், நிரை-93
துன்னலன்-பகைவன், நிரை-21
தூசி-சேனை, நிரை-11
தூதுளங்கனிவாய், சீசக-8
தெரிவை, சீசக 3
தெருமரல்-மனச்சுழற்சி, சீசக-47
தெவ்வர்-பகைவர், நிரை-9
தென்புலம், வெளிப்-12
தென்னிடுதல், நிரை-98
தேவி-அரசி, சீசக-38
தொடை-தொடுப்பு, நிரை-48
தொடையல்-மாலை, சீசக-23
தொய்யில், சீசக-89
தொறு-நிரை, நிரை-7
தோடு-பூவிதழ், நிரை-4 [46
தோன்றல் புதல்வன், நாடு-3, சீசக-
நகம்-மலை, நிரை-17 [நாடு-19
நடனம் நாதமுமியலும் மேதகுவது, நடு, நிரை-115
நயனநீர், சீசக-11
நரர்-மனிதர், நிரை-1
நலம்-அழகியகோலம், நாடு-36
நவ்வியர், சீசக-63
நவிற்றுதல்-சொல்லுதல், நாடு-19

நன்மை-சுகிருதம், நாடு-13
நாசகாலம்வரும்போ தாண்மையும் ஞானமுங்கெடும், சீசக-14
நாதம்-சங்கீதம், நாடு-19
நித்திலம்-முத்து, நிரை-11
நிதி-செல்வம், நாடு-4
நிரக்கும்-பொருந்திய, நிரை-77
நிருத்தம், நாடு-17
நிருமித்தல்-நியமித்தல், நிரை-10
நிரை-பசுக்கூட்டம், நிரை 2
நீராசனமெடுத்தல், நிரை-131
நூபுரம்-ஓர்காலணி, சீசக-2
நென்னல்-நேற்று, நிரை-106
நேமியொன்றுடையதேர் சூரியனது, நிரை-34 (நேமி சக்கரம், நாடு 1)
நேயமோடு-அன்போடு, சீசக-52
நேர்படுதல்-எதிராகநிற்றல், சீசக-52
நொதுமலினள்-சாதாரணமான மானிடவள், நாடு-30
நோக்குதல்-தென்படுதல், சீசக-26
பங்கயம்-தாமரை, நாடு-1
பச்சைவாசி, நிரை-65 [57
பசுக்களின் தன்மை நவிற்சி, நிரை-
பஞ்சபாதகம், நிரை-88
படர்-துன்பம், சீசக-34
படி-பூமி, சீசக-13
பண்செய்தல் - அலங்கரித்துச் சித்த மாக்குதல், நிரை-10
பண்ணுக்குருகிப்பறையாலகப்பட்ட மான், வெளிப்-24
பண்ணை-வயல், நாடு-7
பணி-சாபம், நாடு-17
பணை-பருமன், மற் 13
பத்தரையொடீரரைகொள்பல்படை, வெளிப்-14
பதங்கம்-விட்டில், நிரை-138
பதயுகம்-தாளிணை, மற் 10
பதாகைத்தூசு, நிரை-136
பதுமம், நாடு-30
பதி-ஊர், நாடு 5 [நாடு-6
பயிற்றுதல் - பலமுறைசொல்லுதல்,
பரகாய சரிதர், நிரை-141
பரவை-கடல், நிரை-107
பராகம்-தூசி, நிரை-141
பராரை, மற்-9 [வெளிப்-23
பரிதாபம் - வருத்தம், சீசக - 54,

பரிதி-சூரியன், நாடு-11
பரிவு-அன்பு,நாடு-2: நிரை-28: துன்பம், கீசக-14
பல்லியசாலம் - வாச்சியக் கூட்டம், நிரை-11
பலம்-பழம், நாடு-2
பலவகையொலியால் பொறிமயக்குறுதல், நிரை-63
பலவகையோதைகேட்டல், கீசக-88
பலியிடுதல் - உயிரைக்கொள்ளுதல், கீசக-106
பவனன்-காற்று, நாடு-14
பவுரி, நிரை-99
பனி புதைத்தலிற் பரிதி தன்னுருவ மொடுங்குதல் × சாபத்தால்வந்த பேட்டுருவால் அருச்சுனன் தன்னுரு ஒழிந்திருத்தல், நிரை-60
பாக்கியம், கீசக-26
பாகை-வக்கபாகை. நிரை-104
பாங்கி-தோழி, நாடு-20
பாங்கு - இனிமை, நாடு-28: பக்கம், நாடு 5
பாசகாரிகள், கீசக-14
பாசடை, நாடு 2
பாணி-கை, மற்-10
பாதமில்வன்றிறற்பாகன், கீசக-20
பாதவம் மரம், நாடு-9
பாந்தள்-பாம்பு, கீசக-52
பார்க்க-எண்ண, கீசக-106
பாரியது-சிறப்புற்றது, (பருமை என்ற பண்பினின்று தோன்றியசொல் இது.) கீசக-36
பாவனை-நடிப்பு, நிரை-61
பிணங்கலனணிந்ததன்ன பேரெழிற் பெற்றியான், கீசக 65
பிரமமூர்த்தி, நிரை-122
பிறர்தாரமானவர்முகத்தை வசையிலாதவர் மாளினும் பாரார், கீசக-7
புகர்-புள்ளி, கீசக 2
புரசை-கழுத்திடுகயிறு, கீசக-50
புரந்தரன்: நிரை-130
புரவி-குதிரை, நாடு 16: புரவிபேதம், நாடு-26
புரிசை-மதில், நாடு-8
புளகு, நிரை-117
புறந்தருதல், நிரை-70
புறவு-கொல்லை, நாடு-7
பூசல்-போர், நிரை-112
பூபதி-அரசன், நாடு-27
பூபாலன்-அரசன், நிரை-12
பூரணகும்பம், நிரை-118
பூரியர்-கீழ்மக்கள், கீசக-42
பூழி-புழுதி, கீசக-40
பேட்பேறுதல் - போர்விருப்பத்தால் நான் முன்னேயென்று புறப்படுதல், (பெட்பு-விருப்பம்,) நிரை-12
பெற்றம்-காற்று, நிரை-42
பேடி, நாடு-17
பேதுறும்-கலங்கிய, கீசக-9
போங்கர்-சோலை, கீசக-64
பொதும்பர்-மரப்பொந்து, நிரை-42
பொருந்தார்-பகைவர், கீசக-49
பொருநன்-வீரன், கீசக-104
பொறுப்பதேபெருமை, செறுப்பது பெருமையன்று, நிரை-134
பொறை ஆடவர்க்குப்பூண், கீசக 49
பொறை யுடையவர்க்கலது புகழ் புனைதலுண்டோ, வெளிப்-10
"பொறையெனப்படுவது"(கீசக-49) என்ற பாடலின் கருத்துக்கொண்ட ஸ்லோகம் ஸிஸுபாலவதத்து வருமாறு:—அந்யதா ஹ்யஷணம் பும்ஸாம் - ஸமோலஜ்ஜேவயோஷிதாம் | பராக்ரமபரிஹவே - வையாத்யம்ஸுரதேஷ்விவ ‖ 2-44 ‖
பொன்றுதல் - அழிதல், கீசக-39
போதகம்-யானைக்கன்று, நாடு-16
போதல்போதும், நிரை-71
போனகம்-உணவு, நிரை-50
மகபதி, நிரை-62
மகவான்வாளி, நிரை-100
மகளிர்க்கு நாணம்பூண்: என்றுலும் அமளியில் நாண் நிகழ்வுறு நிகழ்ச்சிப் பெரும் பூண், கீசக-49
மகுடபங்கம், நிரை-104
மங்குல்-மேகம், கீசக-68
மடல்-இதழ், கீசக-4
மடையர்-சமையல்செய்வோர், மற் 8
மடையன், நாடு-14
மண்டலநிலை, நிரை-67
மண்டலம்-பூமண்டலம், வட்டமாகச் செல்லுங்கதி, நாடு 14, 24

மத்தகம்-யானையின் சென்னியிற் கு டம்போன்றிருக்கும்உறுப்பு, கீசக-50
மத்தர், நிரை-102
மத்திகை-மர்ஜிகா, குதிரைச்சம்மட் டி, நாடு-21
மதலை-புதல்வன், நாடு-17
மதனவேதம், கீசக-14
மதி-சந்திரன், நாடு - 25: குபேரன், நிரை-100
மதிசூழ்ந்த மீனினம் × துரியோதன னைச் சூழ்ந்த படை, நிரை-35
மந்தாகினிமைந்தன், நிரை-6
மந்துரை=மந்துரா: குதிரைச்சாலை, நாடு-23
மயற்கை-காமமோகம், கீசக-3
மயிர்சொய்தல், நிரை-102
மரபு-குலம், கீசக-22
மராமரம், கீசக-86
மருங்கு-இடை, மற்-12:
மருச்சகன்-அக்கினி, கீசக-51
மருத்து-காற்று, கீசக-51
மல்-ஆயுதமின்றி உடல்வலிமைகொ ண்டு செய்யும் போர், மற்-1
மலநெஞ்சுடைப் பூசகர் பூசைகொளா த கடவுள், கீசக-71
மலரோடை × விராட மன்னன், நிரை-9
மற்போர், மற்-11
மறலிவாளி, நிரை-100
மறுகிட-கலங்க, கீசக-40 [10
மறை-வேதம், நாடு-1: மந்திரம், நாடு-
மன்பதை-மனிதவர்க்கம், கீசக-43
மன்றல்-நறுமணம், கீசக-12: மணம், புணர்ச்சி, கீசக-23
மன்னர் ஏதிலர்தமரென இரண்டு பாரார், கீசக-41
மன்னர் தீத்தொழில் புரிஞரைத்தெ ண்டியாவிடின் நீதியுஞ் செல் வமும் நிலைபெறா, கீசக-41
மன்னவையிருந்து வழிபடுவோர் செ ய்ய வேண்டுவன, நிரை-123
மனத்துனி, நிரை-134
மா-பெரிய, நிரை-5: மிருகம்,நிரை-1
மாகுதப்பிய அரி × தப்பியோடுஞ் சு யோதனன்,(மாகு-வலை,)நிரை-69
மாதர் இந்திரற்கும் எளிமையி னொரு ப்படார், கீசக-58
மாதிரம்-திக்கு, நாடு-4
மாரசாயகம், கீசக-7
மால்பெறுஞ் சிறப்பு - அருச்சுனனுக் குப் பாகனாதல், நிரை-46
மாவிடுதொழில், நிரை-63
மிடறு-கழுத்து, மற்-12
மிண்டுவீர்-நெருக்குவீர், நிரை-54
மிலைச்சுதல்-அணிதல், நிரை-8
மின்னுடன் மின்மினிவெருளுதல் × கர்ணன் அருச்சுனனோடு இகலு தல், நிரை-76
மீளிமை, நிரை-86
முகம்-தோற்றம், நிரை-19
முகம்புகுதல், கீசக-70
முடி-சிகரம், நிரை-58
முடுகி, மற்-6
முத்தவாணகை, கீசக-8
முத்துப்பிறக்குமிடம் பலவற்றுள் சங்குமொன்று, நிரை-11
முந்தை-பாட்டன், நிரை-85
மும்மதம், நிரை-130
முயல் தன்னிலத்தில் தந்தியின் வ லிது - "நெடும்புனலுள் வெல்லு முதலை" நிரை-51
முரல்கின்றிடு = நிகழ்காலஇடைநி லைக்குப் பின் துணைவினைவந்த இது அபூர்வமான பிரயோகம்:முர ன்றிடு என்று சாதாரணமாகவரும்: கீசக-4
முருக்கு-பலாசமலர், கீசக-21
முழுப்பூண், கீசக-49
முளரி-தாமரை, கீசக-21 [21
முன்றில்-வீட்டின்முன்னிடம், நாடு-
முன்னி-தியானித்து, நாடு-15 [136
முனை-போர்,நிரை-5: துணிவு,நிரை-
மேருவை வாயுதேவன் கொடுமுடி யொடித்து வென்றது, நிரை-66
மேவலர்-பகைவர், நிரை-42 [13
மைக்கொண்டல்-கார்மேகம், நிரை -
மையல்-காமமோகம், கீசக-5
மோகனக்கணை, நிரை-101
மோகினிக்குயில் - மோகினிப்பெண், கீசக-4 [நாடு-9
யாமளமறை - அதர்வணவேதப்பகுதி,

யாமுடைக்கந்தருவர், சீசக-103
யோனிகள்-பிறவிகள், வெளிப்-1
ரவிகுலதிலகன், நிரை-23
வஞ்சியர் - மகளிர், நிரை-37
வஞ்சினம், நிரை-72
வட்டம்-மண்டலம், மற்-4
வடம்-கயிறு, நிரை-18
வண்டற்பாவை-விளையாடும் பிரதிமை, நிரை-102
வண்ணமகள், நாடு-29
வண்ணமாது கங்கனெற்றிக்குருதி தன்னை மாற்றுதல், நிரை-127
வதனம்-முகம், நாடு-17
வரம்-மேன்மை, சீசக-10
வரி-இரேகை, சீசக-5
வரிசை-சிறப்பு, நாடு-25
வரிசிறமா-புலி, நிரை-69
வரூதினி-சேனை, சீசக-1
வல்-சூது, நிரை-105
வல்லி, சீசக-21
வழக்கு-செல்லுகை; வழங்குஎன்ற முதனிலைதிரிந்த தொழிற்பெயர், சீசக-3
வழங்குதல்-கொடுத்தல், நாடு-25
வழிபடுதெய்வம், சீசக-70
வளை-சங்கு, நிரை-11
வற்றியவோடையன்னவனப்பினாள், நிரை-126
வன்பு-வலிமை, மற்-11
வன்னி-அக்கினி, நாடு-7: ஒருமரம்,9
வனப்பு-அழகு, நாடு-33
வாசவன்-இந்திரன், நாடு-33: மேம்பட்டவன், மற்-1
வாசி-குதிரை, நாடு-23
வாஞ்சா-விருப்பம், வெளிப்-21
வாணுதல், நாடு-30
வாய்மை-உண்மைச்சொல், நாடு-13
வார்-நீர், நிரை-3: கச்சு, நிரை-70
வான்-மேன்மை, நாடு-22
விடந்திகழ்விழியினாள், சீசக-29
விடலை-இளங்குமரன், நிரை-32
விடவி-மரம், சீசக-34
விடைத்தனன், சீசக-79
வித்தகன்=விதக்ஞன்: வல்லவன், நாடு-20
வித்தரம்-விஸ்தாரம்,பரப்பு, நிரை-31
விதி, வெளிப்-1
விதியை யாவர் விலக்கவல்லார்கள், சீசக-46
விம்பம்-வட்டம், மற்-9
விரகதாபங்கொண்டாரின் படுக்கைத் தன்மை, சீசக-24
விரகு-உபாயம், தந்திரம், நாடு-27
விரதம்-வ்ரதம், விரஸம்,ஒழிவு, நாடு-32
விரதர், சீசக-107
விரவுதல்-சேர்தல், நாடு-8
விராடமன்னன் × மலரோடை, நிரை-9
விரை-வாசனை, நிரை-9
விழவு-விவாகம், 30
விளக்கி-தேற்றி, நிரை-40
விளைவு-விளைச்சல்,பயன்:நாடு-4, 13
வினயம்-வணக்கம், நிரை-7
வீ-மலர், நிரை-129
வீட்டிலுறை உத்தரகுமரன் × கூட்டிலுறை கலுழன்குஞ்சு, நிரை-27
வீமன் திரிகர்த்தன்தேரினை வேறொருதேரால் தகர்த்தல் × வாயுதேவன் நகத்தினை நகத்தினால் நருக்குதல், நிரை-17
வீரியம்-வலிமை, சீசக-36
வெட்சித்தாமம் நிரைகவரச்செல்வாரணிவது, நிரை-8
வெண்டிரை × சேனை, நிரை-61
வெந்தநெய்அரவமடங்க அதில் பால் துளிபெய்ய ஆரவாரித்தல் × ஆன்களை அடித்துக்கொண்டு போனவர் அடங்க, மீட்டவர் ஆரவாரித்தல், நிரை-56
வெரீஇயினள்-அஞ்சினாள், நாடு-35
வெரு-அச்சம், நிரை-19
வெளிசின்றமாற்றம், வெளிப்-17
வேகவற்றியநதி × மந்தநடைப்புரவி: நிரை-68
வேணலம், சீசக-76
வேத்தவை-வேந்துஅவை:ராஜசபை, நாடு 26
வேதியர், நாடு-4
வேலை-கடல், நாடு-20
வேள்-மன்மதன், நாடு-21

## பிழைத்திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ச | 11 | முழுவ:து | முழுதும் |
| எ | 17 | காளிக் | காளி |
| கக | 21 | குறித்து | |
| ,, | 22 | ச் சொல்லிக்கொண்டு | |
| ,, | 24 | என்று- | என்றுகுறித்து- |
| கஅ | 30 | வ:ங்ழகி- | வழங்கி- |
| உச | 22 | (இ - ன்.) | (இ - ள்.) (இவ்வெண்ணம்) |
| ரு௫ | 12 | முடுருதல். | நெருங்குதல். |
| ருக | 22 | ஆததத்து | ஆதரத்து |
| சo | 9 | சுட்டி | சுட்டி- |
| ௬o | 13 | திளெபதி | திரௌபதி |
| ௬எ | 2 | அமுது’ | அமுது, |
| எக | 27 | போன்று | படி |
| அச | 18 | அவள்,— | அவள்—, |
| 121 | 7 | திசையிற் | திறையிற் |
| 127 | 12 | ஶ ஙவ: | ஶாஙவ: |
| 132 | 15 | விழைவொடு | விழைவோடு |

மற்றுங் காணப்படினும் திருத்திக்கொள்க.

---

இதனடியிற் குறித்துள்ள புத்தகங்கள் வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்யர், 17 - தேளிசிங்கப்பெருமாள்கோயில்தெரு, திருவல்லிக்கேணி என்ற விலாசத்திற் கிடைக்கும்:—

| | | | ரூ. | அ. | பை |
|---|---|---|---|---|---|
| **கம்பராமாயணம்:—** | | | | | |
| பாலகாண்டம் | உரையுடன் | ... | 5 | 0 | 0 |
| அயோத்தியாகாண்டம் | ,, | ... | 5 | 0 | 0 |
| ஆரணியகாண்டம் | ,, | ... | 4 | 0 | 0 |
| கிட்கிந்தாகாண்டம் | ,, | ... | 4 | 8 | 0 |
| சுந்தரகாண்டம் | ,, | ... | 5 | 0 | 0 |
| யுத்தகாண்டம், 2-வால்யூம் | ,, | ... | 10 | 0 | 0 |
| **பத்துப்பாட்டு:—** | | | | | |
| திருமுருகாற்றுப்படை ஆராய்ச்சி யுரையுடன் | | ... | 0 | 4 | 0 |
| பொருநராற்றுப்படை | ஷை | ... | 0 | 4 | 0 |
| பெரும்பாணாற்றுப்படை | ஷை | ... | 0 | 8 | 0 |
| முல்லைப்பாட்டு | ஷை | ... | 0 | 3 | 0 |
| நெடுநல்வாடை | ஷை | ... | 0 | 6 | 0 |
| பட்டினப்பாலை | ஷை | ... | 0 | 6 | 0 |
| நாலடியார் உரையுடன் | | ... | 2 | 0 | 0 |
| **சிலப்பதிகாரம்:—** | | | | | |
| அடைக்கலக்காதை உரையுடன் | | ... | 0 | 2 | 0 |
| கடலாடுகாதை | ஷை | ... | 0 | 4 | 0 |
| நன்னூற்காண்டிகையுரை | | ... | 1 | 8 | 0 |
| திருக்குறள் அறத்துப்பால் பரிமேலழகருரையுடனும் அதற்குக் குறிப்புரையுடனும் | | ... | 1 | 8 | 0 |
| ஷை பொருட்பாலும் காமத்துப்பாலும் | ஷை ஷை | ... | 3 | 8 | 0 |
| திருக்குறள் மூன்றுபால்களும் உயர்ந்த கட்டணத்துடன் | ஷை. ஷை | ... | 5 | 0 | 0 |
| **வில்லிபாரதம்:—** | | | | | |
| ஆதிபருவம்உரையுடன் | | ... | 2 | 0 | 0 |
| சபாபருவம் உரையுடன் | | ... | 3 | 0 | 0 |
| ஆரணியபருவம் உரையுடன் | | ... | 2 | 0 | 0 |
| விராடபருவம் உரையுடன் | | ... | 1 | 8 | 0 |
| உத்தியோகபருவம் உரையுடன் | | ... | 2 | 8 | 0 |
| வீட்டும துரோண கன்ன பருவங்கள் உரையுடன் | | ... | 3 | 8 | 0 |
| சல்லியசௌப்திக பருவங்கள் உரையுடன் | | ... | 1 | 8 | 0 |
| சடகோபரந்தாதி உரையுடன் | | ... | 0 | 12 | 0 |
| திருப்பாவை உரையுடன் | | ... | 0 | 6 | 0 |
| சரசுவதியந்தாதி உரையுடன் | | ... | 0 | 4 | 0 |
| திருவேங்கடக்கலம்பகம் உரையுடன் | | ... | 0 | 10 | 0 |
| அழகர்கலம்பகம் உரையுடன் | | ... | 0 | 10 | 0 |
| அஷ்டப்ரபந்தம் விரிவுரையுடன் | | ... | 4 | 0 | 0 |
| மதுரைக்கலம்பகம் உரையுடன் | | ... | 0 | 10 | 0 |
| முதுமொழிக்காஞ்சி உரையுடன் | | ... | 0 | 4 | 0 |
| நாலாயிரதிவ்யப்ரபந்தம் | | ... | 3 | 8 | 0 |
| **வசனம்.** | | | | | |
| இந்தியபுராதனகதை | | ... | 0 | 6 | 0 |
| உதயணன் சரிதை | | ... | 0 | 12 | 0 |
| சந்திராபீட சரிதம் | | ... | 0 | 5 | 0 |